

ஆயிரம் கலைமகளின்
அவதாரமாகிய
புலவர்கள் நாயகம் அவர்கள்
சரித்திரத்துடன்

# பூபதி நாயகம்

என்னும் ஸ்ரீகுரு
ஞானபூபதிகள் சரித்திரச் சுருக்கம்
அனேக நீதிகள், அற்புதங்கள், ஆத்மார்த்த
ரகசியமான உயரிய பிரசங்கங்களுடன்
அடங்கியது.



கருணாநிதியின் கருணை புஷ்பம் 2.

நாடெங்கும் அன்புமார்க்க தாபிதரும்,

கமுதி அனாதரட்சக ஆலய தாபித தருமகர்த்தருமான

திருவாரூர்

மௌலானா ஸ்ரீகுரு ஞானபூபதிகள்

சரித்திரச் சுருக்கமாகிய

# பூபதி நாயகம்.


இஃது

நாகூர் பேராசிரியர்

G. M. அலிஹுஸைன் அவர்களும்,

கருணை சோமசுந்தரம் அவர்களும்,


பூபதிகளிடம் தாம் நேரில் தெரிந்ததையும்,

பல அன்பர்கள் மூலமாகக் கேள்விப்பட்டதையும்

குறித்து வைத்திருந்ததையும்,

தொகுக்கப்பெற்றது.


விஜயபுரம்

M. A. நாவலர் அண்டு சன்ஸ் அவர்களால்

பூபதி அவர்களது விஜயபுரம்

"கருணாநிதி" பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1938

சொரூபம் நாமே எனத்திடமாய்த் துணிந்து
இல்லறத்திலிருந்துகொண்டே துறவறத்தைத்தாங்கி
இல்லறத்தை நல்லறமாகக் கொண்டுவாழும்,

ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாம்,



வெள்ளிய துகிலைக் காவி வெட்டியாகத் தரித்தாலென்ன!

நிறைசெல்வத் திருவாரூர்:

## அருட்குரு ஞானபூபதிகள் திருவுருவம்

வேதாந்த பாஸ்கரன், (ஆனந்த சாகரம்-கடவுள் கைவல்யம்)
ஞானக் களஞ்சியம், ஞானயோக ரகசியம் முதலான
மகிமை தங்கிய அநேக பிரபல
ஞானயோக நூற்களின் ஆசிரியர்.

அருட் கருணாநிதி ஆண்டவன் கருணை.

# ஸ்ரீகுரு கருணையானந்த ஞானபூபதிகள்

# சரித்திரச் சுருக்கம்.



## தந்தையாரும் சனனமும்.



செந்தமிழ்வளர்ந்து திகழ்பாண்டி நாட்டிலே, வான்மழை பொழிதலின் வாவியுங்குளமும், நீர் நிறைந்தொழுகு நிலவளம்பெருகி, பொழிலும் சோலையும் புடைபல நெருங்க, திருவுங் கல்வியுஞ் சீருஞ் சிறப்பும் நிரம்பி விளங்கிய பெருநாழி என்னும் பழைசயம்பதியிலே நமது ஞானபூபதிகளைப் புத்திரராகப்பெற "இவன் தந்தை என்னோற்றான்கொல்" என்னுஞ் சொல்லை உலகங் கூறுதற்குக்காரணராயிருந்த பெரியார் அப்துர்றஹ்மான் சாஹிபு என்னும் திருநாமமும், நாவலர் பெருமான், புலவர்கள் நாயகம் ஆரிபு பில்லா(ஹ்) சித்தயோகீஸ்வரர், திருவருட் சித்தர், மௌலானா என்னும சிறப்புப்பெயர் பல புனையப்பெற்று கல்வி அழகே அழகாக விளங்கிய உத்தம சீலராவர்.

இவர்கள் இற்றைக்கு எண்பது ஆண்டுகட்கு முன்னர் அதாவது கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே உழுதுண்டுவாழும் பெருங்குடியிலே அவதரித்தார்கள். இவர்களது பெற்றோர்கள் விளைநிலங்களை மிகுதியும், உடையவர்களாய் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் தொழுதுண்டு பின் செல்பவர்" என்னும் திருவாக்கைக் கடைப்பிடித்தவர்களாயிருந்தபடியால் தமது குமாரர்களுக்கு கல்வியறிவைப்பெருக்க விரும்பினார்களில்லை. தமது புலங்களில் தானியங்களை மிகுதியாக விளைவிக்க எண்ணித் தமது புதல்வர்களை விவசாயத்திலேயே கவனஞ் செலுத்துமாறு வற்புறுத்தி வந்தனர்.

அதனால் தங்கள் நிலங்கள் கம்பு-கேழ்வரகு - தினை-சாமை - வரகு- சோளம் - பருத்தி முதலிய பலன்களை மிகுதியாய்த்தந்தன. விளைவித்த பலன்களை அறுத்து தமது வீட்டுக்களங்களில் மலைபோலொப்பத்தாள்களைப் போர்செய்தும், தானியங்களை வண்டிகளிலேற்றி தமது இல்லத்தில் குன்றேயொப்ப விளங்கும் பெரிய களஞ்சியங் களிற் சேமித்தும் அவைகளை, தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றும் ஐம்புலத்தாறோம்பியும். அரசிறைகொடுத்தும் அகமகிழ்ந்து வாழ்ந்துவந்தனர்.

தாங்கள் விளைவித்த தானியக் குவியல்களை வண்டியி லேற்றி தம்மனையுட்கொண்டுபோகுமாறு வாயிற்படியைப் பெரியதாயமைத்தும் கள்வர்கொள்ளைக்கருதாவண்ணம் தக்க அரண்களமைத்தும் 'பெரிய வீடு' என்னும் பெயருடன் சிறந்து விளங்கினர்.

புலவர்கள் பெருமான் இளமைப் பருவத்திலேயே தந்தையை இழந்தபடியால் தமது அன்னைக்கும், சகோதரர்க்கும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியதாயிற்று. ஆகவே, தம் சகோதரர்களோடு புலங்காத்துக்கொண் டிருக்கும் காலங்களில் வீடுவேய்ந்த பனையோலையிற் கருவேலமுட்கொண்டு கிருக்கிக்கொண்டிருப்பார்கள். அது கண்ட ஊரார் இப்பிள்ளைக்கு கல்விச் செல்வமும் கிடைக் கும்போ லிருக்கின்றதெனறு இவர் அன்னையிடத்தும் சோதரரிடத்தும் கல்வி பயில்விக்குமாறு வற்புறுத்தி வந்தனர்.

ஊரார்சொல்லை மறுக்க இயலாத இவர்தஞ் சோதரரும் அன்னையும் சாகுபடிவேலையில்லாத காலமாகிய ஆனி, ஆடி, ஆவணி என்னும் மூன்றுமாத காலமும் பள்ளிக்கனுப்பி கல்வி பயில்விக்கச் செய்தனர். அம்மூன்று மாதங்களில் நெடுங் கணக்கு (அரிச்சுவடி) இலக்கம் (நாணயக் கணக்கு) நெல்லி லக்கம் (தானிய அளவை வாய்ப்பாடு) எண்சுவடி (பெருக்கல் வாய்ப்பாடு) முதலியவைகளைக் கற்றுணர்ந்தார்கள்

ஆவணி மாதத்திற்குப் பிறகு சதாகாலமும் கல்வி கற்பதை விட்டுப் புலங்களில் வேலை செய்வோர்களுக்கு உதவியாக ஆகாரங்கொண்டுபோதல, புலங்காத்தல் முதலிய குடும்ப வேலையிலீடுபட்டிருப்பார்கள். ஒழிவு நேரங்களில் சிறிது கல்வி பயில்வதில் ஈடுபட்டிருப்பார்கள். இராக்காலங்களில் சீராப்புராணம், இராமாயணம், பாரதம், திருவிளையாடற் புராணம் முதலியன பிரசங்கஞ் செய்யுமிடங்களுக்குச் சென்று கேட்டுக் கொண்டிருந்து மறுநாட் காலையில் புலங் களுக்குச் செல்லுமிடங்களில் புராணப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்துவிடுவார்கள். புலங்களில் தனியாயிருக்கும் பொழுது தலைகுனிந்த வண்ணமேயிருந்து ஆழ்ந்த கவனத் துடன் புத்தகத்தைப் பார்த்துக்கொண்டே யிருப்பார்கள். அப்பொழுது யாரேனும் வந்து கம்பங்கதிர்—பருத்தி இவைகளைத் திருடாதிருக்கும் பொருட்டுக் கீழே குனிந்த படியே யாரங்கே நிற்கிறது சொல்லுகிறாயா இல்லையாவென்று அதட்டிக்கொண்டே தன்படிப்பில் கண்ணுங்கருத்துமா யிருப்பார்கள். இவ்வாறு பராமுகமாய் வெறுங் கூச்சல் மாத்திரம் போடுவார்கள் என்பதை அறிந்த சிலர் தங்க ளிஷ்டப்படி திருடிக் கொண்டுபோய்விடுவது வழக்கம்.

இதுகண்ட மூத்த சகோதரர், காவலில் கவனமில்லா மலும் வேலைசெய்யாமலும் படிப்பதே தொழிலாக இப்படிக் காலங்கழித்தால் நாளைச் சரிபங்குபெறுவதெப்படி என்று கடிந்துகொள்ளுவர். அதனைச் சிறிதும் பொருட்படுத்தாது கல்வி கேள்விகளிற் கண்ணுங்கருத்துமாயிருந்து தாமாகவே நூற்களைக் கற்றும், கற்றோர்பாற்கேட்டும் தானறிந்த நூற்பொருளைப் பிறர்க்கு எடுத்துரைத்தும் கல்வியில் மிகத் தேர்ச்சிபெற்றார்கள்.

இச்செயல்கள் குடும்ப விருத்திக்கும் பயிர்த்தொழில் வேலைக்கும் மிக இடையூறாயிருக்கிறதென்றெண்ணிய இவரது மூத்த சோதரர் தன் அன்னையாருடன் கலந்து யோசனைசெய்து குடும்ப காரியங்களிற் கவனம் செலுத்தாது வாளா விருப்பது கருதி, "நன்மார்க்கத்தைத் தேடிப்பிழை"

"குடும்பத்தை விட்டோடிப்போ" வெனக் கடிந்துசெய்யும் சற்குருவைப்போல் கோல்கொண்டு நையப்புடைத்தனர். அடி தாங்க இயலாத இளம்பருவத்தினராகிய பாலப் பாவலர் பெருநாழியைவிட்டு வெளியேறி சோழநாட்டுக்கு வந்து நாகையிற் சின்னாள் தங்கியிருந்து இரங்கூனுக்கு யாத்திரையாகச் சென்றார்கள்.

அங்கு சில காலந் தங்கியிருந்து கேட்டோர் உளங் கரையுமாறு சீறாப்புராணப் பிரசங்கம்புரிந்து வந்தனர். அங்குள்ளார் பலர் இளம்புலவரைப் பெரிதும் பாராட்டி ஆதரித்துவந்தார்கள்.

இரங்கூனில் அன்புள்ளார் பலரும் விரும்பி ஒன்று கூடி நமது புலவர் பெருமான் அவர்களுக்கு "மௌலானா" என்னும் உயரிய பட்டம் ஒன்றை அளித்து, அத்துடன் வழிச்செலவுக்கு காணிக்கையாக அளித்த கைப்பொருளுடன் தங்கள் பத்தொன்பதாம் வயதில் தாய்நாடு திரும்பி பெருநாழியை அடைந்தார்கள்.

நமது புலவர்பிரான் இளமையிலேயே பெரும் புலவராய்ப் பொருளோடும் திரும்பிவந்தமைகண்டு தம்முடன் பிறந்தார்களும் ஊரார் பலரும் பெருமகிழ்ச்சியோடு வரவேற்று நன்மொழிகூறிப் பெருமைபாராட்டுவாராயினர். புலவர் பெருமான் தபமூரிலேயே குர்ஆன் ஓதி முடித்துப் பின்னர் பல கித்தாபுகளும் ஓதிக்கொண்டிருக்க, உறவினர் பலரும் தம் தம் பெண்களை மணம்செய்து கொள்ளுமாறு செய்தி விடுத்தனர். அவ்வூர் காதர் ராவுத்தர் என்னும் பெரியார் தவப்பேறாகத்தோன்றி, அழகொடு குணமும் பொருந்திய **சாறுபீவி** அம்மாள் என்னும் பெண்மணியே புலவர்க்குகந்த மனையாளாதற்குத் தகுதியுடையாரென்று அறிஞர் சிலர் கூற, அழகுக்கு அழகாகிய சா று பீ வி அம்மாளை விவாகம் செய்து வைத்தனர். ஒத்த அழகும், ஒத்த இளமையும், ஒத்த குணமும் உடையராகிய தம்பதிகளிருவரும் இல்லறத்துறையிற் குறையா இன்பங்கலந்து

துய்த்து அன்புகொண் டொழுகிவருநாளில் சாருபீவி அம்மாள் அவர்கள் கர்ப்பமாகி பத்தாந்திங்களில் ஒரு ஆண் மகவையீன்றூர்கள் அக்குழந்தை நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவரும் நாளில் அதன் இரண்டாம் வயதில் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டது. மகவையிழந்த காரணத்தால் புலவர் பெருமான் அவர்களும் சாருபீவியம்மாள் அவர்களும் தத்தம் உயிர் பிரிந்து விட்டதாக நினைந்துவருந்தினுர்கள் பின்னர் எல்லாம் ஆண்டவன் கட்டளை என்று சபூர்செய்துகொண்டு ஆண்டவனை நோக்கிப்பிரார்த்தித்து பற்பலவிதமான நோன்புகளை நோற்றுவரும்நாளில், கருணாநிதியின் கருணைப்பெருக்கால் புலவர் பெருமான் அவர்கள் கனவில் ஒரு பெரியார் தோன்றி உமக்கு **உலகம்போற்றும் உத்தமக்குழந்தை** பிறக்கு மெனக் கூறி மறைந்தனர்.

## ஞானபூபதிகள் திருஅவதாரம்.

அவ்வாறே இவ்வுத்தமத் தாய் தந்தையர் கொண்ட அன்பேஉருவாய் ஹிஜ்றி 1304-ஆண்டு றஜபு-மீ பிறை 23 திங்கட்கிழமை, கலி 4988 சருவசித்து வருடம் சித்திரைமீ 7உ கி. பி. 1887-ஆண்டு ஏப்ரல்-மீ 18உ யாகிய சுபதினத்தில் இரண்டாவது புதல்வராக நமது **பூபதிகள்** பற்பல அற்புதக் குறிப்புகளுடன் அவதரித்தனர். அது சமயம் பன்னீர் தெளிப்பதுபோல் மழைபெய்தது; **அவனே நான்** என்ற அசரீரி வாக்கியமும் கேட்க எல்லோரும் இறும்பூ தெய்தினர்.

சருவசித்து-ஆண்டு சித்திரை-மீ 7உ சோமவாரம் பகல் நாழிகை 16, விநாடி 16-க்கு சனனம். சென்ம நட்சத்திரம் சுயம் சென்ம லக்கினம் கடகம். சென்ன காலத்தில் இராகு மகா திசையில் குரு புத்தியில் இருப்பு-ஆண்டு 1 மீ 5 நாள் 23 நாழிகை 22 விநாடி 31.

குழந்தையின் பிறந்த காலக்கிரக நிலையைச் சோதித்த சோதிட நூல்வல்லுனர் பின் வரும் கற்பலனுரைத்துக் களித்துதவினர்.

## ஞானபூபதிகள் சாதகக் குறிப்பு.

| | | | |
|---|---|---|---|
| புதன் | சூரியன் செவ்வாய் | சுக்கிரன் | சனி |

சந்திரன்

இலக்கினம்

ராகு

வியாழன்

## ஸ்ரீகுரு ஞானபூபதிகள் திருக்குறிப்புத் திருவிருத்தம்.

திருவருட் பெருகாழி அப்துர்றகு மான்புலவர்
செய்தவப் புதல்வராகத்
திகழ்தரு முஹம்மதிபு ருஹீம் மஹானுடைய
செனனமது ஹிஜ்றிவருடம்
மருவுமா யிரமுமுந் நூற்றுநான் காண்டினில்
மகிழ்றஜபு மாதமதனில்
வருதேதி யிருபத்து மூன்றுக்கு நிகராக
வளர்சருவ சித்தாண்டினில்
பொருவருமுன் மேடரவி தேதியேழ் ரவியுச்சி
புகல்சதய கடகலக்னம்
புண்யமிகு சோமவா ரங்கடிகை யீரெண்
பொருந்தமரர் பக்கமதனில்

குருவருட் குன்குதாத் தொளிவதுபிறங்கக்
குழந்தைவடி வாயவனியில்
ஹறநிலைப் பொருளதை யுணர்த்துவான் வேண்டியாட்
கொளவவ தரித்தனரரோ!

சிக்கலைச்சேர்ந்த சங்கமங்கலத்தில் நடைபெற்றுவரும்
ஸ்ரீகுரு ஞானபூபதிகள் ஜனன விழா பத்திரிகையிலுள்ள கவி.

செக்கெலுங் கன்னலும் பின்னிவள மன்னிச்
சிறந்ததிரு வாரூரினிற்
றிகழ்கருணை யானந்த ஞானபூ பதியடிகள்
செனனசுப தினமோதுவாம்
மன்னுகலி காலா யிரத்துத் தொளாயிரம்
மருவுமெண் பத்தெட்டினில்
மகிழ்சருவ சித்துகளு மினிர்சருவ சித்தாண்டில்
வளர்மேட ரவியேழினில்
மின்னுமதி காளமா பக்கமே காதசி
வியன்சதய கடகராசி
மேவுமீ ரெண்கடிகை யீரெண் விநாடியில்
விளங்குபகல் வேளையதனிற்
பொன்னனைய சத்துவ குணத்தினி லிராசதம்
பொலிவுதிகழ் சுபமனைத்தும்
பூரணம தாகப் பொருந்தஅவ தாரம்
புரிந்தனர் புரந்தனரரோ!

சனனபலன்.

சர்வசித்து வருடத்திற் பிறந்தவர்:— நல்லவார்த்தை, நல்லொழுக்கம், நேசமுள்ளவர், பல நீதிகளுரைப்பவர், நேசித்தவரை ஆதரிப்பவர்.

உத்தராயனத்திற் பிறந்தவர்:— சண்டையில் எதிரிகளைச் செயிப்பவர். நூற்களைப் பரிசோதிப்பவர். வசீகரமுள்ளவர்.

*சித்திரை மாதத்திற் பிறந்தவர் :—* நான்கு வேதங்களையுங் கற்றவர், பெற்றோர்களை ஆதரிப்பவர், சன்மார்க்கர்.

*சதய நட்சத்திரத்திற் பிறந்தவர்—:* காலத்துக்கேற்ற முயற்சி செய்பவர், விஸ்தார புத்தியுள்ளவர், விடாமுயற்சியுடையவர், பொறுமையாய் நடந்துகொள்ளுபவர். பிறருக்கு உபயோகமான செயல்களைச் செய்கிறவர்.

கடக ல.

பாடப் படிக்கப் பலதொழிலுங்கற்கத்
தேடச் சுகிக்கச் செலவழிக்க – மேடங்
கற்கடகஞ் சிங்கங் கன்னிதுலா னுக்கல்லான்
மற்கடகத் துக்கேது மற்று

*சோமவாரத்திற் பிறந்தவர்:—* விரத கருமங்களை நடத்துபவர் தரும சிந்தனையுள்ளவர், கீர்த்தியையுடையவர்

என்ற பலனிருப்பதால் இப்புதல்வர் உத்தமமான தொழில் புரிந்து மேல்வீடு கட்டிப் பெருவாழ்வு வாழ்ந்து மகானாகவும விளங்குவர் என்று சோதிடவல்லுனர் கூறினர்.

இவ்வாறுரைக்கக்கேட்ட தாய் தந்தையரிருவரும் பேருவகைகொண்டனர். "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோனெனக் கேட்டதாய்" என்று பொய்யாமொழிப்புலவர் கூறிய வண்ணம் ஈன்றபொழுதே சான்றோனுவான் எனக்கேட்டால் அன்னையும் பிதாவும் ஆனந்தம் அடைவதைப் பேசவும் வேண்டுமா?

## திருநாமம் புனைதல்.

நமது ஞானக் குழந்தையின் பிதாவாகிய நாவலர் பெருமான் மதுரைமாநகரம் சென்றிருந்தபொழுது அவ்வூர் ஹஸரத்து முகம்மதுஇபுராஹீம் சாகிபு நக்ஷபந்தி என்னும் பெரியாரைச்சந்தித்து, தமக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதாகக்கூறி, அக்குழந்தைக்கு என்ன பெயரிடலாம் என்று வினவினார்கள். அதற்கு அவர்கள் புலவர் பெருமானை நோக்கி, தங்கள் அருமைப் புதல்வர், நாயகம் (சல்) அவர்கள் பிறந்ததினமாகிய திங்கட்கிழமையில் பிறந்திருப்பதால் (சல்) அவர்களது திருநாமத்துடன், அவர்கள்பிறப்பிடமாகிய

மக்கமாநகரம் ஆரணியமாக இருந்ததை அழித்து அழகிய நகரமாகச்செய்த நபி இப்றுஹீம் கலீலுல்லா அவர்கள் பெயரையும் சேர்த்து முஹம்மது இப்றுஹீம் என்னும் திருநாமமிடுங்கள் எனமகிழ்ந்துகூறலும், அங்ஙனமே பெருநாழிக்கு வந்து பல பெரியார்கள் சூழ, மிகுந்த கோலாகலத்துடன் விசேஷமான தான தர்மம் வழங்கி முஹம்மது இப்றுஹீம் என்னும் திருநாமம் புனைந்தார்கள்.

## இளமை நிகழ்ச்சிகள்.

அன்பின் குழவிக்கு ஆர்வமொடு பாலூட்டிப் பாராட்டிச் சீராட்டி நேர்மை தரு நீராட்டி உள்ளத்துவகை நனிததும்ப இமைகாக்கும் கண்மணிபோல் வளர்த்து வந்தனர். குழவிப்பருவத்திலேயே பூபதிகளின் முகப்பொலி வும் அருஞ் செயலுங்கண்ட ஞானக் குழவியின் தாயைப் பெற்ற பாட்டனார் வாக்குப்பலிக்கும் வன்மையுடையாராகிய காதர் ராவுத்தர் என்பார் தம் குமாரத்தியாகிய சாருபீவி அம்மாள் அவர்களை நோக்கி இக்குழந்தையைச் சாமானிய மாக நினையாதே "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்" என்றபடி பத்மாசனம்போட்டிருப்பதையும், அடிக்கடி கண் மூடிக்கொண்டிருப்பதையும், பாரென்று குறிப்பிடுவார். அப்பொழுது பூபதிகளுக்கு வயது இரண்டரை பெருநாழி யில் ஜவுளிவர்த்தகம் செய்து கொண்டிருந்த மீ. முகம்மது அபூபக்கர் ராவுத்தர் என்பவர் தனக்குப் பெண் குழந்தை களையன்றி ஆண் குழந்தை பிறவிக்கவில்லை என்ற மனக் குறையுடையவராய், பூபதிகளை அடிக்கடி தம் வீட்டுக்குக் கொண்டுபோய் பாலொடு பழமும் ஊட்டி உபசரித்து வந்தார். அம மாதததிலேயே அவர் தம் மனைவியார் கருப்பவதியாகி ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தனர். அது முதற்கொண்டு நமது பூபதியாகிய குழந்தை மீது பலரும் அன்பும் பெருமையும் பாராட்டிவரலானார்கள்.

பூபதிகளுக்கு மூன்று வயதாயிருக்கும் பொழுது பெருநாழியில் படுநீ என்னும் பெரு நெருப்புப் பிடித்து

ஊரின் நாலுபக்கமும் பரவி எரியத்தலைப்பட்டது. ஊரார் இன்னது செய்வதென்றறியாது பெருந் திகிலடைந்து பரதவித்தனர். அப்பொழுது பூபதி அவர்களின் தாய் தந்தையர் தமது வீடும் தீக்கிரையாவது நிச்சயமென்று பயந்து, தம் முயிரினும் சிறந்த அருங்குழவியை எடுத்துக் கொண்டு அவ்வூர்ப் பள்ளிவாசலுக்கு அருகிலுள்ள கடையநல்லூர் பக்கீர் லெப்பை ஆலிம் ஒலியுல்லா அவர்கள் அடங்கிய கட்டிடத்தில் பலருடன் தங்கியிருந்தார்கள்.

அப்பொழுது குதூகலமாக விளையாடிக்கொண்டிருந்த நமது ஞானக் குழந்தை அங்கு எரிந்துகொண்டிருந்த விளக்கினிடம் விரைந்தோடி திரியை இழுத்து அணைத்ததும் ஊரை அழித்து வந்த பெருந்தீயும் அணைந்து போயிற்று. இதைக்கண்ட ஊரார் பெரும் வியப்புற்று, இக்குழந்தை பாலிருக்கும் தெய்வீகத் தன்மையைப் பரவிப்புகழ்ந்தனர்.

அது முதற்கொண்டு உள்ளூரார் வெளியூரார் பலரும் வந்து தங்கள் இஷ்ட சித்திகளைப் பெறும்பொருட்டு ஞானக் குழந்தையின் கையில் ஏதேனும் பொருளைக் கொடுத்துத் திரும்பப்பெற்றுப் போய் தத்தம் மனக்குறை நீங்க நன்மையை அடைந்துவந்தார்கள். புலவர்கள் நாயகம் அவர்கள் பெரும்புலமையும் கவிபாடும் திறமையும் பெற்று நாவலர் திலகமாக விளங்கியும், தங்கள் புத்திர சிகாமணிக்கு கல்விப் பயிற்சி செய்வதில் கவலையற்றவர்களாக யிருந்தார்கள். ஒருகால் தமது புதல்வர் இயற்கையாகவே எல்லாம் உணரவல்ல தெய்வீகத் தன்மை பொருந்தியவரென்று முன்னமே உணர்ந்த காரணத்தாலேயே அவ்வாறு வாளாயிருந்தார்கள் போலும்.

ஆயினும் நமது பூபதிகள் ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயரிடம் பாடம் கேட்டதுமில்லை. அவர்பெற்றோர்கள் காலஞ்வுக்கு பாடப்புத்தகம் வாங்கிக்கொடுத்ததுமில்லை. அவ்வாறிருந்தும் "தந்தையறிவு மகனறிவு" என்றபடி தம்மைப் பள்ளிகூடத்திற் கனுப்பாதிருந்தும், புத்தகம்

முதலிய சாதனங்களில்லாதிருந்தும், எட்டாம்வயதிற்குள்ளாகவே கலை பயில் தெளிவு, கட்டுரைவன்மை, செய்யுள் இயற்றும் ஆற்றல் முதலிய கல்விப் பொருத்தம் முதலியன எவ்வாறோ நிரம்பப்பெற்றார்கள்.

பூபதி அவர்களின் ஆறாவது வயதில் அதாவது நந்தன வருடத்தில் வான்மழைகுன்றித் தென்னாடு முழுதும் பெரும் பஞ்ச முண்டாகப்பலருந் துன்புறுவாராயினர். பூபதி அவர்களின் தந்தையார் திருநெல்வேலிப் பக்கம் போகலாமா! தஞ்சை ஜில்லாவிற்குப் போகலாமா! வென மனக்கிலேச முற்று இரவு துயிலும்போது 'வடதிசைசெல்லுக' எனப் பெரியாரொருவர் கூறியதாகக் கனாக்கண்டு விழித்தெழுந்து எப்பக்கம் செல்லலாமெனப் பூபதிகளையும் வினவ பூபதிகளும் வடதிசையே குறிப்பிட அங்ஙனமே சோழநாட்டுக்குத் தங்கள் குடும்பத்தோடு வந்து கீழவேளூருக்கடுத்த பட்டமங்கலத்தில் கிராமமுனசீப் இராமசாமி பிள்ளை அவர்கள், அவர் மருகர் இலுப்பூர் மாணிக்கம் பிள்ளை அவர்கள், அங்கு வசித்துக்கொண்டிருந்த திருவாரூர் வேலன்குடி இரத்தினம் பிள்ளை அவர்களுக்கும இப்பொழுது திருவாரூர் தெற்குச்சேத்தி வில்லேஜ் முன்சீபாயிருக்கும் ஹானரரி மாஜிஸ்ட்ரேட் புலிவலம் சுப்பையா பிள்ளை அவர்கள் புலிவலம் நடேசப் பத்தர் அவர்கள் முதலானவர்களுக்கும் இராமாயணம் பாரதம் திருவிளையாடல் கைவல்யம் முதலான பல நூற்களுக்குப் பொருள் கூறிக்கொண்டிருந்தார்கள். அங்குள்ளார் பலரும் நாவலர் அவர்கள் புலமைக்கு வியந்து மிகப்பெருமை பாராட்டி, தங்கள் அருமைப் புதல்வராகிய ஞானபூபதிகள் முதலானவர்களுடன் இரண்டாண்டு சுகமே காலங்கழித்து வந்தார்கள்.

ஜய-ஆண்டில் தென்னாடு மழைவளம் சிறந்து நாடு நாடாயிற்று. விளைபொருள் மலிந்தது. அங்குள்ளார் புலவர் பெருமானைக் குடும்பத்துடன் பெருநாழிக்கு வருமாறு கடிதம் பல விடுத்தனர்.

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்

என்பதுணர்ந்த புலவர்பெருமான் தங்குடும்பத்தோடு பெருநாழிக்கு மதுரை மார்க்கமாக றயிலேறிச் சென்றார்கள். அவ்வாறு செல்லும்போது றயிலில் பூபதிகள் தாயுமானவர் பாடலில் இரண்டொரு பாடலை உருக்கமாப்பாட அங்கிருந்தவர்கள் கண்ணீர் விட்டு அழ ஆரம்பித்து விட்டார்கள் அவர்களில் ஒருவரான மதுரை சுந்தரம் பிள்ளை என்பவர் புலவர் பெருமான் முதலானவர்கள் மதுரையிலிறங்குவதாகத் தெரிந்து பூபதிகளுடன் வந்த வேறு சிலரையும் வண்டியிலேற்றி தமதில்லத்திற்கு அழைத்துச் சென்று விருந்தளித்து உபசரித்து 'பெருநாழிக்கு தமது செலவில் வண்டியமர்த்தி தானும் வெகுதூரம் வரையில் பின்வந்து பூபதிகளை மிகவும் வாழ்த்தி விடைபெற்றுச் சென்றார். பூபதிகளும் ஏனையோரும் பெருநாழி சென்றனர். அங்குள்ளார் பலரும் மழைமுகங்கண்ட பயிரென மகிழ்ந்து அன்புடன் வரவேற்று உபசரித்துப் பெருமகிழ்வெய்தினார்கள்.

பூபதி அவர்களுக்கு எட்டாம் வயது நிரம்பியது. அஞ்ஞான்று ஓர்நாள் வழக்கம்போலப் பள்ளிவாசலுக்குப் பக்கத்தில் விளையாடச்சென்றவர்கள் விளையாட்டில் மனஞ்செல்லாது அங்குள்ள வேப்பமரத்திற் சாய்ந்துகொண்டு இடுகாட்டை (கபுர் அறைகளை) நோக்கியவண்ணமிருந்து பின்வருமாறு சிந்தனைசெய்தார்கள்:- அந்தோ! இவ்வுலகில் தோன்றிய மானிடரனைவரும் மண்ணொடு மண்ணாய் மறைந்தொழிகின்றனரே! இறப்பென்னும் கடலைக் கடந்தாரிவ்வுலகிலெவருமில்லையே! பிறப்பதற்கு முன் நாமெங்கிருந்தோம். இறப்பிற்குப் பிறகு நாமெங்கு செல்கின்றோம். நாமும் இவ்வாறு இறத்தல் நிச்சயமன்றோ! இறப்பது நிச்சயமாயின், உலகிற் சிறுகால வாழ்வில் யாதுசுகமோ! ஒவ்வொரு மனிதனும் பிணி மூப்புச் சாக்காடென்னுந் துன்பத்துக் காளாவானாயின் உலக இன்பம் நிலையற்ற

தாயிற்றே! ஆயின் நிலையான இன்பமெது? என்னும் ஞானோதயமாக, தேக நிலையாமையை நினைந்து நினைந்து கண்ணீர் வடிப்பாராயினர். இதைக்கண்டவுடன் விளையாடிய சிறார் சிலர் விரைந்தோடிச்சென்று பூபதிகளின் பெற்றோர் பாற்கூற, தங்களருமருந்தன்ன தனயர்க்கு யாது நேர்ந்ததோ வென அஞ்சிய பிதா மாதாக்கள் விரைந்து வந்து பூபதிகள் முகத்தைத்துடைதது மகனே! உனக்கு யாதுதுன்பம் நேர்ந்தது! என் அமுதாய்! எனப் பலகால் கேட்டும் ஒன்றும் மறுமொழி கூறாது பின்னருந் தேம்பித் தேம்பி அழுவா ராயினர். அதுகண்ட தந்தை தாயரும் பிறரும் அழ ஆரம்பித்து விட்டார்கள் பூபதி அவர்களும் மூர்ச்சித்து விட்டார்கள் நோயோ, பயமோ, வெருட்சியோ, மருட்சியோ வெனப் பலர் பலவாறாகக்கூறி மாந்திரீகம், வைத்தியம் முதலிய சிகிச்சை செய்யத் தலைப்பட்டார்கள். விரக்தி நோய்க்கு மருந்து கொடுப்பார் யார்?

பிறகும் அதே சிந்தனையிலாழ்ந்திருந்து மனிதன் இறப்பிற்குக்காரணம் யாது? இறவாது நெடுநாள் உலகில் வாழமுடியாதா! சுவாசந்தானே உயிராயிருக்கின்றது. மூச்சை வசப்படுத்தினால் உயிரையும் வசப்படுத்தக்கூடு மன்றோ! எனப்பலவாறு இளமைக்குத்தக்கவாறு ஆலோசனை செய்து மூச்சை வசப்படுத்த முயலுவதே சரியான முறை யென உணர்ந்து, ஒருநாள் அவர்கள், ஊருக்கு வடபுறம் அருகாண்மையிலுள்ள ஏரி (கண்மாய்க் கரை)யிலுட்கார்ந்து கொண்டு வெறும் வெளியிலிருந்து வருங்காற்றை வாயினால் (தேக்கித் தேக்கித் தண்ணீர் பருகுவதுபோல்) மடுத்தார் கள். இவ்வாறாக ஏழெட்டுத்தினங்கள் செய்து கொண்டு வந்து அவ்வப்பியாசத்தை சிலதினம் மறந்து எப்பொழுதும் போல் சாதாரணமாகவே இருப்பார்கள். சில சமயங்களில் மறுபடியும் செய்வார்கள். இவ்விதமாக மாறி மாறி நிகழ்ந்து வந்தது. இந்நிகழ்ச்சியைக் குறித்து பிற்காலத்தில் பூபதி அவர்களின் மாணவரொருவர் பின் வரும் பாடலை இயற்றி யிருப்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

(தாய்நாட்டில் அன்பில்லாத ஜன்மம் வீணே என்ற இசை)

பல்லவி.

ஞானகருணையானந்த நாயகமே (ஞான)

சரணனுபல்லவி.

3. எட்டாம் வயதினிலே அட்டாங்க யோகமதை
விட்டகுறை யென்று செய்த வேதாந்தியே (ஞான)

4. திங்களும் ரவியும்ஒன்றாய்த் திருத்தி வசப்படுத்திப்
பொங்குமதிப் பால்புசித்த பூபதியே (ஞான)

6. மண்டல மெலாந்திறக்கக் குண்டலி விழிக்கும்வகை
கண்டறிந்த யோகஞான கைவல்யரே (ஞான)

8. ஞானசப்த பூமிதனில் நன்குணர்ந்த சீவன் முக்த
ராஜமஹா ராஜயோக ராஜேஸ்வரா (ஞான)

பூபதி அவர்களின் பத்தாவது வயது ஆரம்பத்தில், நாகூர் ஆண்டவர் அவர்களுடைய காரண சரித்திரத்தை வெகு கவன சிரத்தையோடு வாசித்துவந்தார்கள். அதி லிருந்து ஆண்டவை அவர்களிடத்தில் மிகுந்த பக்தி செலுத்திவரவே ஒருநாளிரவு பூபதிகள் துயிலும்போது நாகூர் ஷாஹுல் ஹமீது ஒலியுல்லா அவர்கள் நெடிய சிவந்த மேனியும், நீண்ட தாடியும், தலைமயிரும், பச்சைப்போர் வையும், கையிற் பிரம்பும் உடையவர்களாகிக் கனவில் தோன்றி, குழந்தாய்! நீ நம்மீது பேரன்புகொண்டொழுகி வரக் காரணமென்ன? உனக்கியாது வேண்டுமெனத் திருவாய்மலர்ந்தருள, பூபதிகள், 'தங்கள் பூரண கிருபையே எனக்கு வேண்டும்' என்று விண்ணப்பிக்க, அவ்வாறே நமது பூரண கடாட்சம் உண்டாவதாக என்று பூபதிகள் சிரசில் வலக்கரத்தை வைத்து ஆசிர்வசித்து மறைந்தார்கள். அதி லிருந்து பூபதிகளுக்கு அடிக்கடி மயிர்க்கூச்சும், கம்பலையும், கண்ணீரும், அதிகமான கல்வியும், ஞானமும் பெருகிவர ஆனந்த பரவசராகி, அன்று காலையிலேயே பூபதிகள் பின்வரும் பாடல்களைப் பாடினார்கள்.

## நாகூர் ஆண்டகையவர்கள் மீது

## பூபதிகள் இளம்பிராயத்தில் அருள்வாக்காகப் பாடிய திருமருந்துக் கண்ணிகள்.

1. நமனை வெருட்ட மருந்தொன்று விற்குது
நாகூர் தருகாவிலே—அன்பு
நாணயங் கொண்டுசென் றுற்பெற லாம்குரு
நாதர் பதப்பூவிலே (நம)

2. மெய்ஞ்ஞான பண்டிதர் ஷாகுல் ஹமீதொலி
விற்கும் அருமருந்து—அது
அஞ்ஞான அந்தகா ரத்தைப் பிளக்கும்
அருளொளு மாமருந்து (நம)

3. கமாலுடீனை எந்தக் காலமும் ஏற்றிடும்
காதிர்ஒலி மருந்து—அது
ஜமாத்துல்ஆகிர் மாதம சகலர்களும் தேடும்
சஞ்சீவி மாமருந்து (நம)

4. இந்தப் பிணிக்குண்டு இந்தப் பிணிக்கில்லை
என்று சொல்லாமருந்து—அது
இன்னேரம் விற்கும் இன்னேரம் விற்காதென்று
எண்ணப் படாமருந்து (நம)

5 பித்தம் ஐயம்வாத முத்தேகத் தாருக்கும்
பேதமற்றமருந்து—மிகு
பக்தியாய் வாங்கிப் புசிப்பவர்க்குச் சர்வ
பாக்யந் தருமருந்து (நம)

6. இல்லறத் தார்க்கும் துறவறத் தாருக்கும்
ஏற்ற ஒரேமருந்து—பல
செல்வமும் புத்திரப் பேறும் கொடுக்கின்ற
தெய்வீக மாமருந்து (நம)

7. பாகல் பாங்கிக்காய்ப் பத்தியமில்லாத
பரமதயாமருந்து—ஆனால்
பத்தி வைராக்கிய அநுப்பானஞ் சேர்த்துப்
பருகுஞ் சித்தமருந்து (நம)

8. மேகங் குஷ்டம் சூலை வீக்கங் காமாலை
வியாதி தீர்க்குமருந்து—மோக
தாகவலி குன்மம் ஈளை முதலான
சகல பிணி மருந்து (நம)

9. ஏவலுடன் பில்லி சூனியம் செய்வினை
இடர்தவிர்க்கும் மருந்து—கௌசு
தேவுஜின் ஷைத்தான் பசாசுகள் நாடாமல்
செய்யும் அருமருந்து (நம)

10. தாத்து ஜபறூத்து லாகூத்து மக்காமைத்
தரிசிக்கு மாமருந்து—சொந்தத்
தன்னை யறிந்து தலைவனை யுங்காட்டும்
சாயுச்ய மாமருந்து (நம)

11. மூலக் குகையினில் மீமுடன் முச்சுடர்
மோட்சந்தரு மருந்து—மும்
மூலகற்பமதின் சிர்றை நமக்கு
மொழியுங் குருமருந்து (நம)

12. நூரு முஹம்மதர் மோன முகியித்தின்
நுட்பத்திருமருந்து—இந்தப்
பாருல கோர்கள் மதபேதங் கூறாமல்
பட்சிக்கு மாமருந்து (நம)

13. காலதேசவர்த்த மானமில் லாதுண்ணும்
ஹக்கீக்கத்து மருந்து—மனங்
கசிந்து கசிந்து கண்ணீர் மல்கிக் காதலாய்க்
கனிந்துண்ணும் மாமருந்து (நம)

14. குதிரையின்கொம்பும் கொசுகுத்தேன் குறுணியும்
கொண்டுவா என்று சொல்லும்—ஞான
மதிகெட்டவைத்தியம் போலல்ல இதுவிலை
மதிக்கொண்ணா மாமருந்து (நம)

15. ஞானிகளே! சிவயோகிகளே! உங்கள்
நாட்டமெது சொல்லும்—பசுந்
தேனெனும் இன்ப மடமாதர் மாயையைச்
சிங்கமென வெல்லும் (நம)

16. பந்தப்பிறவி வியாதிகளை யெல்லாம்
பாய்ந்தடர்ந்து கொல்லும்—பல
செந்தூரம் வேண்டுமோ பஸ்பங்கள் வேண்டுமோ
தேவையெது சொல்லும் (நம)

17. செல்வம் நிறைந்து திகழும் (*) திருவாரூர்
சேர்ந்த திருவிருந்து—ஞானக்
கல்விக்களஞ்சிய மாகவிளங்கிய
கருவொழிந்த மருந்து (நம)

18 (*) சின்ன வயதினில் என்னைப் பலமுறை
தேடி வந்த மருந்து—பின்னும்
அன்னையைப் போல்வந்து நன்னெறி யோதிய
ஆனந்த மாமருந்து (நம)

19 பாலன் முஹம்மதிபுறுஹீம் (*)பூபதி
பருகும் திருமருந்து— இரு
ஞாலமுழுதுஞ் சமதாய் நிறைந்தருள்
ஞானமஹா மருந்தே (நம)

இந்த அடையாளமிட்ட சொற்கள் தற்காலம் மாற்றி அமைத்தது

பூபதி அவர்களின் தந்தையாரான நாவலர் பெருமான் வாக்குப் பலிதமுடையவர்களென்பது உலகப்பிரசித்தம். பெருநாழியிலுள்ள கண்மாய் அடிக்கடி உடைப்பெடுத்துப் பெருஞ்சேதத்தை விளைவித்துவர, அதனால் வருந்திய ஊரார் புலவர் பெருமானிடம் முறையிட, அவர்கள் ஒரு பாடலைக்கூறியருள, அதுமுதற்கொண்டு அந்தக்கண்மாய் உடைப்பெடுப்பதில்லை என்னும் புகழ் எங்கும் பரவியிருந்தது. கமுதியில் நவாபு அவர்களால் மிகுந்த வேலைப்பாடுகளுடன் கட்டப்பட்ட பெரும் பள்ளி ஒன்றிருக்கிறது. அதைப்பிற்காலத்தில் பெரிதும் பழுது பார்த்தும், புதிதாக முன் மண்டபம் ஒன்று கருங்கற்களால் உறுதியாகக்கட்டி முடித்தும் திறப்புவிழாக்கொண்டாடினார்கள். அதுபொழுது புலவர் அவர்களை ஒரு வாழ்த்துப் பிரபந்தம் இயற்றும்படி அவ்வூர் நாட்டாண்மை சேகு இபுறுஹீம் அம்பலம் அவர்கள் தா. மு. காதர் முசாபர் அம்பலம் அவர்கள் முதலானவர்கள் பெரிதும் கேட்டுக்கொண்டதற்கிணங்கப் புலவர் பெருமான் அவர்கள் ஓர் பிரபந்தம் இயற்றி அப்பள்ளிவாயிலில் முதற் குத்பாவில் அதை அரங்கேற்றினார்கள். ஆங்கு அப்புகழ் மாலையை வாசிக்க அப்பெருங்கூட்டத்தில் எவரும் முன்வரவில்லை. பன்னிரண்டு பிராயம் நிரம்பாத பூபதி அவர்களை அப்பெரும் அவையில் அஞ்சாது முன்வந்து, அப்பாடல்களை அழுத்தம் திருத்தமாக பன்முறை படித்துப் பழகியவர்போல் வாசிக்க, சபையிலுள்ளோர் அனைவரும் பெரும் வியப்புற்று, பூபதி அவர்களையும் புலவர் அவர்களையும் மிகப்பெருமை படுத்திக் கொண்டாடினார்கள்.

பூபதி அவர்கள் தமது பதினொன்காவது வயதில் அதாவது 1900-வரு ஜூன் மாதத்தில் தந்தையாருடன் முதன் முதலாக இரங்கூன் யாத்திரை சென்று, இரங்கூனை யடுத்த இன்சின் (Insein) என்னும் நகரிலுள்ள பஜாரில் பல வருஷங்கள் ஷாப் வியாபாரத்தில் தலைசிறந்து விளங்கினார்கள். அங்கிருந்த காலங்களில் சிறுவர்கள் பள்ளிக்கூடங்களுக்குச்சென்று படிப்பதையும், ஓதுவதையும் பார்த்துப்

பார்த்துத் தாங்களும் அரபி ஓதவும் ஆங்கிலம் படிக்கவும் கற்றுத் தேர்ச்சிபெற்றார்கள். அவ்வாறு தேர்ச்சி பெறுவதை நாகபட்டினத்தையடுத்த ஆழியூர் கா. முகைய்தீன் பாட்சா சாஹிபு அவர்களும் ஷை ஆழியூர் க. மு. உசேன் கான் சாஹிபு அவர்களும் பெரிதும் விரும்பிவந்தார்கள்.

அவ்விளம்பிராயத்திலேயே சுமார் நான்கு வருடங்களுக்குள் முகவசீகரமும், கைராசியும் உடையவர் என்று பிறர் மதிக்க வர்த்தக யுக்தியிற் சிறந்தவர்களானார்கள். இவர்களுடைய வியாபாரத்திறமையும், வாக்குவன்மையும், பிறரை வசீகரிக்கும் குணமுங்கண்ட வியாபாரிகள் அதிக லாபம் தருவதாகக்கூறி தங்கள் தங்கள் கடைக்கு வருமாறு வற்புறுத்தினார்கள். எல்லோருடைய நன் மதிப்புக்கும் பாத்திரராயிருந்த ஞான பூபதிகள் தம்மையழைத்த வியாபாரிகள் எல்லோர் மனதையும் திருப்திப்படுத்த எண்ணித் தாமிருந்த கடையில் கணக்கைத் தீர்த்துக்கொண்டு 1904-ஹு த் தொடக்கத்தில் இரங்கூன் சோலியாப் பள்ளி வீதியில் வர்த்தகம் செய்துகொண்டிருந்த தங்கள் உறவினர் வேண்டுகோளுக்கிணங்கி அவருக்கு சில சகாயம செய்து கொண்டு அவருடன் வசித்துக்கொண்டிருந்தார்கள். சுய தேசம் சென்று திரும்பிய பிதா அவர்கள் இரங்கூனுக்கு வந்து அங்குள்ள பல பிரபுக்கள் வேண்டுகோளுக்கிணங்கி இரங்கூனை அடுத்த தனியன் பாஞ்சப்பீர் அவுலியாக்கள்மீது வழிநடைச் சிந்தும் கும்மியும் பாடி அரங்கேற்றினார்கள். அதை அனேக நாவலர்கள், பாவலர்கள் முதல் எல்லோருங் கேட்டுக்கொண்டாடி அவர்கள் கவித்திறமையை வியந்து பெருமை பாராட்டியதைப் பார்த்து, நாவலர் பெருமானின் சகோதர முறையிலுள்ள எக்கஞ்சான் புலவர் என்னும் யோக நிஷ்டாபரராகிய முகம்மது இபுராஹீம் புலவர் என்பவர் பொறாமைகொண்டு இவரென்ன சாமானியப் புலவர் தானேஎன்றும், தானொருயோகியென்றும் மற்றொருவர்பால் பழித்துரைத்தனர். அதுகேட்ட புலவர்கள் நாயகம் மனம் பொறாராகி இரங்கோன் அங்கிச்சக்கிக் கடுத்த பயாப்புலே

என்னுங் காட்டில் சின்னையா மேஸ்திரி ராவுத்தர் கொட்ட கையிலிருந்து அகத்தீசரையே தங்குருவாக அகக்கண் முன னிறுத்தி 48 நாள் அன்ன பானுதிகளின்றி வைராக்கிய சித்தத்துடன் கல்வத்தில் (யோக அறையில்) இருந்தார்கள். முன்னரே பிராணுயாமத்தின் இயல்பும், சார சார அமுரி தாரணையும் குருமூலம் தெரிந்து அப்பியசித்து வந்தபடியால் தசநாடிகள் எளிதில் கைவல்யமாகியதும் ஏக்கஞ்சான் புலவர் அவர்களிடம் சென்று சாதாரணமாகவே அவர்களுடன் வசித்துக்கொண்டிருந்தார்கள். ஒருநாள் ஷை யோகி அவர்கள் இன்று இரங்கூனுக்குப் போய்வரவேண்டும் என்று கூறினுர்கள். சில நாழிகை கழித்த பின்னர் நமது புலவர் பெருமான் ஷை யோகியை நோக்கி மயிலில் மயில் நடக்கிறதே! அதாவது ஆகாயத்தில் ஆகாயம நடக்கிறதே புறப்படலாமே! என்று பஞ்ச பூதத்தின் பஞ்ச பட்சிகளை அறிவிக்க அவர் மருண்டு, இவருக்கு இஃது எவ்வாறு தெரிய வந்ததென்று விசாரித்தறிந்து இருவரும் அன்பு கொண்டு தம்முடன் கூடவே வைத்திருந்து கொண்டாடினுர்கள். பின்னர் பூபதி அவர்கள் தங்கள் பிதாவுடன் இரங்கூன் முகல் வீதியில் தங்கியிருக்கும்பொழுது நாவலர் பெருமான் தாம் ஏகாந்தமாய் நிட்டைகூடும் பொருட்டு மலையடிவாரங்களுக்குப் போவதாகச் சொல்லிக்கொண்டிருந்ததைக் கேட்ட பூபதிகள் தந்தையாரைவிட்டுப் பிரிய மனமில்லாமல் தம்மைவிட்டும் குடும்பத்தைவிட்டும் நீங்காமலிருக்கும்படி வற்புறுத்திக் கேட்டுக்கொண்டே வந்தார்கள். தப்பிரிவுக்கு இணங்காமை கண்ட புலவர்கள் நாயகம் புதல்வருக்குத் தக்க சமாதானம் கூறிக் காலத்தை எதிர்நோக்கியிருந்தார்கள் அப்பொழுது பூபதிகளை இன்செனில் முன்னிருந்த கடைக்காரர் தங்கள் கடை நிலைகுலைந்திருப்பதைச் சீர்திருத்தும் பொருட்டு மறுபடியும் தங்கள் கடைக்கு வந்திருக்கும்படி வற்புறுத்தி அழைத்ததின் மேல் இன்சீனுக்குச் சென்றுவிட்டார்களாயினும் அங்கிருந்து சென்னைக்கு கப்பல் புறப்படும் தினமாகிய வியாழன், வெள்ளி இருதினங்களிலும் முகல்வீதியிலுள்ள தந்தையாரை வந்து

பார்த்துப் போய்க்கொண்டிருந்தார்கள். இவ்வாறிருக்கையில் [illegible]ன்சினில் பூபதி அவர்களுக்கு வைசூரிகண்டு நோய்வாய்ப்பட்டிருந்தபடியால் ஒருவாரம் தந்தையாரைப் பார்க்க வரமுடியாமற்போகவே அதை அறிந்த புலவர் பெருமான் இதுவே தாம் குறித்த இடம் சென்று நிட்டை கூடுதற்கு ஏற்ற சமயமெனக்கருதி அவ்விடத்தைவிட்டு வெளியேறி விட்டார்கள்.

பூபதி அவர்கள் உடல் நலம் பெற்றதும், ரங்கோன் மூகல் வீதிக்கு வந்து பார்க்கத் தந்தை அவர்களைக் காணாமல் மனம்வருந்த, அங்குள்ளார் பலர் பூபதிகட்கு எவ்வளவோ சமாதானம கூறியும் தந்தையாரைப் பிரிந்த துயர் தாங்காமல் பெருநாழியிலுள்ள தம் அன்னைக்கு கடிதம் எழுதிக் கேட்டார்கள் கணவர் யோக சிந்தாபரராய்க் காணாது சென்றமைக்கு மிகத்துயர்கொண்ட அன்னை புலவர் நாயகம் அங்கும் வரவில்லை என்று கடிதம் எழுதவே மிக்க மனச் சோர்வுடன இரண்டு மூன்று மாதம இன்னது செய்வதென்றறியாது பூபதி அவர்கள் வருந்திக்கொண்டிருந்தார் கள்

அப்பொழுது பெருநாழியிலிருந்த பதிவிரதா சிரோமணியாகிய பூபதிகளின் மாதா அவர்கள் முருதுடன் பல நாள் நோன்பிருந்து தம் கணவரிருக்குமிடத்தை கனவில் ஒரு பெரியாரறிவிக்க அறிந்து மதுரைக்கடுத்த தேவதானப் பட்டி மலைக்குச் சென்று அங்கிருந்த தம் நாயகரைப் பல வாறு இரந்துவேண்டி ஊருக்கு அழைத்துவந்து தம் புதல் வருக்கு கடிதமெழுதினார்கள் 1905-வருடத்தில் தம் அருமைப்பிதா கண்டுபிடிக்கப்பட்டு ஊருக்குவந்து சேர்ந் தமை அன்னையின் கடிதமூலமாயறிந்த பூபதிகள் ஆனந்த பரவசராய் உடனே புறப்பட்டு சுதேசம்வந்து தந்தை யாரைக்கண்டு வணங்கி அளவிலா மகிழ்ச்சிகொண்டு அவர் களுடன் வசித்துவந்தார்கள். அந்த நாட்களில் புலவர்கள் நாயகம் அவர்களிடமிருந்து நடைபெற்ற விளையாத்துக்கோ ரளவில்லையென்றே கூறலாம். சிறிது நாட்சென்றதும்

பூபதி அவர்களுக்கும் யோக சாதனைகளில் பெரு விருப்ப முண்டாகவே யோக நிஷ்டாபரராகிய தங்கள் பிதாவின் அருளேணுக்கத்தால் பிராணுயாமமும், திக்று பிக்றுகளும் மூஷாஹதா முருக்கபாக்களும் உபதேசம் பெற்று அனுபவம் கைவந்தபின் "தான் பெற்ற இன்பம் பெறுகவிவ்வையகம்" என்றபடி சில இந்து முஸ்லிம் வாலிபர்களுக்கு அம்முறை களைப் பயிற்றுவிக்கப் பின்னும் அநேக வாலிபர்கள் சீட கோடிகளானுர்கள்.

அப்பொழுது பூபதிகளுக்கு வயது 19 நிரம்பியது. பூபதிகளின் அன்னையார் தமது குமாரர் எங்கே மஸ்தா னுகப் போய்விடுவாரோவென்று மனேவியாகூலமடைந்து விவாகத்திலீடுபடுத்தக் கருதி, பெருநாழியிலும் தந்தநெறி என்ற கிராமத்திலும் பெண் பேச, அதற்கிசைந்த பெண் வீட்டார்களும் அடிக்கடிவந்து பூபதி அவர்கள் விவாக விஷயமாகப்பேச, அதைக் குறிப்பாலுணர்ந்த பூபதிகள் தந்தையாருடன் கலந்து தனக்கு விவாகத்தில் விருப்ப மில்லாமையையும் இந்த நாட்டிலிருக்கப் பிரியமில்லாததை யும் வருந்தித் தெரிவிக்கப் புதல்வர் மனதுக்கு மாறாக நடக்க இஷ்டமில்லாத புலவர் பெருமான் தங்கள் வீடுவாசல்களை விற்றுவிட்டுத் தஞ்சை ஜில்லாவுக்குச்செல்ல எண்ணியிருந் தார்கள். அப்பொழுது கீழ்வேளூர்ப் பக்கமுள்ள அன்பர் களும் பிரமுகர்களும் புலவர் பெருமானைப்பற்றி பற்பல விதமான நற்கனவுகள் கண்டதாகவும், ஆகையால் தங்களூர்ப் பக்கமே வந்துவிடவேண்டுமென்றும் கடிதமூலம் வற்புறுத் தியதின்பேரில் 1906-ளுல்த்தில் பெருநாழியிலுள்ள தங்கள் வீடுவாசல்களையும் நிலங்களிற் சில பாகங்களையும் விற்று விட்டு நாகையையடுத்த அகரக்கடம்பனூரில் தங்களுக் கோரில்லம் அமைத்து பூபதி அவர்களின் தாய் தந்தையர்களுடன் வசித்துவந்தார்கள். 1907-ளுல்த்திலே மானமதுரை முன்சீப் கோர்ட்டுக்கு பெருநாழியில் விற்று வந்த வீட்டு வழக்கில் புலவர்கள் நாயகம் பிரதிவாதியாகச் சென்றிருந்தார்கள். அப்பொழுது முன்சீபாக இருந்தவர்

காலஞ் சென்ற வடிகச்சேரி சௌரிராஜலு நாயுடு அவர்கள். வழக்கு விசாரணைக்கு எடுத்துககொள்ளப்பெற்று பிரதிவாதி அப்துர் றஹ்மான் புலவர் என்று கூப்பாடு போட்டவுடன் புலவர்கள் நாயகம் ஆடம்பரமற்ற சாதாரண கோலததுடன் கோர்ட்டில் நுழைந்ததும், நீதிபதியாகிய நாயுடுகாரு புலவர்கள் நாயகத்தை நோக்கி "புலவர் என்றால் என்ன? வெறும் பட்டப்பெயரா? அல்லது உண்மையிற் புலவரா? அப்படியானல் எதிற் புலவர்" என்று கேட்க புலவர்கள் நாயகம் எல்லாவற்றிலும் சிறிது புலவர்தானென்று புன்முறுவலுடன் கொஞ்சம் தாழ்ந்த குரலில் பதில்கூறினார்கள். ஜட்ஜி அன்று தம்பார்வைக்கு வந்திருந்த வேம்பத்தூரார்கள் பாடிய புதிய இராமாயணம் என்னும் நூலை எடுத்துக் கொடுத்து இதைப்பாருங்கள். இதில் உங்களுக்கு ஏதாவது பொருள் தெரிகிறதா என்றார். புலவர்கள் நாயகம் உடனே அப்புத்தகத்தை வாங்கிக்கொண்டு பக்கத்திலுள்ள சாளரத்தின் ஓரமாய் நின்று புத்தகத்தின் ஒரு பக்கத்தைப் பார்த்துவிட்டு அதை ஜட்ஜியிடம் கொடுத்து அப்பக்கத்திலுள்ள பாடல்களையும் அதன் கருத்துக்களையும் தெள்ளத் தெளிய சர்வ சாதாரணமாய் எடுத்துக்கூற அதைக் கேட்ட நீதிபதி நாயுடுகாரு நீங்களென்ன ஏக சந்தக்கிராகியாயிருக்கிறீர்கள் என்று மெச்சி அவர்கள் கல்வித்திறமை, அடக்கம், பொறுமை, சத்தியம் முதலிய நற்குணங்களை அறிந்து நியாயமான தீர்ப்பளித்ததுமல்லாமல் அவர்களுக்கு நண்பராகவும் ௫ர்.

பூபதி அவர்கள் தங்களில்லத்திற்கு அண்மையில் தமக்ர் யோக அறை அமைத்துக்கொண்டு யோக சாதனையும் காயகற்ப சாதனையும் ஆரம்பித்து வெண் பசும் பாலில் கருங்குறுவை அரிசியும் பாசிப்பயறும் மிளகும் சேர்த்து ஒரே பொழுதுமட்டும் அமுது அருந்தி யோக முயற்சியிலீடுபட்டிருந்தார்கள். இதையறிந்த பூபதி அவர்களின் அன்னையார் தங்குமாரர் இவ்வாறு ஒருபொழுது அமுது அருந்தி யோகியாயிருக்கத் தான்மட்டும் முப்பொழுதும் அன்னமருந்திக்கொண்டிருக்க மனமொப்பாதவர்களாய்

டகளை எவ்வாறேனும் இல்வாழ்க்கையிலிருத்திவிட வேண்டுமென்றுகருதி தட்புதல்வரை விவாகம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்திவரலானார்கள்.

நமது பூபதிகள், "தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை" என்ற முதுமொழியைப் புறக்கணிக்க முடியாமலும் விவாக விலங்கிற் சிக்கிக்கொள்ள அஞ்சியும் தாங்களே ஓர் சந்தர்ப் பத்திற் கூறிய:—

இளம்பிடி மாதரால் இருதலைக் கொள்ளி
எறும்பு போலானாய் எனிந்தப் புள்ளி
எளியவர் பாவத்தை இருகையால் அள்ளி
ஏதுமறியா விளங் கன்றுபோல் துள்ளி

(மயங்குவதேன் மனமே)

என்றவாறு இருதலைத்தீயுள்ளெறும்பெனக் கலங்கி சம்சாரத் தொல்லையில் அகப்பட்டுக்கொள்ளாமற் றப்பித்துக்கொள்ள எண்ணித் தங்கள் பிதாவிடம் விடைபெற்றுக் கொண்டு 1907-வருஷத்தில் பூபதி அவர்கள் தங்கள் சகோதரர் ஷம்சுதீன் என்பவருடன் இரங்கூனுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

இரங்கூனில் பக்கோவுக்கு அடுத்த பயிப்பியா என்னும் ஊரிலிருந்துகொண்டு றசூலுல்லாவின் மீது **சுகானந்ததீபம்** என்னும் கீர்த்தனை நூலை இயற்றியருள அதை விருப்புடன் ஏற்று வீரசோழன் காதிர் முஹியித்தீன் லெப்பையால் அச்சியற்றி வெளியிடப்பெற்றது. பின்னர் 1908-ல் இரங்கோன் **கம்பை வழிநடைச்சிந்தும்** நபி நாயகத்தின்மீது **திருஞானப்பிரகாச தீபம்** என்னும் கீர்த்தனைநூலையும் இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்தி 1908-வருஷ இறுதியில் சுதேசம் திரும்பினார்கள்.

சிலமாதங்களுக்குப்பின்னர் தாயார் விவாகத்துக்கு முயற்சிக்க மறுமுறையும் 1909-வருஷத்தில் இரங்கூன் சென்று தமது சீடரும் ஆப்த நண்பருமாகிய பெருநாழி பீ. இ. முஹம்மது மீரான் கனி சாகிபு [illegible]

விருப்பத்தின்படி சில நாள் தங்கியிருந்தார்கள். அதன் பின் இரங்கூன் கிழக்குப்பாகத்திலுள்ள டாக்கிங் இஞ்சினீரிங் (Rangoon Docking Engineering Co. Ltd) கம்பெனியில் ஆறு மாத காலம் வேலைபார்த்துக்கொண்டிருக்கும்போது நபிகள் நாயகத்தின்பேரில் சங்கீத மஞ்சரி என்னும் கீர்த்தனை நூலை இயற்றினார்கள்.

## பூபதிகள் போதனு சக்தி.

அங்கிருக்கும்பொழுது ஒரு நாள் ஜெயிலா என்னும் ஊருக்குப் போய்வரவிரும்பி தம் அன்பர்களுடன்புகைக்கப்பல் புறப்படுமிடத்துக்குச் சென்றார்கள். கப்பல் இவர்கள் வரச்சற்றுமுன்பே புறப்பட்டதாக அறிந்து பூபதி அவர்களுடன் வந்தோர் சற்று சஞ்சலமடைய, இதுவும் ஒரு நன்மைக்கே எனப் பூபதி அவர்கள் கூறி அங்கே தயாராகயிருந்த ஸ்டீம்லாஞ் (Steam Launch) சில் முன் பின் சென்றறியாத கோர்ட்டுத் தப்பிக்கான் என்னும் கிராமத்திற்குச்சென்று, அங்குள்ளார் பலருடன் சம்பாஷிக்கப் பூபதி அவர்களின் பெருமையையுணர்ந்த க. குழந்தைச்சாமி பிள்ளை என்பார் பூபதி அவர்களின் முக்கிய சீடர்களில் ஒருவரானார். அன்றியும் அவ்வூரில் படிப்புவராத பிள்ளைகளென்று உபாத்தியாயர்களால் கைவிடப்பட்ட சில பிள்ளைகட்கு ஒரே வருஷத்தில் நல்ல கல்வி ஞானம் உண்டாக்கிவிடுவதென்றும், பிள்ளை 1-க்கு வருஷத்துக்கு 100 ரூ. வீதம் கொடுப்பதென்றும் பேசிக்கொண்டு, சுமார் பத்துப் பன்னிரண்டு மாணுக்கர்களுக்கு ஒரு வருஷத்திற்குள்ளாகவே நான்காவது வகுப்பு வரையிற் படித்த மாணுக்கனுக்கு ஒப்பாகக் கல்வி ஞானத்தை உண்டாக்கிவிட்டார்கள். இதையறிந்த பலரும் பூபதி அவர்களின் போதனுசக்தியை வியந்து கொண்டாடினார்கள். 1910-ஸு ஆரம்பத்தில் இவ்வொப்பந்தப் பள்ளிக்கூடம் முடிவடைந்தது. இவ்வாறுகப் பலருக்கு கல்வியயிற்றுவித்தும் நல்லுபதேசம்புரிந்துகொண்டு மிருந்தார்கள். அக்

காலத்தில் அதாவது 1911 வருஷத்தில் மாதுசிரோன்மணி யாகிய சாரூபீவி அம்மாள் தம் அருமைக்கணவர் புலவர் நாயகம் அவர்கள் பெருநாழிக்குப் போயிருக்கவும், தம் புதல்வராகிய பூபதி அவர்கள் இரங்கூனிலிருக்கவும் கீழ்வேளூரில் தம் பூதவுடலைவிட்டுப் பிரிந்தார்கள்.

## சூட்சும சரீர வன்மை.

இவர்கள் இறந்த செய்தி தந்தி மூலம் கணவருக்கும் புதல்வருக்கும் தெரியப்படுத்தினார்கள். தந்திச் செய்தி வருமுன்னரே தம் மனோசக்தியாலறிந்த புலவர் நாயகம் ஊரினின்றும் புறப்பட்டு அருப்புக்கோட்டைமார்க்கமாக மதுரைக்கு வந்து சேர்ந்து கீழ்வேளூர் வருவதற்காக போட் மெயிலுக்கு டிக்கட்டுக்கேட்டார்கள். கூட்ட மிகுதியால் டிக்கட்டும் கிடைக்கவில்லை. போட் மெயிலும் புறப்பட்டு விட்டது. சிறிதும் மனஞ்சலியாமல் தங்கள் சூக்கும சொரூப சக்தியுடன் தூல சொரூபத்தையும் பிணைத்து உடனே புறப்பட்டு போட் மெயில் வருவதற்கு முன் பாகவே திண்டுக்கல் வந்து டிக்கட் வாங்கி அதே போட் மெயில் வண்டியிலேறி கீழ்வேளூர் வந்து சேர்ந்தது ஆச்சரியம்! அற்புதம்!

தம் அன்புக்கு உறைவிடமான அன்னையார் இவ்வுலக வாழ்வை நீத்தார்கள் என்ற தந்திச் செய்திகேட்டு பூபதிகள் இரங்கூனிலிருந்து கீழ்வேளூருக்கு வந்து சேர்ந்தார்கள்.

## அரும்பு கோணில் அதுமணம் குன்றுமோ.

பத்தாவுக்கேற்ற பதிவிரதா சிரோமணியாயும், தந்தை யாரை யொப்பாகவே கேள்வி ஞானத்தால் சிறந்த அறிவின ராயும், குர்ஆன் முதலிய அரிய நூற்களின் கருத்துக்களையும், சீராப்புராணம் ஒசியத்து முதலிய நூற்களையுமநன் குணர்ந்து பிறருக்குப் போதிக்கும் சக்திவாய்ந்த தம் பேரன்புக்குப்

பாத்திரராயும் விளங்கிய அன்னையாரைப் பிரிந்த துயரம் ஆறுவதற்குள்ளாகவே தம் அருமைச் சோதரியும், தம் தாயைப் பின் தொடர்ந்தார்களென்று கூறும்படி இவ்வுலகை விட்டுப்பிரிய நேர்ந்தது. இவ்வாறு தமதுபிதாவின் தளர்ந்த காலத்தில் உபசரிப்பாரின்றித் தம் தாயும் தங்கையும், இறந்து போகத் தம் குடும்ப காரியங்களைப் பொறுப்பேற்றுத் தானே நடத்தவேண்டியதாயிற்று. அத்துடனில்லாது பூபதிகளும் பிதா முதலானவர்களும் சேர்ந்து சமையல் செய்யும் வேலையில் ஈடுபடவேண்டியுமிருந்தது. இந்நிலையில் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் புலவர் பெருமான் தம் புதல்வராகிய பூபதி அவர்களை விவாகம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தி இல்லறவாழ்க்கையின் பெருமையையும், மனைவிமக்களோடு கூடிவாழும சிறப்பையும், இல்லறத்திலேதான் எளிதில் நாற்பயனையும் அடையக்கூடுமென்பதையும், இஸ்லாமிய மதம்இல்வாழ்க்கையிலிருந்தே சந்நியாசத்தில்ஈடுபடவேண்டுமென்று போதிப்பதாயும், அநேக ஒலிமார்கள் யோகம் முடிந்த பின்னரே கலியாணம் செய்து கொண்டிருக்கிறார்கள். நபிகள் நாயகம் 11 மனைவியர் 40 விலைப் பெண்கள் (சுர்ரியத்) இவர்களுடன் கூடி வாழ்ந்திருக்கின்றார்கள். ஆகவே, நீ யோகசித்தி பெற்றிருப்பதால் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்பதாயும் உபதேசம் செய்து வந்தார்கள். இவைகளைக் கேட்டும் இல்வாழ்க்கையில் விருப்பமே இல்லாதிருந்த பூபதி அவர்களை, தந்தையார் ஒரு நாள் அன்புடனழைத்துப் பல விஷயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்து, கடைசியாக தம்பி! நீ இதுகாறும் என் வார்த்தைகளைத் தட்டியதில்லை. இனியும் தட்டமாட்டாய் என்று நினைக்கிறேன். இது உண்மைதானே என்று வினயமாகக்கேட்க, இன்னதென்றறியாத புதல்வர், புதிதாகத் தாங்கள் இவ்வாறுகேட்பது எனக்கொன்றும் விளங்கவில்லையே? என்றார்கள். பிதா என்வார்த்தையைத் தட்டுவதில்லை என்பது உறுதி தான் என்று வெளிப்படையாகக் கூறுவதில் உனக்கு குற்றமொன்றுமில்லையே என்றார்கள் அதைக்கேட்ட ஞானபூபதிகள் தந்தையாரின் மனம் நோகச்

சம்மதியாது, தங்கள் வார்த்தையையே எப்பொழுதும் பெரிதாகமதிப்பேன் என்றார்கள் இதைக்கேட்ட பிதா அவர்கள், அப்படியானால் நான் சொல்லுகிறபடி விவாகம் செய்து கொண்டு இல்வாழ்க்கையை ஒழுங்குற நடத்திவருவாயாக, இல்லறத்தோடு அனுஷ்டித்துவரும் யோகமார்க்க நுட்பங்களை இன்னும் அதிகமாகப் போதிக்கின்றேன் என்றார்கள்.

இதைக்கேட்டு பூபதி அவர்கள் பெரிதும் திடுக்கிட்டாலும், தம்மை ஈன்றுவளர்த்த பிதாவாகவும், ஞான பிதாவாகவும் விளங்கும் வயது முதிர்ந்த தந்தையின் வாக்கை எவ்வாறு மறுக்க இயலும் "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற வாக்கைக் கடைப்பிடித்து, வெகுநேரம் சென்று, "தங்கள் முழுஇஷ்டம் அதுவானால் யான் வேறென்ன செய்யவிருக்கிறது" என்று மௌனமாக இருந்தார்கள்.

## இல்லறமே நல்லறம்.

1911-ம் வருஷம் றஜபு மாதத்தில் ஓர் சுபதினத்தன்று உயர் குணங்களாற் சிறந்த உத்தமப் பத்தினியாம் சபூர்பீவியம்மாளை விவாகம் செய்துவைத்தார்கள். அது காலை மனைவியார் இளவயதினராய் பெதும்பைப் பருவத்தினராயிருந்தபடியால் தன் வீட்டிலும், தாயார் வீட்டிலுமாக இருக்கும்படி செய்து விட்டு 1912ம் வருஷத்தில் கீழ்வேளூருக்கு அடுத்துள்ள ஓதியத்தூரில் சில கனவான்களின் வேண்டுகோளுக்கிணங்கி முக்கியமான சில குழந்தைகளுக்கு கல்வி பயிற்றி வந்தார்கள். அம்மாணாக்கர்களில் ஒருவர் இப்பொழுது (கி. பி. 1933-34-ல்) சிவகங்கை ஜமீன் ஹைஸ்கூலில் தலைமை உபாத்தியாய (Head-master) ராக இருக்கும் Professor O. K. சீனிவாச முதலியாரும், மற்றொருவர் சென்னையில் பிரபல சங்கீதவித்துவானாக இருக்கும் ஓதியத்தூர் தங்கப்பா என்கிற மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் பிரதானமாணவர்களாவார்கள்.

கீழ்வேளூருக்கு மேல்புறமாயுள்ள ஒதியத்தூரில் பள்ளிக்கூடம் நடத்திவருங் காலங்களில் பூபதி அவர்கள் ஒரு நாள் திருவாரூரிலிருந்து கீழ்வேளூருக்கு ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்பொழுது அவ்வண்டியில் உடனிருந்த இலுப்பூர் மாணிக்க முதலியார் என்பவரும் மற்றும் சிலரும் பொது விஷயங்களைப்பற்றிப் பேசுமிடையில் அறிவு சாதியைப் பொறுத்ததென்று கூறி, உதாரணமாகச் சில வகுப்பினரைக் குறிப்பிட்டு முக்கியமாக முஸ்லிம்களையும் குறிப்பிட்டுப் பேசிவந்தார்கள். இவைகளைப் பக்கத்திலிருந்து கேட்டுக்கொண்டிருந்த பூபதிகள் அவர் கூற்றை மறுத்து பிறப்பினால்தான் அறிவுண்டாகிறதென்று கூறவே முடியாது என்று சொன்னார்கள். முதலியார் கொஞ்சம் சினந்து முஸ்லிமாகிய உமக்கு இவ் விஷயங்களைப்பற்றி ஒன்றுந்தெரியாது, நீரிதிற் கலந்து கொள்ளவேண்டாமென்று சொல்லவே, பூபதிகள் அவர்கட்குத் தக்க புத்தி கற்பிக்கவேண்டுமெனக் கருதி, நீங்கள் பேசியது பொதுவிஷயமே ஆதலின் அதற்குத் தக்க சமாதானங்கூற எனக்கும் உரிமையுண்டு நீங்கள் கூறிய அறிவும் பொதுவானதே ' அறிவை ஒரு சாதியினர்க்கு மாத்திரம் சிறப்புரிமை கூறமுடியாது எல்லா வகுப்பிலும் அறிவுடையோருமிருக்கிறார்கள் அறிவில்லாதாருமிருக்கிறார்கள் ஆனால் அறிவு எல்லாரிடையும் பொதுவாகக் காணப்பட்டாலும் அவரவர்கள் கூடும் கூட்டத்திற்கு (சிநேகத்திற்கு) தக்க அறிவே பிரகாசிக்கின்றது. இது பற்றியே ஆங்கிலப் பழமொழிகள் "Tell me your friend and I will tell you what you are. "If you want to know the character of a man see who his friends are" என்று கூறியுள்ளன. "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு" என்று கூறியுள்ளபடி ஒரே தன்மையான மழைத்துளி, தான் விழும் நிலத்தின் இயல்புக்குத்தக்கவாறு சிவப்பாயும்

வெண்மையாயும், உவர்ப்பாயும் கலங்கலாயும் போய்விடுவது போல், தாங்கள் பழகும் இனத்திற்குத்தக்க அறிவேயன்றி சாதிக்குத்தக்க அறிவு என்பதில்லை. இன்னும் "நாற்பாற் குலத்தில் மேற்பாலொருவன் கற்றிலனாயிற் கீழிருப் பவனே" "கல்லாவொருவன் குலநலம் பேசுதல் நெல்லி னுட் பிறந்த பதராகும்மே" "எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற் கற்றோரை வருக வென்பார்"

"தாமரைபொன் முத்து சாமரைகோ ரோசனைபால்
பூமருதேன் பட்டு புனுகுசவ்வா—தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளார்கள் நல்லோர்கள்
எங்கே பிறந்தாலு மென்"

என்று பெரியோர் கூறியிருப்பதையும் கவனியுங்கள் என்று சாங்கோபாங்கமாகத் தக்க காரணங்கூறி அறிவு ஜாதியைப் பொறுத்ததல்ல என்பதை நிலை நிறுத்திப் பேசினார்கள். அதைக்கேட்ட முதலியார் கோஷ்டியினர், இவ்வளவு இள மையில் நல்ல தமிழ்ப் புலமையுடையவராக விளங்கும் இவர் யாவரென்று வினவி, இவர் கீழ்வேளூர் புலவர்கள் நாயகம் அவர்கள் குமாரரென்று அறிந்து வியந்து கொண் டாடினார்கள். இவ்விவாதத்தைக் கேட்டுக்கொண்டு பக்கத்தி லிருந்த கானாடுகாத்தானுக்கடுத்த சொக்கனேந்தல் வாசி யாகிய சு. வீர. சுப்பிரமணியன் செட்டியார் என்பவர், ஒரு முஸ்லிம்வாலிபர் இவ்வளவு கல்வி அறிவும், சொல்வன்மையும் உடையராயிருப்பது மிகஆச்சரியமே, என்று பூபதிஅவர்கள் மீதுமிக்க அன்பு கொண்டு அவர்கள் ரயிலிலிருந்து கீழே இறங்குந்தறுவாயில் பூபதிகளுடைய விலாசத்தைக் கேட்டு எழுதித் தெரிந்துகொண்டு போயினர்.

## மலையுடன் புயவலிமை.

1913-ம் ஆண்டில் கீழ்வேளூரில் தங்களுக்கென வோர் வீடு வாங்கிக்கொண்டு பூபதிகளும் அவர்கள் தந்தையார் அவர்களும் வசித்து வரும்பொழுது அவ்வருஷக் கடைசியில்

இரங்கூன் கோர்ட்டுத்தப்பிக்கானிலிருந்து பின்னும் சில மாணவர்களுக்குக் கல்வி போதிக்கும்பொருட்டு அவசியம் வரவேண்டுமென்று அங்குள்ள அன்பர் சிலர் கடிதமெழுதி அழைக்க கோர்ட்டுத்தப்பிக்கானில் பூபதி அவர்கள் பள்ளிக்கூடம் வைத்திருந்தபொழுது குழந்தைசாமி பிள்ளையின் சகோதரர் க. சின்னச்சாமி பிள்ளை என்பார் தங்கள் தமையனார் குழந்தையாகிய நாராயணசாமிக்குச் சரியான கல்வி போதிக்கப்பட்டிருக்கிறதா என்று பரீட்சிக்கவும், பூபதி அவர்களின் கல்வித்திறமையை அறியவும் எண்ணங்கொண்டு, பூபதிகளிடம் வந்து நமது பள்ளிக்கூடத்தை சர்க்கார் உதவிபெற்ற பாடசாலையாக்க ஸ்கூல் இன்ஸ்பெக்டரைக்கொண்டு சிபார்சு செய்யச் சொல்லலாமா என்று வினயமாய்க் கேட்க, பூபதிகள் நான் ஒப்புக்கொண்ட ஒரு வருஷமும் முடிவடையப்போகிறது மறுபடி நானிங்கிருப்பது நிச்சயமல்லவே என்றார்கள். தாங்களில்லாவிட்டாலும் பிற்பாடு வருகிறவர்களுக்காவது உதவியாயிருக்குமே என்று கூறி க. சின்னச்சாமி பிள்ளை இனஸ்பெக்டரை ஸ்கூலுக்கு அழைத்து வந்தார். பூபதிகள் தாங்களிருந்தபடியே இனஸ்பெக்டரை வரவேற்று அவருக்கோராசனம் அளிக்கச் செய்து பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு இன்ஸ்பெக்டர் பையன்களை பரீட்சிக்கும் முறையில் பூபதிகளையே சில பையன்களுக்கு பாடம் சொல்லி எழுதித்திருத்தும்படி கூற அவ்வாறே பூபதிகள் டிக்டேஷன கொடுத்து எழுதிய பிறகு கற்பலகையை வாங்கி சரியென்று பார்க்காமலே எழுதிவைத்தார்கள். அதை வாங்கிப்பார்தத இன்ஸ்பெக்டர் சரியாகவே இருக்கக்கண்டு ஆச்சரியமுற்றாராயினும் அதை வெளியிட்டுக்கூறாமல் தம்மைக் கண்டவுடன் (பூபதிகள்) உபாததியாயர் எழுந்துநின்று மரியாதை செய்யவில்லை என்ற குறும்புத்தனத்தை மனதிலடக்கிக்கொண்டு வேறு விஷயங்களைப்பற்றிச் சிறிது பேசியிருந்துவிட்டு பூபதிகளைப் பார்த்து ஆயினும் உம்மைப்போன்ற அகம்பாவம் பிடித்த உபாத்தியாயர்களை நானிதுவரையில் பார்த்ததில்லை என்றார்.

பூபதிகள்:— ஆம்! எங்களைப்போல் ஒருவித அகம் பாவம் பிடித்த உபாத்தியாயரைப் பெரும்பாலும் பார்த்திருக்கமாட்டீர்கள்தான்.

இன்ஸ்பெக்டர்:— என்ன காரணத்தினாலோ!

பூபதிகள்.— உங்களைப்போன்ற சில இன்ஸ்பெக்டர் களுக்கு என்ன தெரியும் என்ற காரணந்தான்.

இன்ஸ்.— எந்த விஷயத்தில் தெரியாதென்று கூறு கிறீர், ஆங்கிலத்திலா? தமிழிலா?

பூபதிகள்:— ஆங்கிலத்தைப்பற்றி நான் பேசவர வில்லை.

இன்ஸ் — தமிழிலாவது பேசிப்பார்ப்போமே.

பூபதிகள்:—பேசிப்பார்க்கலாம். ஆனால் நான் கேட்கு விஞக்களுக்கு உங்களால் விடையளிக்க இயலாது என்று எண்ணுகிறேன்.

இன்ஸ்:— உமதிடமிருக்கும் அகம்பாவம் ஒருவிதம் என்று கூறினீரே அந்த அகம்பாவம் எத்தன்மையது?

பூபதிகள்:— அது தங்களுக்கு விளங்குமோ விளங் காதோ என்றுதான் அவ்வாறு கூறினேன். அஃதாவது சாதாரணமாக உலக மக்கள் நான் செய்தேன் நான் கொடுத்தேன் எனக்கூறுவது தாமத குணத்தின்றோன்றிய பூதாதி அகம்பாவம். பூலோகத்தில் விளையும் தீங்குகளெல் லாம் இந்த அகம்பாவத்தினாலேதான். சகலஆன்மாக்களையும்

முத்தியடையாமல் தடுப்பதும் இந்த அகம்பாவமே. எங்களிடமுள்ள அகம்பாவமோ பரமாகம்பாவம். இது சாத்விக குணமிகுதியால் உண்டானது. பிரம்மம் என்னும் சமுத்திரத்தினின்று முண்டாகிற முதல் அலைக்கு தைசசமென்னும் பரமாகம்பாவம் என்று கூறுவர். சகல உலகங்களும் அவற்றினுள்ள சராசரப்பொருள்களும், பரமான்மாவும் நாமே. நமக்கன்னியமாக யாதொன்றுமில்லை. நம்மையன்றி ஒரு பாவனையுமில்லை. நாமே முடிவில்லாமலிருக்கிறோம் என்னும் அபேதநிலையே பிரம்மாகம்பாவம் ஆகும். அல்லாமலும், ஒரு இன்ஸ்பெக்டர் ஒரு உபாத்தியாயரைக் கேள்வி கேட்டுத்தெரியவில்லை என்றால் அது உபாத்தியாயருக்கு அவமானமில்லை. ஒரு உபாத்தியாயர் ஒரு இன்ஸ்பெக்டரைக் கேள்வி கேட்டுத் தெரியவில்லை என்றால் அஃதொரு பெருத்த அவமானத்தோடு, இந்தப் பிராந்தியத்தைவிட்டுப் போய்விட நீங்கள் கருதநேரிடும் என்று கூறிவிட்டுச் சிறிதுநேரம் பூபதிகள் வெளியிற் சென்றார்கள். அதற்குள் இன்ஸ்பெக்டர் அங்கிருந்தவர்களிடம் பூபதிகளின் பெருமையைக் கேட்டறிந்து, தனக்குச் செய்யுள் எழுதும் ஆற்றலிலும், யோகஞான மார்க்கங்களிலும் பயிற்சி இல்லாததால் பூபதி அவர்களிடம் வாதம் செய்து செயிக்கல் முடியாதகாரியம் என்றுணர்ந்து பூபதிகளிடம் நட்புக்கொண்டு உபதேசமும் கேட்டு அப்பியசிக்கலானார்.

இதைக்கேள்வியுற்று தப்பிக்கானிலுள்ள ஆனையூர் முஸ்லிம்கள் தம்மினத்தவரொருவர் இவ்வாறு கல்வியிற் சிறப்புடையவர்களாக விருப்பதற்குப் பெரிதும் மகிழ்ந்து பூபதிகளைப் பாராட்டி வந்தார்கள்.

1914-௵த்தில் அதாவது ஐரோப்பிய மகா யுத்தம் ஆரம்பிப்பதற்கு முதல் (ஏப்ரல்) மாதம் பூபதிகள் இரங்கூனிலிருந்து கீழ்வேளூருக்கு வந்து சேர்ந்து, சில மாதம் வரையில் அவ்வூர் அருணாசல முதலியாருடைய எலிமென்டரிப் பாடசாலையில் உதவி ஆசிரியராக இருந்துகொண்டு பள்ளிக்கூடத்திலுள்ள எல்லா வகுப்பு மாணவர்

களுக்கும் அறிவு வளர்ச்சிக்கேற்ற புதிய புதிய கதைகளும், பாடல்களும் இயற்றிப் போதித்து வந்தார்கள். அக்காலத்தில் மாதந்தோறும் நாகப்பட்டணத்தில் நடக்கும் ஆசிரியர் கூட்டத்திற்கு ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டர் சுற்றறிக்கையின்பேரில் ஒவ்வொரு ஸ்கூலிலுமிருந்து ஒரு உபாத்தியாயர் செல்லும் வழக்கப்படி பூபதி அவர்கள் ஒருமுறை ஆசிரியர் கூட்டத்திற்குச் சென்றிருந்தார்கள். அப்பொழுது கூட்டத்திற்குத் தலைமை வகித்த ஸ்கூல் இன்ஸ்பெக்டர் எழுந்து பேசுகையில் "இச்சபையில் ஆங்கிலம் பயின்றவர்களும் பயின்றுதவர்களும் குழுமியுள்ளார்கள்" என்று கூறினார். உடனே பூபதிகள் எழுந்து தமிழ்மொழியில் ஆர்வங்குன்றி ஆங்கிலத்தையே பெரிதும் விரும்பிக் கற்பதனால் ஏற்படுங் குறைகளுக்கு நமது இன்ஸ்பெக்டர் அவர்கள் பேச்சே உதாரணமாயிருக்கிறதென்பதைப் பார்த்தீர்களா? பயின்றவரும் பயிலாதவரும் என்று கூறவேண்டியதற்கு பயின்றவரும் பயின்றுதவரும் என்று கூறினார்கள் என்று தைரியமாகக்கூற அதை எல்லோரும் ஒப்புக்கொண்டு பூபதிகளின் தமிழ் ஆர்வத்துக்கும், தைரியத்துக்கும் மெச்சி வியந்தார்கள்.

பின்னர், பூபதிகள் சுமார் ஆறேழுமாதம் வரையில் உபாத்தியாயராக இருந்து வருங்காலத்தில் அவரையானந்தர் என்றொருவர் பக்கத்திலுள்ள குருவிப்பாடிக்கு வந்திருப்பதாயும், அவர் ஒரு பெரிய மஹானென்றும் கூறிப் பல ஜனங்கள் அவரிடம் போய் வந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது பூபதி அவர்களும் அக்கூட்டத்திலொருவராய்ச்சென்று பார்த்து வந்தார்கள். பிறகு 1915-ளு த்தில் அவர் திருவாரூருக்குக் கீழ்பாலுள்ள மருதம்பட்டினத்தில் பிரபலமாயிருந்துவரும் முத்துச்சாமி நாடார், ஆறுமுக நாடார் முதலியோருடைய வீட்டில் வந்திருந்தபோது சந்தித்துப் பேசினார்கள். அவர் பெரும்பாலும் உலகத்தாரை மயக்குந்தன்மையராயும், உலகத்தார் இறுதியில் வெறுக்குந்தன்மையராயு மிருந்ததால் எங்கே தமது குட்டை பூபதிகள் வெளியாக்கிவிடுவாரோ என்று அஞ்சி உபசரித்

தார். ஞானபூபதிகளும் அவ்வூரை விட்டுவிலகி, தென்பாலுள்ள புலிவலம் மார்க்கமாகச் செல்லும்போது அவ்வூர் தனுக்கோடியா பிள்ளை பெரிதும் விரும்பியபடி கந்தப்புகழ், திருப்பாவணி, முருகப்புகழ், தெய்வப்புகழ், காவடிக்காட்சி, முருகர் தியானம் என்னும் நூற்களை இயற்றிக்கொடுத்து சிலகாலம் புலிவலத்தில் தங்கியிருந்தார்கள்.

1916-ஞூ த்தில் ஒருநாள் பூபதிகள் திருவாரூருக்கு மேற்கேயுள்ள கோடிமங்கலம் என்னும் கிராமத்தின் வழியாகச் செல்லும்போது சோழகச்சேரி சு. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் கண்டு பக்கத்திலுள்ள கோவிலுக்கு அழைத்துச்சென்று, முத்துச்சாமிக்குருக்களால் தாகசாந்தி செய்துவைத்துக்கொண்டிருக்கையில், அடியார்க் கன்பர்களாகிய அவ்வூர் சு. விருத்தாசலம் பிள்ளை, கோவிந்தசாமி பிள்ளை, கர்ணம் இராமசாமி முதலியார் முதலானவர்களும் வந்துசேர, பூபதிகளை இன்னாரென்று தெரிந்துகொண்ட அவர்கள் பூபதிகளைச் சூழ்ந்துகொண்டு அன்புடன் உபசரித்து, சுவாமிகளே! ஐப்பசி மாதம் பிறந்து பல தேதிகளாகியும், இன்னும் மழை பெய்யாமல் பயிர்களெல்லாம் வாடுகிறதே என் செய்வோம் என்று வருந்திக்கூற உடனே பூபதிகள்,

பான்மறந்து மறவாத பருவக்குழவிகள்போல்
ஊன்மறந்து மன்பதைகள் உயிர்மறந்து வாடுகின்றார்
தேன்பிறந்த எங்கோன் திருவருளை யுன்னியிவண்
வான்பிறந்த எழிலிகாள்! மழை பெய்வீர் பெய்வீரே

என்ற பாடலைக்கூற, அன்றே சப்த மேகங்களும் ஒன்று சேர்ந்து பொழிவதுபோல் சுமார் ஒரு மணி நேரம் கனத்த மழை பொழிந்து எங்கும் வெள்ளம் பெருகியது. அங்குள்ளார் பலரும் பூபதிகளிடமுள்ள தெய்வீகத்தன்மைக்குப் பெரிதும் வியந்து பாராட்டினார்கள். அன்றிரவு அவ்வூரிலுள்ள பக்தர்கள் கனவில் முருகபிரான் வந்து தோன்றி, பூபதிகளின் தன்மைகளைப்பற்றி வியந்து கூறியதாக ஒவ்வொருவரும் கலந்து பேசிக் கொண்டதுடன்

பூபதிகளை புஷ்பப் பல்லக்கில் ஊர்வலம் செய்விக்க வேண்டுமென்றும் யோசித்தார்கள். அது விஷயந்தெரிந்த பூபதிகள் அவ்விதப் பெருமையொன்றும் தமக்கு வேண்டாம், எல்லாம் ஆண்டவன் பேரருளேயன்றி வேறில்லை என்று கூறி அதற்காகச் செலவிடும் பொருளை ஆண்டவன் விஷயத்தில் செலவு செய்யும்படி செய்துவிட்டார்கள். அதுமுதல் அவ்வூர் சு. விருத்தாசலம் பிள்ளை என்பவர் பூபதிகளிடம் தம் உயிரையும் கொடுத்துதவக்கூடிய பேரன்பு பாராட்டி வரலாயினர்.

1917-ஹூத்தில் நமது பூபதிகள் கோழியங்கலம் விருத்தாசலம் என்பவர் வீட்டிலிருந்து ஞானக்கிரமஞ்சரி என்னும் ஒரு நூலை இயற்றிக்கொண்டு அவ்வூர் கர்ணம் இராமசாமி முதலியாருக்கு பாடலைக்காரியத்துப் பொருள் சொல்லிவரும் காலங்களில், திருமணிக்குப்பம் R. S. வீரப்ப பிள்ளை என்பவர் பூபதிகளிடம் அடிக்கடி வந்து அன்பு பாராட்டித் தமது இல்லத்துக்கு அழைத்துப் போய் பிரசங்கங்களை என்னும் நாமத்துப் பொருள் கேட்டு வந்தனர். அக்காலத்தில் பூபதி அவர்களிடம் மிக அன்புடையவராகிய J. கலியபெருமாள் நாயுடு என்பவர் ஒருநாள் வயல் பக்கம் சென்றபோது பாம்பு கடித்து விஷம் தலைக்கேறி எவ்வளவோ சிகிச்சை செய்தும் பயன்படாமல் மயங்கி வீழ்ந்திருக்கையில் இப்பொழுது சுவாமி (ஞானபூபதிகள்) வந்தால் பிழைப்பேனென்று கூறிப் பிரக்ஞை இழந்தார். ஞானபூபதிகள் அன்று பகல் திருவாரூரில் பல அன்பர்களுடன் தங்கியிருந்து இரவு 8 மணிக்கு திருநெல்லிக்காவலுக்குப் போகவேண்டுமென்று கூறி அன்பர் கூட்டத்துடன் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தார். அன்பரொருவர் திருநெல்லிக்காவலுக்கு டிக்கெட்டு வாங்கி வர பூபதிகள் திருமதிக்குன்னம் போகும் ரயிலில் ஏறி உட்கார்ந்துகொண்டார்கள். அன்பர்கள், இந்த வண்டி திருநெல்லிக்காவல் போகிறதல்லவே என்று கூறியுங் கேளாமல் தாங்கள் திருமதிக்குன்னந்தான் போகவேண்டுமெனக் கூறக்கேட்ட அன்பர்கள் திருமதிக்குன்னத்துக்கு டிக்கட்டு

வாங்கிக்கொடுக்கத் திருமதிக்குன்னத்தில் வந்து இறங்கினார்கள். அங்கு பூபதிகளைக்கண்ட பல அன்பர்கள் தங்கள் தங்கள் இல்லத்துக்கு வரவேண்டுமென்று பெரிதும் விரும்பியழைக்க, அவர்கள் எவருடனும் போக மறுத்து கலிய பெருமாள் நாயுடு வீடிருக்கும் திசையை நோக்கியவண்ணமே யிருந்தார்கள். அச்சமயம் கலியபெருமாள் நாயுடு விஷந்தலைக்கேறி இறந்ததாகக்கருதிய அவர் தமக்கை, மனைவி முதலானவர்கள் அழுது புலம்பிப் பின் ஆகவேண்டிய காரியங்களைப் பார்க்கவேண்டியதுதான் என்று முடிவு செய்து திருச்சிக்கும், கீழ்வேளூருக்கும் அவசரமாகத்தந்திகொடுக்க கொரடாச்சேரிக்கு ஆள் அனுப்பியிருந்தார்கள். அந்த ஆள் திருமதிக்குன்னம் ரயில்வே ஸ்டேஷன் வழியாகச் செல்லும்பொழுது பூபதிகள் அவசரமாகச் செல்லும் அவ்வாளைக்கூப்பிட்டு விசாரிக்க, கலியபெருமாள் நாயுடு இறந்து போனாரென்று தெரிவித்து "தங்களுக்குத் தந்திகொடுக்க வே போகிறேன் கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல் வந்தீர்களென்று" கூறி வருந்தி நின்றான். பூபதி அவர்கள், அவனுக்குத் தேறுதல் கூறி அவனையும் அழைத்துக்கொண்டு கலியபெருமாள் நாயுடு வீட்டுக்குச் சென்று பார்க்க, நாயுடு சுவாசம் அடங்கியிருக்கக்கண்டு பூபதி அவர்கள் தமது ஆத்ம சக்தியால் விஷமிறங்கச் செய்து பிழைப்பிக்க, நாயுடு நித்திரை தெளிந்தவர்போல எழும்பிப் பேசியதைக் கண்ட அவர் தமக்கை, மனைவி முதலிய பலரும் ஆச்சரியமும், ஆனந்தமும்கொண்டு பூபதி அவர்களை வியந்து பாராட்டினார்கள்.

அவ்வாறு பற்பல அற்புதங்களைச்செய்து சஞ்சரித்து வருங்காலத்தில் யோக சாதனங்களில் பெரிதும் ஈடுபட்டு ஆனந்திப்பதற்கு ஏற்ற இடத்தை நாடி சேந்தமங்கலத்துக்கு அடுத்த பள்ளம் பாறைக்குச் சமீபமுள்ள கொல்லி மலைக்குச் சென்று அங்குள்ள குகையொன்றில் ஏகாந்தமாக சிலகாலம் நிட்டைகூடியிருந்து அம்மலைச்சாரிலுள்ள காடுகளிலிருக்கும் அரிய பெரிய விருக்ஷங்களையும், மூலிகைகளையும் கண்டறிந்தார்கள். அக்காட்டில் கன எருமை

என்றதோர் விருட்சம் அதன் பட்டையைச் சீவின மாத்திரத்தில் பால் வடிவதில்லையாம். பட்டையைச் சீவினபிறகு எருமைக்கன்றுபோல் கனைத்தால்தான் பால் வடியுமாம். இதுபோன்ற அபூர்வ மரங்களையும் செடி கொடிகளையும் பற்றி ஆராய்ந்து வந்தார்கள்.

இவ்வாறு அந்தப் பிரதேசங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் கானாடுகாத்தான் வாசியும், ஆண்டிப்பட்டி ஜமீன்தாருமான சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் பூபதி அவர்களைச் சந்தித்து, புதுக்கோட்டைக்கும் திருச் சிக்கும் இடையிலுள்ள நாரத்தாமலை முதலான இடங்கட்கு அழைத்துப்போய் பல பெரியார்களுடன் சம்பாஷிக்கச்செய்து பார்த்து ஆனந்தித்தார். பூபதி அவர்கள் இவ்வாறு மூன்றுவருடகாலம் சந்நியாசமாக யாதொரு பந்தத்துக்கும் உட்படாமல் பல இடங்களிலும் சஞ்சரித்துக் கொண்டும், சீடர்களுக்கு சன்மார்க்கங்களைப் போதித்தும், கல்வி பயிற்றியும், சாதுக்களுடனும், தனித்தும், கொல்லி மலை முதலான இடங்களிலுள்ள குகைகளில் வசித்தும் வந்த காலங்களில் தம்மறிவு முதிர்ச்சியில் தோன்றிய அரிய உண்மைகளையும் ஞான யோக ரகசியங்களையும் அவ்வப் பொழுது எழுதிவைத்திருந்தவைகளை ஒருசேரத் திரட்டி மாந்தர்க்கு நல்லுணர்ச்சியும், ஞான இச்சையும், யோகப் பயிற்சியும் உண்டாக்கவேண்டுமென்ற பேரவாவினால் "வேதாந்த பாஸ்கரன்" என்னும் நாமஞ்சூட்டி 1918-வருஷத்தில் பேளத்துக்கு அடுத்த திருமீயச்சூர் பிரம்ம வித்தியா பிரசில் அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். அஞ்ஞான்று மேற்படி அச்சியந்திரசாலையின் சொந்தக்காரராகிய தொண்டமண்டலம் A. இரத்தின சபாபதி முதலியார் பூபதிகள் மீது மிக்க அன்புடையவர்களாகி வேதாந்த பாஸ்கரன் அச்சிடுதற்கு மிகக்குறைந்த கூலிவிகிதம் போட்டு வாங்கிக்கொண்டது மல்லாமல், வேண்டிய சௌகரியங்களையும் ஏற்படுத்திக்கொடுத்து பூபதிகள் உரியகாலத்தில் கடுகு, எண்ணெய், புளி, உப்பு நீக்கி அமுதருந்தும் விஷயத்திலும் மிகக் கவனமுடையவர்களாயிருந்து பெரிதும் ஆதரித்து வந்தனர்.

அப்பொழுது பூபதி அவர்கள், முதலியார் அவர்களுக்கு அடிக்கடி தொந்தரவு கொடுக்கக் கூடாதென்ற நோக்கத்துடன் வேறோரிடத்தில் தமக்கு சாப்பாட்டுக்குத் திட்டம் செய்துகொண்டு புத்தகம் அச்சிடும் வேலையைக் கவனித்து வருகையில் கீழ்வேளூரிலிருந்த தமது பிதா அவர்களிடமிருந்து ஊருக்குவருமாறு கடிதம்வரவே, ரயில் சார்ஜுக்கும் பணமில்லாமலும் சாப்பிட்ட இடத்திற்கு பணம் கொடுக்காமற் செல்ல மனமில்லாமலும் சிந்தாகுலமுற்று, எல்லாம் இறைவன்செயலே! என்று காலைக்கடன் கழித்தற்பொருட்டு வெளியிற்போய் ஒரு செடிமறைவிலுட்கார அங்கே ரயிலுக்கும் சாப்பாட்டுக் கடனுக்கும் வேண்டிய அளவு பணமிருக்கக்கண்டு பெருவியப்புற்று ஆண்டவன்கருணைக்கு மகிழ்ந்து ஊர்சென்று திரும்பினார்கள்.

பூபதி அவர்கள் இவ்வாறு ஞான—யோக மார்க்கங்களிலேயே ஈடுபட்டு இல்வாழ்க்கை யின்பங்களை வெறுத்து இளம் பிராயத்தினராகிய தமது மனைவியாரையும் மறந்து நிலையின்றி பல இடங்களிலும் சஞ்சரித்து வருவதை யறிந்து பூபதி அவர்கள் மனைவியாரின் தாய், தந்தையர், மாமன் முதலானவர்கள் இனிப் பூபதி அவர்கள் மனைவாழ்க்கையை விரும்பமாட்டார்களென்றே முடிவுசெய்து பெண்ணுக்கு விவாக விடுதலை (தலாக்) செய்ய முயன்றார்கள். ஆயினும் பதிவிரதா சிரோமணியாகிய சபூர்பீவி அம்மாள் அதற்கு இணங்காமல் தன்னை வேறொருவருக்கு விவாகம்செய்து கொடுப்பதில்லை என்று உறுதி கூறுவீர்களாகில் ஒருவாறு உங்கள் விருப்பத்திற்கு இணங்குவேன். ஆனால் என் வாணாள் முழுதும் வேறொருவரைக் கனவிலும் நினையேன் என்பது திண்ணம்; இது உங்கட்குச் சம்மதமாயின் செய்க என்று கூறினார்கள். இதைக் கேட்டுப் பெற்றோர்கள் பயமும், துக்கமும் உடையவர்களாகி பூபதி அவர்களின் தந்தையார் அவர்களிடம் சென்று எவ்வாறேனும் புத்திரனை அழைத்துவந்து இல்வாழ்க்கை நடத்துமாறு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்.

அதைக்கேட்ட புலவர் பெருமான் தம் புதல்வரை திருமீயச்சூர், திருவாரூர், புலிவலம், கோடிமங்கலம், திருமதிக்குன்னம் முதலிய இடங்களில் தேடியுங் காணாமல் திருச்சியில் தென்னூர் பிஷப் பங்களாவில் ஆண்டி-பட்டி ஜமீன்தார் பராமரிப்பில் இருப்பதாகத் தெரிந்து, அங்குசென்று கண்டு அழைக்க, பூபதிகள் வர மனமிணங்காததால் மேன் மேலும் வற்புறுத்தி ஊருக்கு அழைத்துவந்து மனைவியாரோடு கூடி இல்வாழ்க்கை நடத்துமாறு பணித்தார்கள். தந்தை சொல்லை மறுக்க இயலாத பூபதிகள் உள்ளத்துறவுடன் இல்வாழ்க்கையை நடத்திவரலானார்கள்.

இவ்வாறு இல்வாழ்க்கை நடத்திவருங் காலங்களிலும் திடீரென உலகவாழ்வில் வெறுப்புற்று அடிக்கடி வீட்டை விட்டுக் கிளம்பி 10-12, நாட்கள் வெளியிற் சஞ்சரிப்பது வழக்கம். பிதா அவர்கள், தம் குமாரராகிய பூபதி அவர்களை நோக்கி நீ வெளியிற்சென்றாலும் அடிக்கடி வீட்டிக்கு வந்துபோய்க்கொண்டாவது இரு எனக்கூற, அக்கட்டளைக்குக் கட்டுப்பட்டு நடந்துவரலானார்கள்.

அக்காலத்தில் பூபதி அவர்களிடம் நெருங்கிப் பழகி பிரபுலிங்கலீலை பாடம் கேட்டுக்கொண்டு திருவாரூர் தெற்கு வீதியில் வசித்துவந்த V. S. ராமன் பிள்ளை என்பவர் ஒரு அச்சியந்திரமும், அதற்கு வேண்டிய சாமான்களும் விற்பனைக்குத் தயாராகயிருப்பதாகவும் தங்களைப் போன்று அரிய நூற்களெழுதி அச்சியற்றிவருபவர்களுக்கு அச்சியந்திரசாலை யொன்று சொந்தமா யிருக்கவேண்டியது அவசியமென்றும் பூபதிகளிடம் கூற, அவர்கள் வேதாந்த பாஸ்கரன் என்னும் நூலை அச்சிடுங்காலத்தில் அடைந்த பல தொல்லைகளையும் இன்னும் பல நூற்கள் வெளியிட உத்தேசித்திருப்பதையும் நினைத்து அவ்வச்சியந்திரசாலையை விலைக்கு வாங்கி நடத்தலாமென்று உறுதிகொண்டு, தங்கள் பிதா அவர்களிடம் சென்று தங்கள் எண்ணத்தைத் தெரிவித்துப் பணங்கேட்க, அவர்கள் தமக்குக் கிடைக்கும் பொருள் தெய்வீகமானதென்றும் அதை அவ்வப்போது

வேண்டிய குடும்பக் காலட்சேபத்திற்கு மட்டும் உபயோகிக்கலாமே யன்றி வேறு தொழில் நடத்துவதற்கு அப்பொருள் உரியதன்று அவசியமானால் நமக்குரிய நிலத்தை விற்றுப் பணம் வாங்கிக்கொள் என்றும் கூறினார்கள். ஆயினும் நிலம் விற்று உரிய காலத்தில் பணம் பெறுவது அசாத்தியமா யிருந்தமையால் வேறு சில அன்பர்களின் பொருளுதவியின் பேரில் அவ்வச்சியந்திரசாலையை விலைக்கு வாங்கி விஜயபுரத்திலேயே அண்ணாமலைவைத்தியர் என்னும் ஒரு அன்பரின் மருந்து ஷாப்பில் ஓரிடத்தில் வைத்திருந்தார்கள்.

1919-ம் ஆண்டில் தம்பிதா அவர்களுடைய தொண்டில் ஈடுபட்டு கீழ்வேளூரிலேயே சில காலம் தங்கியிருந்தார்கள். அப்பொழுது திரு ஈசி அவர்களின் திவ்ய சரித்திரத்தைப் பல அரிய மேற்கோள்களுடன் மிக அழகாக எழுதி முடித்தது மல்லாமல் ஞானக்களஞ்சியம், ஞானயோக ரகசியம் என்னும் பல நூல்களையும் எழுதி முடித்தார்கள்.

## சடமா? படம்

புலவர்நாயகம் தாங்கள் பரிபூரணமாவதற்கு பதினைந்து நாட்களுக்கு முந்தி ஒரு குருவாரத்தன்று தங்கள் புத்திரராகிய் பூபதி அவர்களை அழைத்து, "அடுத்த குருவாரம் இங்கிருப்பேன், அதற்கடுத்த குருவாரம் நான் வெளியூர் போக நாடுகிறேன் என்னைத் தேடாதே" எனச் சில இரகசியார்த்த விஷயங்களைத் தெரிவித்தார்கள். அவற்றைக் குறிப்பாலறிந்த ஞான பூபதிகள் பிதா அவர்களை நோக்கி தங்களைப் படம் எடுத்துக்கொள்ள வேண்டுமென விரும்புகிறேன் என்று தெரிவிக்க, அவர்களும் சம்மதித்தவர்கள் போலிருக்க, பூபதிகள் போட்டோ கிராப்பரை (Photographer) அழைத்து வந்தார்கள். புலவர் பெருமான் நீ இந்தப்படமா எடுக்க நினைத்தாய்? இது எலும்புந் தோலுமாகிய உடலையல்லவா காட்டும்? இந்தப் பூதவுடல் நான்

ஆவேனு? உனது ஆன்ம சொரூபத்தோடல்லவா எனது ஆன்ம சொரூபத்தைப் பதிப்பிக்க வேண்டும்? அதல்லவா படம்? இந்தப் புகைப்படத்தையா படமென்று கூறினை என்று கூறிப் புன்னகை கொண்டார்கள்.

அவர்கள் கூறிய அம்மேலான சூக்குமப் பதிவின் சிறப்பைக் கேட்டு ஆச்சரியமுற்றுப் பூபதி அவர்கள் போட்டோகிராப்பருக்கு (Photographer) படம் பிடிக்காமலே உரிய கூலியைக்கொடுத் தனுப்பிவிட்டார்கள்.

புலவர் பெருமான் 15-நாள் வரை கடுக்காய்த்தூள் முதலான காயசுத்தி அவுஷதங்கள் சாப்பிட்டு மலத்தைப் போக்கி காயத்தை மெலியவைத்து தமது பரிபூரண காலத்தை எதிர் நோக்கியிருந்தார்கள்.

## புலவர்கள் நாயகம் பூரணம்.

ஹிஜ்ரி 1338 ஹு ஷவ்வால்மீ பிறை 21 கலி 5021 ஹு ரௌத்திரி ஆண்டு ஆனித்திங்கள் 25ம் நாள் கி.பி. 1920 ஹு ஜூலைமீ 25 உ குருவாரம் சப்தமி திதி உத்தரட்டாதி நட்சத்திரங் கூடிய தினத்தன்று கீழ்வேளூரில் தமது இல்லத்தில் நமது ஞானபூபதி அவர்களின் பிதாவாய் விளங்கிய புலவர் பெருமானும் சித்தயோகி மஸ்தான், நாவலர் திலகம் அப்துர் றஹ்மான் புலவர் அவர்கள் பரிபூரணமானுர்கள்.

புலவர் நாயகம் பரிபூரணமடைந்தபிறகு பூபதி அவர்கள் தங்கள் அருமைப்பிதா அவர்களைப் பிரிந்ததனுலுண்டாகும் துயரத்தைத் தங்கள் அறிவின் முதிர்ச்சியால் அடக்கிச் சமாதானமுற்றிருந்தாலும் "தானுடாவிட்டாலும் தன் தசை யாடும்" என்றபடி பூபதி அவர்களின் முகம் வாட்டமுற்றிருப்பதைக்கண்ட பலர், பூபதி அவர்கள் முகம் வாட்டமுற்றிருப்பதன் காரணமென்னவென்று விசாரிக்க, தந்தையார் பரிபூர்ணமான விஷயத்தைக் கூற, அவர்கள் அதை நம்பாமல் "நான் அங்கே கண்டேனே! இ க.

கண்டேனே!'' என்று கூற, புலவரவர்கள் சித்த யோகியாகையால் அவர்கள் சூக்கும சரீரத்தில் தங்கள் தங்களுக்குக் காட்சி தந்திருக்கவேண்டுமென்று கூறி ஆச்சரியமுற்றார்கள். புலவர் பெருமான் பூத வுடலை நீத்ததைக் கேள்வியுற்று நாலுதிசைகளிலுமிருந்து பல அன்பர்களும், மாணவர்களுங் கூட்டமாக வந்து உள்ளங்கரைய உரோமம் சிலிர்ப்ப மெய்நடுங்கி நாக்குழற மிக வருந்திக் கண்ணீர் வடித்தார்கள். எத்துணைப் பெரியராயினும் என்னுங் காலம்என்னும் சுழலுக்குத் தலைசாய்த்தவர்களாகவே திகழ்கிறார்கள்.

## புலவர் பெருமானின் ஆகார நியமங்கள் வருமாறு:-

1. மிளகாய் வற்றலை உப்புச் சேர்க்காமல் அரைத்து உரித்த தேங்காயளவு காலை மாலை சாப்பிடுவார்கள்.

2. உப்பில்லாமல் சிறிது அன்னத்தைமட்டும் நடுப் பகலில் ஒருவேளை புசிப்பார்கள்.

3. பச்சை மிளகாய், ஊசி மிளகாய், மிளகு இவைகளை அதிகமாகப் புசிப்பார்கள். புசித்தவுடன் பிறர் கையினால் தூக்கமுடியாத அவ்வளவு சூடான வெந்நீரை குளிர்ந்த ஜலத்தைப்போல சர்வசாதாரணமாய்ப் பருகுவார்கள்.

4. பத்துவகையான கறிபதார்த்தங்கள் படைக்கப் பட்டிருந்தாலும் அவற்றுள் ஒரு பதார்த்தமும் கீரையும் மட்டும் போஜனம் செய்வார்கள்.

5. வேப்பம் பருப்பு, வேப்பங்கொழுந்து, கடுக்காய், கற்றாழைச்சோறு இவைகளை இனிமையாகப் புசிப்பார்கள்.

6. ஆரம்பத்தில் புளி, கடுகு, நல்லெண்ணெய் முதலானவைகளை முற்றிலும் சேர்த்துக்கொள்ளாமலிருந்து பிறகு காட்டுத்தீப்போல் கண்முன் வந்ததை எல்லாம் புசிப்பார்கள்.

## புலவர்கள் நாயகம்

## நடை உடை முதலியவைகள் வருமாறு:-

ஆடம்பரமற்ற உடை, குனிந்த பார்வை, எப்பொழுதும் புன்முறுவலுடனிருப்பார்கள். பிறரிடம் அதிக பேச்சுக்கு இடங்கொடுக்காமலும் பிறர் தங்களிடம் அதிகம் நெருங்க இடங்கொடுக்காமலும், பேசவேண்டிய அவசியம் நேரிட்டபோது மிகச்சுருக்கிக்கூறி விளங்கவைப்பார்கள். உள்ளங்கனிந்துருகிப் பாடிப்பாடி எப்பொழுதும் கண்ணீர் வடித்துக்கொண்டிருப்பார்கள். பெரும்பாலும் இரவில் தூங்காமலும் பகலில் அநேகமாக கண்களை மூடி நிட்டை நோக்காயிருப்பார்கள்.

## ஹத்தம் பாத்திஹா.

புலவர்பெருமான் பரிபூரணமான 40ம் நாள் ஹத்தம் செய்வதற்காகவேண்டிய ஏற்பாடுகளை பூபதி அவர்களும் அவர்கள் சகோதரரும் செய்யத்தொடங்கினார்கள். அத்தினத்தன்று கீழ்வேளூர் அ. முஹம்மது யூசுபு சாஹிபு (Village Munsiff) வேறு சிலரும் கூடி யோசனைசெய்து கருணையானந்தர் என்னும் பெயரை எடுத்துவிட்டுப் பழைய பெயரையே வழங்கவேண்டும், அதைப்பற்றிப் பத்திரம் எழுதிக்கொடுத்தோ அல்லது சர்க்காருக்கு மனுக்கொடுத்தோ உறுதிப்படுத்தவேண்டும். அப்படிச் செய்தாலொழிய பூபதி அவர்கள் வீட்டுக்குச்சென்று உணவருந்துவதில்லை என்று அவ்வூரிலுள்ள முஸ்லிம்களெல்லாரும் கட்டுப்பாடு செய்துவிட்டார்கள்.

பூபதி அவர்கள் நயமாக எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவர்கள் பிடிவாதமாயிருந்தபடியால் பூபதிகள் தமது சகோதரருடன் கலந்து பேசி உறவினர்களைக் கூப்பிடாமலே தாங்களே ஹத்தம் பாத்திஹா ஓதி ஏழை எளியவர்களுக்கு அன்னமிட்டு ஹத்தம் ஓதி முடித்துவிடுவதாக உறுதிசெய்துகொண்டு மனோதிடத்துடனிருந்தார்கள்.

அப்பொழுது சிறுதுயில்கொண்ட பூபதிகளிடம் புலவர்பெருமான் உருவந்தோன்றி "இதற்கு நீங்கள் ஏன்

இவ்வளவு ஆத்திரங்கொள்ளவேண்டும், அவர்களே வலிய வந்து எல்லாம் நடத்திவைப்பார்கள்'' என்று கூற, விழித்தெழுந்து காரியங்களை நடத்தச் சித்தமாயிருந்தார்கள்.

இஃதிவ்வாறிருக்க மேஷ் கிராம முன்சிபு முகம்மது யூசுபு சாஹிபின் மைத்துனர் முறையிலுள்ளவரும் சிறந்த கல்விமானுமாகிய திண்டுக்கல் முன்ஷி அப்துர் றஹ்மான் சாஹிபு வெளிப்பாளையம் சென்று திரும்பி திண்டுக்கல் போகும்பொழுது தற்செயலாய் கீழ்வேளூரில் ரயிலினின்றும் இறங்கி ஏதோ காரியமாய்ச் சற்றுத் தாமதிக்க ரயில் புறப்பட்டுவிட்டது. முன்ஷி அப்துர் றஹ்மான் சாஹிபு அடுத்தவண்டி வருவதற்குள் கீழ்வேளூரிலுள்ள தன் மைத்துனரைப்பார்த்து வரலாமென்று நினைத்து முகம்மது யூசுபு சாகிபு வீட்டுக்குச் சென்றார். அங்கே புலவர்பெருமான் 40ம் நாள் ஹத்தம் செய்வதைப்பற்றி ஊரார்செய்த கட்டுப்பாட்டைக் கேள்வியுற்று ''அவர்கள் மிகவும் பெரிய மகான் ஆயிற்றே! அவர்கள் விஷயத்தில் நீங்கள் இவ்வாறு நடந்து கொண்டது பெருந்தவறென்றும் அதற்குப் பரிகாரமாக நீங்களே வலிய அவர்கள் வீட்டிற்குச் சென்று ஹத்தம் நடத்திவைத்து எல்லாக்காரியங்களையும் நீங்களே செய்து முடிக்க வேண்டும்'' என்று கூறியதுடன் உமறுப்புலவருக்கும் சதக்கத்துல்லா ஆலிம்சாகிபுக்கும் நடந்த விர்த்தாந்தங்களைக் கூறி கருணை ஆனந்தர் என்ற பெயரை மாற்றவே கூடாது மர்ஹூம் எவ்வளவு அழகான பெயர் அல்லாகு தஆலாவும் கருணை ரூபமாகவும் ஆனந்த ரூபமாகவுமே அர்றஹ்மான் அர்றஹீம் என்று கருணாநிதியாக இருக்கிறான் என்று வியந்து, பூபதிகளை நோக்கி யார் யார் என்ன சொன்னபோதிலும் இந்த நற்றமத்தான பெயரை நீங்கள் மாற்றவேகூடாது என்று வற்புறுத்திக் கூறினார்கள். அதைக் கேட்டுக்கொண்டிருந்த முஸ்லிம்கள் எல்லோரும் தங்கள் தவறையுணர்ந்து பூபதிகள் வீட்டிற்குப் சென்று 40-ம் நாள் பாத்திஹாவைச் சிறப்பாக நடத்திவைத்து எல்லோரும் உணவருந்திச் சென்றார்கள்.

அது முதற்கொண்டு ஞான பூபதிகளிடம் அவ்வூர் முஸ்லிம்கள் அன்புடையவர்களாகவே நடந்து வரலானார்கள். புலவர் பெருமான் பரிபூரணமான பிறகும் அவர்களிடத்தில் மிகுந்த பக்தியுடையவர்கள் சிலரிடம் சூக்கும சரீரத்தோடு வந்ததை யறியாது பூத உருவத்தோடு கண்டதாக நினைத்து, பிறகு சந்தேகம் தெளிந்துகொண்டு ஆச்சரிய முற்றுக் கொண்டாடினார்கள்.

அப்பால் 1920-ஆண்டு த்தில் சங்கமங்கலத்தில் பலரை சீடர்களாகச்சேர்த்து ஞான யோக விஷயங்களைப்போதித்து வந்தார்கள்.

பிதா அவர்கள் பரிபூரணமான பின் ஒருவாறு குடும்பத்தை சீர்தூக்கிக் கவனிக்கவேண்டிய பொறுப்பு பூபதிகளுக்கு ஏற்பட்டாலும், பெரிய மரத்துண்டானது தண்ணீரில் தாக்கியும், தாக்கற்று மிருப்பது போல, பூபதிகள் சாட்சிமாத்திரமா யிருந்து மேனேஜ்க்காகக் கவனித்து வந்தார்கள்.

அக்காலங்களில் அச்சியந்திரசாலை நடத்தும் பொருட்டு அதற்கு வேண்டிய சில சாமான்கள் வாங்கிவைத்திருந்த போதிலும், புத்தக பாரங்கள், பெரிய பத்திரிகைகள் முதலியன அச்சிடுதற்கு வேண்டிய அவ்வளவு அதிக உபகரணங்கள் இல்லாமையால், பெரிய பிரஸ் முதலான சாமான்கள் வாங்க வேண்டியதை உத்தேசித்து யாரேனும் பிரஸில் பங்கெடுத்துக்கொண்டு நடத்திவர முன்வருகிறார்களா வென்று பல நண்பர்களிடத்திலும் பிரஸ்தாபித்து வந்தார்கள். யாரும் இதற்கு முன்வசாமற் போகவே பூபதிகள் தாங்கூற வேண்டியதே கடமை யென்றும், பிறர் பங்காளிகளாகச் சேர்வதைப் பற்றியோ சேராததைப் பற்றியோ வருந்துவதிற் பயனில்லை, அது திருவருட் சம்மதமே என்றும் கருதியிருந்தார்கள்.

புலவர்கள் நாயகம் பூரணமான 8-மாதங்களுக்குப் பின் பூபதிகளின் முதலாவது ஆண்குழந்தை

நீத்து விண்ணுலகெய்தியது. அக்குழந்தையின் பேறின்மையும், பேரழகையும் கண்ட பலரும் மிக வருந்தினர்களாயினும், பூபதிகள்மட்டும் ஒரு பந்தம் விடுபட்டதென்ற ஆறுதலுடையவர்களா யிருந்தார்கள். ஆனால் பூபதிகளின் மனைவியாராகிய சபூர்பீவி யம்மாள் மாத்திரம், நமது கணவரோ துறவு நிலையிற் பிரியமுள்ளவர்கள், அவர்கள் பிரிந்திருந்த காலங்களிலும் குழந்தை யிருந்ததானது நமக்கோர் ஆறுதலை யளித்துக்கொண்டிருந்தது. அவர்களும் "கடந்த ஞானியும் கடப்பரோ மக்கண்மேற் காதல்" என்றபடி குழந்தைமீதுள்ள வாஞ்சை காரணமாகவாவது வந்துபோய்க் கொண்டிருப்பார்கள். இப்போது அவ்விரு நலனையும் இழக்க நேர்ந்ததே என்று மிக வருந்திக்கொண்டிருந்தார்கள்.

அன்றிரவு சபூர்பீவியம்மாள் கனவில் புலவர்கள் நாயகம் பிரசன்னமாகி;— இறந்துபோன குழந்தையைப் பற்றி வருந்தாதே அக்குழந்தை வந்தகாரியம் முடிந்துவிட்டபடியால் சீக்கிரம் பூத வுடலைவிட்டு நீங்கியது. இனி கூடிய சீக்கிரம் உனக்கோ ராண்குழந்தை பிறக்கும். அதனாற் பல நன்மையுண்டாகும். பூரண ஆயுளையும் பெறும். இனிக் கவலையொழிந்து மனச்சாந்தியுடனிருப்பாயாக எனக் கூறிப் போனார்கள்.

இது நிகழ்ந்த சில மாதங்களுக்குப் பிறகு, அச்சியந்திரசாலையை நடத்துவதற்குப் பிரஸ் ஒன்று வாங்கப்போதிய பணமின்மையால் பூபதிகள் சிறிது கவலையுற்றிருக்குங்கால், கீழ்வேளூர் வாசியும், பண விஷயத்தில் பெரும்பாலும் யாரையும் நம்பாதவரும், கையிற் பணமிருந்தாலும் கடன் வாங்கிச் சிக்கனமாகச் செலவுசெய்ய வேண்டுமென்ற நோக்கமுடையவரும், தமது மருமகன் இராஜ ஜோசியம் மு. இராஜகோபால நாயுடு என்பவரைப் புலவர்கள் நாயகம் யோகப்பாட்டையில் பழகும்படி செய்தார்கள் என்ற காரணமாய்த் துவேஷங் கொண்டவருமான சுமார் 75 வயதுடைய காக்கழனி கர்ணமா யிருந்த கோ. வீராச்சாமி நாயுடு என்பவர் ஒரு நாள் மாலையில் ரூபா 500, எடுத்துக்

கொண்டு பூபதிகள் இல்லம்வந்து விசாரிக்க, பூபதிகள் வெளியிற்சென்றிருப்பதாகத் தெரிந்து வீட்டிலிருந்து ஓர் பாத்திரம் கொண்டுவரச் சொல்லி,

> "அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
> இல்லை பெறுவான் தவம்"

என்றபடி பண விஷயமாக யாதொரு ஆதாரமும் பெறாது கொள்ளாமல், அப்பாத்திரத்தில் தாம் கொண்டுவந்திருந்த ரூபாய் ஐந்நூற்றையும்போட்டு இதை ஐயாவிடம் கொடுத்து நான் கொடுத்ததாகச் சொல்லுங்கள் என்று தம் பெயரையும் கூறிக் கொடுத்துப் போனார். பிறரை நம்பாத இவர் அவ்வாறு கொடுத்துச் சென்றதானது பூபதிகளின் ஆன்மசக்தியே யன்றிப் பிறிதன்று. வெளியூர்சென்றிருந்த பூபதிகள் வீடுவந்து, விஷயத்தையறிந்து அப்பொருளை எடுத்துக்கொண்டு திருச்சிராப்பள்ளியில் ஒரு பிரஸ் விற்பனைக்கிருப்பதாகக் கேள்வியுற்று அவ்வூருக்குச் சென்று அவ்வூர் பீமாநாயக்கபாளையம் பேட்டைத்தெருவிலுள்ள தங்கள் நண்பராகிய பிரபல வர்த்தகர் மு. கிருஷ்ணசாமி நாயுடுவையும் உடனழைத்துக்கொண்டு பல விடங்களிலும் பிரஸ் விசாரிக்க "முன்னொருகால் மதுரைமாநகரில் இசைமகனுக்காளாய் விறகு சுமந்த பொக்கசர் கூறிய விறகின் விலை" போல் பிரஸின் விலைகளும் அதிகமாயிருக்க சிந்தாகுலமுற்றுத் திரும்புகையில், ஒருவர் வலிய வந்து குறுக்கிட்டு விசாரித்து பசுமலையில் ஒரு பிரஸ் விலைக்கு இருக்கிறதென்று கூற, கிருஷ்ணசாமிநாயுடு அவர்கள் அதிக சிரத்தை யெடுத்துக்கொண்டு பசுமலையிலுள்ள மிஷன் அச்சுக்கூடத்திலிருந்து ஒரு பெரிய டெமிசைஸ் பிரஸை வாங்கிக்கொள்ளும்படி வாக்குச்சகாயம் செய்ய, அவ்வாறே அந்தப் பிரஸை வாங்கிவந்து 1921-ம் ஆண்டில் சித்திரை மாதம் "கருணாநிதி" அச்சுக்கூடம் என்னும் பெயருடன் ஒரு அச்சு நிலையத்தை திருவாரூர்-விஜயபுரத்தில் ஆண்டவனின் திருவருட்டுணைகொண்டு ஆரம்பித்தார்கள். அம்முயற்சி நாளுக்கு நாள் வளர்ச்சியுறலாயிற்று.

## மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்!

பூபதி அவர்கள் துறவாச்சிரமத்திலிருந்துவரும்போது பிரஸ் வைக்கப்போவதாகக் கேள்வியுற்ற சில அன்பர்கள் பூபதிகளை நோக்கி "தாங்கள் ஏன் இவ்வாறு லௌகிகத் தொல்லைகளில் ஈடுபடவேண்டும்? தங்களுக்கு வேண்டிய சௌகரியங்களை நாங்கள் எவ்வளவோ கவனித்துக்கொள்ளத் தயாராகவிருக்கிறோமே!" என்று கூறினார்கள். அவ்வாறு கூறியவர்களுக்கு உத்தரமாகப் பூபதிகள் கூறியதாவது:— "மக்கள் யாக்கையோடுள்ளவரையில் துறவிகளாயினும் யாதாமொரு கருமத்தை மேற்கொண்டிருத்தல் வேண்டும், அக்கருமமானது பலருக்கும் பயன்படக்கூடியதும், கல்வி சம்பந்தமானதாயும் இருப்பது சாலச்சிறந்ததாகும்; அன்றியும் நமக்காக எதற்கும் எக்காலத்தும் பிறரை எதிர்பார்த்துக்கொண்டிருத்தலுங் கூடாது; தனக்குத்தானே துணையாயிருப்பதுமன்றி தான் பலருக்கும் உதவி புரியக்கூடிய நிலைமையிலிருப்பதே மேலானது; மக்கள், வாழ்க்கை என்ற சமுத்திரத்தில் பொருளென்னும் தெப்பத்தில் உலாவுகிறபடியால் ஒருவரிடம் பொருளை எதிர்பார்ப்பது "கற்புடைய ஒரு மாது அன்னிய புருடனை விரும்புவது போலவாகும்," அன்றியும் கேவலம் இந்த வயிற்றுக் கொடுமைக்காக பிறரை எதிர்பார்ப்பதிலும் பிராணத்தியாகஞ் செய்துகொள்வது மேலானது. ஏனெனில், கொடுப்பவர்களுக்கு ஒரு சமயம் இருக்கும் குணம் மற்றொரு சமயம் இராது இதுபற்றியே,

"காலையிலொன் றுவார் கடும்பகலி லொன்றுவார்
மாலையிலொன் றுவார் மனிதரெல்லாம்"

என்று ஆன்றோர்கள் கூறியுள்ளனர் எனப் பதிலிறுத்தார்களாம்.

பூபதி அவர்கள் "கருணாநிதி" அச்சுக்கூடத்தை ஆரம்பித்த காலத்தில், பூபதி அவர்களுடைய அன்பர்கள் பலர் அச்சியந்திரசாலையைவைத்து நடத்துவதற்குரிய இடத்தை வாடகையின்றிக் கொடுத்துதவுவதாக முன்வந்து கூறி, தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சமீபமுள்ள கட்டிடங்களைக் குறிப்பிட்டு அங்கு அச்சுக்கூடத்தை வைக்கும்படி

சொன்னார்கள். கடைசியாக திருவாரூர் ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்புறம், ஐந்நூற்றுப்பிள்ளையார் கோவிலுக்கு எதிரிலுள்ள புலிவலம் எலலப்ப செட்டியாருடைய மெத்தைக் கட்டிடத்தில் ஸ்தாபிதம் செய்து, சில மாதம் வரை நடைபெறறு வந்தது. அபபொழுது விஜயபுரத்திலுள்ள முஸ்லிம அன்பர்கள் பலர், தங்கள் இருப்பிடங்களுக்குச் சமீபமாகவும் ரயில்வேஸ்டேஷனுக்குச் சமீபமாயும் அச்சுக்கூடத்தை மாற்றினால் பொது சனங்களுக்கும், சிறப்பாக எல்லா இந்து-முஸ்லிம்களுக்கும் மிக்க சௌகரியமாயிருக்குமென்று கூறிவந்ததை ஏற்று, அவ்வாறே பொதுஜனங்களினுடைய அவாவைப் பூர்த்திசெய்வான் வேண்டி, விஜயபுரம் எல்லையம்மன் தெற்குவீதியில் தண்டலையார் ஜனாப் முகம்மது முகையதீன் ருவுத்தர் அவர்கள் கட்டிடத்திற்கு மாற்றப்பெற்று ஆறுமாத காலம அதில் நடைபெற்று வந்தது. ஷையார் அங்கு வேண்டிய இடவசதிகளை ஏற்படுத்திக் கொடுத்து வந்தது குறிப்பிடத்தக்கது.

நாளாவட்டத்தில் தொழில் அபிவிருத்தி அடையவே, அச்சியந்திரசாலையை விரிவாய் நடத்துவதற்குப் போதிய இடவசதிகளும், ஏனையசௌகரியங்களுமுள்ள தக்கதொரு கட்டிடம் வேண்டற்பாலதாயிற்று.

ஆகவே ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலும் வடபுறமாகவும் சிறிது இடவசதியுள்ள, அடியக்கமங்கலம் வாசர் முகம்மது சுல்தான் ராவுத்தர் அவர்கள் கட்டிடத்தை வாடகைக்கு கேட்டபொழுது, பூபதிகளின் குண விசேஷங்களையும், அருமையையும் அதிகம் தெரியாத அவர், முதலில் சிறிது முரண்பாடு உடையவரா யிருந்தாராயினும், பிறகு பூபதியவர்களோடு நெருங்கிப் பழகப்பழக அவர்களுடைய குண விசேஷங்களை அறிந்து தம்முடைய கட்டிடத்தை அச்சியந்திரசாலைக்கு ஏற்றதாய்ச் சீர்செய்து பல சௌகரியங்களும் செய்து கொடுத்தார்.

1922-ஆு ஜனவரி மாதத்திலிருந்து அக்கட்டிடத்திலேயே பொது ஜனங்களுடைய நன்மதிப்புக்கு இடமாகவும்,

பேரும் புகழும் சீரும் சிறப்புமாகவும் நாளுக்குநாள் வளர்ச்சியடைந்து வந்தது.

---

## " கைராசியுள்ள கருணாநிதி பிரஸ் "

பூபதிகளால் அச்சுநிலையம் நிறுவப்பெற்றது தெரிந்த பலரும் விரும்பி வந்து ஆர்டர்கள் கொடுத்தவண்ணமிருந்தார்கள். கருணாநிதி பிரஸில் எந்தக் காரியத்திற்காக அச்சியற்றினாலும் அந்தக் காரியம் மங்களமாகவும்-சிறப்பாகவும்-கைகூடி வெற்றி யுண்டாகிறதென்றும், அங்கு கைராசி விசேஷம் அதிகமென்றும், ஊரும் பேரும் தேதியும் குறிப்பும் சொன்னால் போதும், போகிறவர்களுக்குச் சிரமமில்லாமல் எழுதி அச்சடித்துக் கொடுத்து விடுவார்கள், என்ற பேரும் புகழும் அதிகமாகப் பரவி, எல்லோரும், "கருணாநிதி பிரஸுக்குப் போங்கள், கருணாநிதி பிரஸுக்குப் போங்கள்" என்று அவரவர்களுக்குத் தெரிந்தவர்களிடம் சொல்லி ஆர்டர்கள் வந்து குவிந்து பொதுஜனங்களிடையே நற்கியாதி பரவுவதாயிற்று. "கருணாநிதி" என்ற பெயரைப் பார்த்தவர்களும் கேட்டவர்களுமான சிலர் பயபக்தியுடன் கைகுவிப்பது முண்டு.

"போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து" என்ற நோக்கத்துடன் அக்காலத்திற்குத் தக்கவாறு நியாயமான விகிதத்திற்கு அவர்கள் அச்சியற்றிக் கொடுத்து வருவதே அதற்குக் காரணமென்று பலரும் புகழ்ந்து பேசிக்கொள்ளலானார்கள். அக்காலத்தில் கருணாநிதி பிரஸும், எட்வர்ட் பிரஸுமே திருவாரூரில் இருந்தபடியால், எட்வர்ட் பிரஸுக்கு அச்சியற்ற வருபவர்கள் ஏதாவது சார்ஜு குறைத்துக் கேட்டால் அவர்களை, எட்வர்ட் பிரஸ் இரங்கசாமி பிள்ளை என்பவர் கோபத்துடன் 'எல்லாம் கருணாநிதி பிரஸில் சகாயமாயிருக்கும், அங்கே போங்கள்" என்று வெறுப்பாகவும், பரிகாசமாகவும் கூறி வந்ததானது, உண்மையிலேயே பொது ஜனங்களுக்கு விருப்பமும் நியாயமும் ஆகி, கருணாநிதி பிரஸை உயர்வாக

மதிக்கக்கூடியதாய் விளங்குவதாயிற்று. கருணாநிதி பிரஸ் முன்னேற்றம் அடைவதற்கும், கருணாநிதி பிரஸ் விளக்கமாகத் தெரிவதற்கும் அவர் ஒரு காரணமாயிருந்தார்.

## முதன் முதலாக விஜயபுரத்தில் "ஞான சூரியன்" பத்திரிகை நடத்தியது.

போடிநாயக்கனூரிலிருந்து திருவாரூருக்கு வந்து டோல்கேட்டு காண்ட்ராக்ட் ஏஜண்டாயிருந்த P. K. முஹையதீன் பாட்சா சாஹிப் முதலான பல அன்பர்கள் பூபதிகளிடம் வந்து, "தங்களுக்கு சொந்தத்தில் அச்சுக் கூடம் இருக்கும்பொழுது ஒரு பததிரிகை நடத்திவருதல் நல்லதல்லவா! அதனால் பலருக்கும் பயனுண்டாகுமே, எங்களுக்கு இம்மாதிரி அச்சியந்திரசாலை வசதியிருந்தால் எவ்வளவோ செய்யலாமென்ற எண்ணமிருக்கிறது" என்று பூபதிகளிடம் கூறிவந்தார்கள். இதைப்பற்றி ஆரம்பத்தில் அவ்வளவாக விருப்பமில்லாதிருந்தார்கள். ஏனென்றால், உலகத்தோடு சம்பந்தப்பட்டுப் பல அல்லல்களை உண்டாக்கிக்கொள்ளக் கூடாதென்பதே கருத்து. பின்னும் பின்னும் பல அன்பர்கள் வற்புறுத்தியதினாலும், நாட்டிலே பலவிதக் கொள்கைகளையும் பரப்புவதற்குரியதாய்ப் பல பத்திரிகைகள் நடைபெற்று வந்தாலும், யோக-ஞான சன்மார்க்க விஷயங்களை எடுத்துப் போதிக்கத்தக்க சிறந்த தமிழ்ப் பத்திரிகை யொன்று தமிழகத்தில் இல்லாத குறையை நிவர்த்திக்க எண்ணியும் ஞானபூபதிகள் "ஞான சூரியன்" என்ற பெயருடன் ஒரு பத்திரிகையை துந்துபி-௵ சித்திரை-மீ (1922-௵ ஏப்ரல்-மீ) த்திலிருந்து விஜயபுரத்திலுள்ள தங்கள் அச்சியந்திரசாலையில் அச்சிட்டு வெளியிட்டு வந்தார்கள்.

அவ்வாறு பத்திரிகை நடக்கும்பொழுது இவ்விதமான பத்திரிகையொன்று தற்காலத்திற்கு வேண்டியது அவசியந்தானென்று புகழ்ந்து பலரும் ஆதரிக்கலானார்கள். ஆங்காங்

குள்ள பலரும் தாங்களும் சந்தாதாரராய்ச் சேர்வதுடன் பலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்து ஆதரித்து வந்தார்கள். அக்காலத்தில் "ஞான சூரியன்" ஒரு தெய்வீகத் தன்மை பொருந்திய பத்திரிகையாகவே மதிக்கப்பெற்று வந்தது. அப்படி ஆதரித்துவந்தவர்களில் ஆ ஆ ர ணி மாணிக்கவாசகம் பிள்ளையும், புதுச்சேரி, மன்ன, முனிசாமி செட்டியார் முதலானவர்கள் புதுவை, சென்னை முதலான இடங்களில் தாங்களே வலியச்சென்று எவ்வித உபகாரத்தையும் விரும்பாது சந்தாச் சேர்த்து அனுப்பியதும் குறிப்பிடற்பாலது.

## "பொன்றுடைய ரேனும் புகழுடைய ரேனுமற் றென்றுடைய ரேனும் உடையரோ?"

பூபதிகளுக்கு ஏற்கனவே புலவர்கள் நாயகம் தீர்க்க தரிசனமாகக் கூறியிருந்தபடி 1922-௵ செப்டம்பர்-மீ 30உ சனிவாரத்தன்று பூபதிகளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை அப்துர்ரஹீம், ஜமால் முஹையத்தீன் என்ற திருநாமத்துடன் திண்மையும் திருவும் நுண்ணறிவும் பெற்றுத் திகழ்ந்து சீரும் சிறப்புமாய் வளர்ந்து இற்றைக்கு 1937-௵ த்தில் திருவாரூர் ஹைஸ்கூலில் மெட்ரிக்குலேஷன் வகுப்பில் வாசித்துவருகிறார்.

## சேயை விரும்பாத தாயும் உண்டோ?

கொழும்பு சலாபத்தில் வர்த்தகம் செய்த நம்புதாளை பிரபல நாட்டாண்மைக் குடும்பத்தைச் சேர்ந்தவரான மு. முஹம்மது ஹனீப் ஆலிம் அவர்களும், ஆ. அ. முகம்மது காசீம் ஆலிம் சாஹிபு முதலானவர்களும் பூபதிகள் இயற்றிய நூற்களைப்பற்றிய விளம்பரங்களை சுதேசமித்திரன் பத்திரிகையில் பார்த்து, வேதாந்த பாஸ்கரன், ஞானக் களஞ்சியம், ஞானயோக ரகசியம் முதலிய புத்தகங்களைத் தருவித்துப் படித்து பெரும் வியப்புற்று, இத்தகைய அரிய நூற்களின் ஆசிரியரிடத்தில் சீடராயிருந்து பல சந்தேகங்

களைக் கேட்டுத் தெளிந்துகொள்ள வேண்டுமென்று கருதி, பூபதிகளுக்கு அடிக்கடி கடிதம் எழுதி அறிமுகம் செய்து கொண்டு அன்புரிமை கொண்டிருந்தார்கள். அப்பொழுது பூபதிகள் ஞானசூரியன் பத்திரிகை நடத்துவதாகத் தெரிந்தவுடன் தாங்களும் சந்தாதாரராகி கொழும்பிலுள்ள பல அன்பர்களிடமும் சந்தா சேர்த்துப் பெரிதும் உதவி புரிந்தார்கள். மு. முஹம்மது ஹனீப் ஆலிம் அவர்கள் ஒரு முறை பூபதிகளை நேரிற் காணவேண்டுமென்னும் விருப்பத்தால் விஜயபுரம் வந்து பூபதிகளை நேரிற் கண்டு தரிசித்து, தன்னை மு. முஹம்மது ஹனீப் என்று கூறிக்கொள்ளாமல் சிலநாள் தங்கி அன்போடுறைந்து வந்தார். ஒருநாள் தனிமையான ஓரிடத்தில் பூபதிகளோடு சம்பாஷித்துக்கொண்டிருக்கையில், தானே "முஹம்மது ஹனீப்" என்பதைக் கூறி 'சாதாரணமாக வந்து தங்கள் தன்மையைப் பார்த்தபின் தன்னை இன்னானென்று தெரிவிக்கலாமென்றும், இன்றேல் கடிதமூலம் அறிமுகமான ஹனீபாமீது அன்பு என்றும் போல் குறையாதிருக்கட்டும்" என்று எண்ணியிருந்ததாகவும் பூபதிகளிடம் தெரிவித்தார்கள்.

## நன்னிலத்தில் கருணாநிதி பிரஸின் கிளையொன்று நிறுவியது.

"செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்றபடி பூபதிகளின் தமைக்ஷ புருஷராகிய முகம்மது மீரு என்பவர் உபாத்தியாயர் வேலைக்குப் படித்துவிட்டு சும்மா விருந்தார். அவருக்கு ஏதாவதொரு வேலை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டுமென்று கருதி, 1923-ஆண்டில் கருணாநிதி அச்சியந்திரசாலையின் கிளையொன்றை நன்னிலத்தில் தாபிதம் செய்து, அதில் அவரை மேற்பார்வையாளராக நியமித்து நடைபெற்று வந்தது. பிறகு அவர் சரிவர நடத்தாமையால் திரும்பவும் தலைமை அச்சு நிலையத்தில் கொண்டுவந்து சேர்த்துவிட்டார்கள்.

பூபதிகள் "ஞான சூரியன்" பத்திரிகை சம்பந்தமான காரியங்களில் ஈடுபடுவதால் யோகசாதனங்களை அனுஷ்டிப்பதற்குச் சிறிது தடையாகவிருக்குமென்று யோசித்தார்கள் போலும்; ஒருநாள் பங்குனி-மீ ஆரம்பத்தில் அதாவது "ஞானசூரியன்" இரண்டாவது ஆண்டு இறுதியில், "முதல் கடை விரித்தோம் மூடிவிடப்போகிறோம்" என்று ஒருநாள் கூறினார்கள். பக்கத்திலுள்ள அன்பர்களுக்கு ஏன் இவ்வாறு சொல்லுகிறார்களென்று விளங்கிக்கொள்ள முடியாமலிருந்தது. பின்னர் பங்குனி-மீ கடைசியில் சித்திரை-மீ பத்திரிகை வெளியாக வேண்டுமே யென்று உதவி ஆசிரிய அன்பர்கள் இம்மாதப் பத்திரிகைக்கு என்னென்ன விஷயங்கள் கொடுக்கிறீர்கள் என்று கேட்க, அப்பொழுதும் "கடைவிரித்தோம் கொள்வார்கொள்ளக் கட்டிவிட்டோம்" என்று பதிலிறுத்தார்கள். அப்பொழுது தான், பூபதிகள் முன் சொன்னது இதற்காகவே என்று யூகித்தறிந்தார்கள்.

இவ்வாறு கூறிப் பத்திரிகையை இரண்டாம் ஆண்டு முடிய நடத்தி நிறுத்திவிட்டு, அச்சாபீஸ் சம்பந்தமான காரியங்களைக் கவனித்துவரத் தக்க காரியஸ்தர்களை நியமித்து, அச்சாபீசுக் கட்டிடத்திலுள்ள ஓர் தனியிடத்தில் நிலவறை அமைத்துக்கொண்டு, அதனுள் கல்வத்தில் வீற்றிருந்து சிட்டைகூடி அன்னமின்றி வெறும் பாலைமட்டும் அருந்தி மூன்று மாதங்கள் யோக சமாதியில் இருந்து வந்தார்கள். இவ்வாறு 1924—25-௵ங்களில் அடிக்கடி யோக சாதனங்களில் அதிகம் ஈடுபட்டிருந்தார்கள்.

1924-௵ முடிவில் ஹனீப் அவர்கள் கொழும்பிலிருந்து தங்கள் நண்பரொருவரை விஜயபுரத்திற்குப் பூபதிகளிடம் அனுப்பி, இல்லறம் சிறந்ததா? துறவறம் சிறந்ததா? என்று ஹனீப், கேட்கச்சொன்னாரென்று கூற, அதற்குப் பூபதிகள் தங்கள் தங்கள் கட்டுப்பாட்டிலிருந்து வழுவாதிருக்கும் வரை இரண்டறங்களும் சிறந்ததுதா னென்றும், ஆயினும் அவருக்கு எதில் அதிக இஷ்ட மிருக்கிறதோ அதையே கடைப்பிடிக்க வேண்டும் என்றும்

கூட ர்கள். அதைக்கேட்ட ஹனீப் அவர்களின் நண்பர், தங்கள் இனத்தவர்களிலேயே அவருக்கு ஒரு பெண்ணைப் பார்த்து மணமுடித்து வைக்க வேண்டுமென்று பூபதிகளைக் கேட்டுக்கொள்ள, பூபதிகள் இதுபோன்ற காரியங்களில் ஈடுபடத் தங்களாலியலாதென்று கூறிவிட்டார்கள். பின், ஹனீப் அவர்களின் நண்பர் சில நாள் பூபதிகளுடன் தங்கியிருந்து, மறுபடியும் ஹனீப் அவர்களுக்கு ஒரு பெண் பார்த்து மணம் செய்துவைக்க வேண்டுமென்று பன்முறை கூற, முதலில் பூபதிகள் தங்களால் முடியாதென்று கூறினார்களாயினும், ஹனீபா அவர்களின் நற்குணமும், சீலமும், அதிக நட்புரிமையும் அவர்களைத் தம்மோடு பிணைத்துக்கொள்ள வேண்டுமென்று மனமிசைந்து, தங்கள் சகோதரியின் புத்திரியாகிய ஆயிஷாபீவியை 1925-ௌ ஜனவரி-மீ 15உயில் திருமணம் செய்துவைக்க இருவரும் மனமொத்து வாழ்ந்துவரலானார்கள்.

## Opportunity knocks but once.

## அதிருஷ்டம் வருவது ஆயுளில் ஒருமுறை.
## 40-ம் வயதில் நண்ணுதல் திண்ணம்.

மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் அவரவர் எங்கெந்தக் காரியத்தில் பெரிதும் ஈடுபட்டார்களோ அந்தந்தக் காரியத்தில் அவரவர்களை 35 வயதுக்குமேல் 40-ம் வயதுக்குள் திருவருளானது ஒரு முடிவுக்குக் கொண்டுவந்துவிடும். அக்காலத்தில் அவர்கள் கண்ணுங் கருத்துமாயிருந்து ஈடுபட்டால் அக்காரியமானது அவர்கள் எதிர்பார்த்த அளவில் நில்லாது அதிகமான பலனை யளிக்கும்.

அவதார புருஷர்கள்தான், அல்லது இன்ன வகுப்பினர்கள்தான், அல்லது இன்னாருடைய சந்ததிகள் தான் ஆண்டவனுடைய பூரண அருளைப்பெற அருகர், மற்றவர் அவ்வாறு அடையமுடியாதென்று சிலர் கருது

—றனர்; மனிதனாகப் பிறந்த ஒருவர் யாராயிருந்தாலும் சரி, எவரொருவர் ஆண்டவனது சந்நிதானத்திற்காக அஞ்சி தன்னுடைய ஆத்மாவை ஆசையினின்றும் விலக்கி, அரும் பாடுபட்டுக் கஷ்டப்பட்டுச் சாதனை புரிகிறார்களோ, அவர்கள் ஆண்டவனது பூரண அருளுக்குச் சுதந்தரமுடையவர்கள் என்பதை அவர்கள் அறியார்கள்போலும்.

1925-26-27 இந்த வருஷங்களில் அநேக நிர்க்கதரிசனங்களும், அற்புதங்களும், தாரக்கேள்விகளும், நன்மாராயங்களும், அசரீரி வாக்கியங்களும், சில சோதி தெரிசனங்களும், எழுதினாலும், சொன்னாலும் சிலர் நம்பமுடியாத அநேக அந்தரங்க ரகசியங்களும் முன்னுள்ள பெரியோர்களின் சந்நிதானம், இக்காலத்துப் பெரிய மகான்களின் கூட்டுறவும், இன்னும் பல அபூர்வமான நற்கருமங்களும் எய்தப்பெற்றதாக பூபதிகளின் சில அந்தரங்க விசுவாசிகளிடமிருந்து தெரியலானோம். இப்படியும் நிகழுமா! எனச் சந்தேகித்து அவர்களிடம் மறுபடியும் கேட்டதற்கு, அவர்கள் பன்முறை சத்தியம் செய்து, “இது முக்காலமும் உண்மை, எக்காலமும் உண்மை. நீங்கள் சந்தேகிக்க வேண்டாம்” என்று அழுத்தமாகக் கூறினார்கள். பூபதிகளுக்கு நிகழும், பயங்கரமும் அச்சமுமான சில சம்பவங்களைப்பற்றி அடிக்கடி கொடிக்கால்பாளையத்தில் சமாதி கொண்டிருக்கும் மஹான் ஹஸ்பாவா அவர்களிடத்தில் கூறி, பதில் தெரிந்து சமாதானமடைவார்கள். அது விஷயமாக சிக்கல் பேஷ் இமாமாக விளங்கும் பொருள்வைத்தசேரி ஹலரத், அல் ஆரிபுபில்லாஹ் மா. மு. மஸ்தான் லெப்பை அவர்களிடத்திலும், ஷைகு ஆழியூர் பிரஹ்ம நிஷ்டாபரர், ஞானபண்டிதர் ஹக்கீம் மு. செயினுமுகம்மது மஸ்தான் ஆரிபுபில்லாஹ் அவர்களிடத்திலும் கூறிப் பலாபலன்களை தெரிந்துகொண்டு மனச்சாந்தி யடைவார்களாம்.

சென்னை ஜகத்சற்குரு மௌலானா முகம்மது இனயத்துல்லா சாஹிபு தைக்கா கலீபத்துல் காதிறி அல்ஆரிபுபில்லாஹ் ஷைகுல் மஷாயகு அவர்களும், சென்னை

ஞானபூபதிகள் சரித்திரச் சுருக்கம்.

இராயபுரம் வாசர், அநேக வேதாந்த நூற்களுக்கு உரையாசிரியர், செந்தமிழ் வித்வ திலகம், கவீச்சுர அமிர்தவாக்கு செவ்வல்மாநகரம் ஆலி ஜனுப் M. A. நெயினு முகம்மது பாவலர் அவர்களும், பூபதிகளின் அபூர்வ சக்திகளைப்பற்றி சாங்கோபாங்கமாக நான் சென்னையிலிருக்கும்போது கூறக் கேட்டு நாங்கள் பூபதிகள்பால் இன்னும் அதிக பயபக்தியுடன் நடந்துவரலானேம்.

## பிரஸ் சொந்தக் கட்டிடம்.

## மனம்போல் வாழ்வு.

கருணாநிதி பிரஸினுல், அடியக்கமங்கலம் சி. முகம்மது சுல்தான் ருவுத்தர் கட்டிடத்திற்கு மாதந்தோறும் நியாயமான வாடகை கிடைத்து வருவதாயிருந்தும், கருணாநிதி பிரஸில் வேலை பார்த்து நீங்கிய ஒருவரால் வைத்திருந்த, ஓர் சிறிய பிரஸுக்கு தமது கட்டிடம் அதிக வாடகைக்குத் தேவையாயிருக்கிறதென்று கூறி வாடகையை அதிகமாகக் கேட்டு அடிக்கடி தொந்தரவுசெய்து வந்தபடியாலும், அடியக்கமங்கலம் சி. மு. வின் கட்டிடமானது கருணாநிதி பிரஸின் விருத்திக்குத் தக்கவாறு போதிய இடவசதி இன்மையாலும் அக்கட்டிடத்திற்கு வடமேற்காய் புதுக்கப்பி ரஸ்தாவில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி ஜாகையை மட்டும் அங்கு மாற்றினுர்கள். அப்பொழுது அந்த வீட்டை விலைக்கு வாங்கினுல் பிரஸ் வைத்துக் கொள்ளத் தக்கபடி கட்டிடம் கட்டிக்கொள்ளலாமே என்று சிந்தித்தார்களாம்.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் "

என்றபடி பூபதிகள் எண்ணியவாறு 1926-வருஷத்தில் அதே இடத்தைக் கிரையத்திற்கு வாங்கி, அச்சியந்திரசாலைக் கேற்ற எல்லா வசதிகளுடனும் 1929-வருஷத்தில் ஒரு பெரிய மெத்தைக் கட்டிடம் கட்டிப் பூர்த்தியாயிற்று.

## கருணாநிதி தருமப்பாடசாலை நடத்தியது.

பூபதி அவர்களால் 1926-ஆம் வருஷத்திலே இப்பொழுது கருணாநிதி பிரஸ் மெத்தைக் கட்டிடம் இருக்குமிடத்திலே யிருந்த பழைய கட்டிடத்தில் "கருணாநிதி தருமப் பாடசாலை" என்னும் பெயருடன் ஒரு தருமப் பாடசாலை நடத்தப்பெற்றுவந்தது. அதில் நாகபட்டணம் P. S. இரங்கசாமி பிள்ளை தலைமை உபாத்தியாயராக யிருந்து பள்ளிக்கூடத்தை நடத்திவந்தார். அப்பாடசாலையின் பொருட்டு தஞ்சை கலெக்டர் ஆபீஸ் உசூர் சிரஸ்ததாராயிருந்த V. S. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், திருவாரூர் முனிசிபல் (Ex) வைஸ் சேர்மென், கொடிக்கால்பாளையம் வா. மெ. முஹம்மது யூசுபு ராவுத்தர் அவர்கள், திருவாரூர் முனிசிபல் (Ex.) சேர்மென் பாவா C. கோபாலசாமி முதலியார் அவர்கள் முதலியோர் பொருளுதவியும் செய்திருக்கின்றார்கள்.

இப்பாடசாலையானது பூபதிகளின் பூரணமான ஆதரவிலும், மேற்பார்வையிலும் இரண்டு வருஷம் நடைபெற்றுவந்தது. பல மாணவர்கள் அதில் கல்வி பயின்றார்கள். இப்படிப்பட்ட தரும காரியங்கள் நடத்துவதில் பூபதி அவர்களுக்கு எப்பொழுதும் பூரண திருப்தியுண்டு.

1927-ஆம் வருஷத்தில் பூபதிகள், நம்புதாளைக்குச் சென்றிருந்தபொழுது, கீழக்கரைப் பல்லக்குத்தம்பி அவுலியா அவர்கள் தொண்டியில் வந்திருப்பதாகக் கேள்வியுற்று அவர்களைப் பார்க்கச் சென்றிருந்தார்கள். அப்பொழுது அங்கிருந்தவர்கள் பூபதிகளைப் பார்த்து, உங்களுக்குத் தாடியில்லையே! தாடியில்லாதவர்களைக் கண்டால் அவுலியா அவர்கள் அடிப்பார்களே! என்று பரிகசித்தார்கள். அதற்குப் பூபதிகள் இவ்வளவு பெரியவர்கள் வெளிவேஷத்தைக் கண்டா மயங்குவார்கள் என்று நினைத்துக்கொண்டு, "அடித்தால் பட்டுக்கொள்ளுவோம்" என்று கூறிவிட்டு அவுலியா அவர்களைப் பார்க்கச் சென்றார்கள். இவர்களைக் கண்டதும் அவுலியா அவர்கள் அன்புடன் வரவேற்று, எனக்கு என்ன கொண்டுவந்திருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்குப்

பூபதிகள் தங்களுக்குப் பாமாலை கொண்டுவந்திருக்கிறேன் என்று சொல்லிப் பாடலைக்கூற, அவுலியா அவர்கள் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்து, நீங்கள் ஒரு ஞானபண்டிதர்! என்று பூபதிகளைப் புகழ்ந்து, ஏதோ சன்மானம் செய்ய வந்தார்கள். யாரிடத்திலும் தான் யாதொன்றையும் பெறும வழக்கமில்லை யென்று பூபதிகள்கூற, தன்னுடைய சன்மானம் மற்றவைகளைப்போலன்று என்று கூறிச் சன்மானத்தைப் பெற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தியதின்மேல் உபசரிப்பைப் பெற்றுப் புகழ்பெற்றுச் சென்றார்கள். முதலில் பரிகசித்துப் பேசியவர்களெல்லாம் பூபதிகள் விஷயத்தில் பெரும் வியப்படைந்தார்கள்.

பின்னொரு சமயம் கீழக்கரைப் பல்லக்குத்தம்பி அவுலியா அவர்கள் நாகூருக்கு வந்திருந்தபொழுது, நாகை, காரை முதலிய ஊர்களுக்கு ஆங்காங்குள்ளார் அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்து புதக்குடிக்கு அவ்வூர் வாசிகள் அழைப்பிற் கிணங்கிச் செல்லும்பொழுது விஜயபுரம் வந்ததும், கருணாநிதி பிரஸ் பக்கமாகக் காரைத் திருப்பும்படி சொல்லி வெளியில் சென்றிருந்த பூபதிகள் வரும்வரையில் இருந்து சந்தித்துச் சிறிது நேரம் சம்பாஷித்துச் சென்றார்கள்.

## கற்றாரைக் கற்றாரே காமுறுவர்.

1928-ஆண்டிலே சென்னை ஜார்ஜ் டவுன், ஜனோபகார ஜகத் சற்குரு கனம், மௌலானா மௌலவியுல் மஉனவி, சர்காஜி சையது ஷாஹ முஹம்மது இனயத்துல்லா லெப்பை ஆலிம் சாகிபு அவர்களை அடியக்கமங்கலத்திற்கு தங்கள் சீடர்கள் அழைத்து வந்திருந்தபொழுது அவர்களிடத்தில் பூபதிகளைப்பற்றிப் பொறாமை காரணமாக சிலர் திரித்துக்கூறியதைக் கேட்ட இனயத்துல்லா அவர்கள், ஞானநோக்காற் பூபதி அவர்கள் கல்வி அறிவு குண விசேஷங்களை அறிந்து, விஜயபுரம் வந்து பூபதி அவர்களை நேரிற் காண வேண்டுமென்ற அவாவினால், விஜயபுரம் பூபதிகளின் ஆசிரமத்திற்கு வந்து விசாரிக்க, பூபதிகள் வெளியூருக்குப் போயிருப்பதாகத் தெரிந்து, பூபதிகள்

எழுதியுள்ள "ஞானக்களஞ்சியம்" என்னும் புத்தகத்தை வாங்கிப் பார்த்து, அதன் பெருமையை யுணர்ந்து, அப் புத்தகத்திலுள்ளவாறு விலைகொடுத்து வாங்கிக்கொண்டு, பூபதிகள் வருமளவும் தங்கியிருந்து, பூபதிகள் வந்ததும் நேரிற்கண்டு அபிமுகம் செய்துகொண்டு ஒருவரோடொருவர் அளவளாவி பூபதிகளை மிகவும் பாராட்டி, தாம் அவ்வாறு ஒரு நூல் எழுதி வெளியிட எண்ணியிருந்ததாகவும், அதே கருத்துக்கள் இந்நூலில் வெளியிட்டிருப்பதாகவும் வியந்து கூறி, அவர்கள் எழுதியுள்ள ஞானக்களஞ்சியம் என்னும் நூலுக்குச் சாங்கமுடன் ஒரு நற்சாட்சிப் பத்திரம் வரைந்து கொடுத்து, பின்னும் சில நன்மதிப்புக்களும் செய்து சென்றார்கள். இதைக் கேள்வியுற்றுப் பூபதிகள் மீது பொறாமை காரணமாகப் பொய்யுரை கூறியவர்கள் வெட்கித் தலைகுனிந்தார்கள்.

1928-௵த்தில் நூருல் இஸ்லாம் என்னும் சிறந்த நூலொன்றை பூபதிகள் வரைந்து வெளியிட்டார்கள். அதே வருஷத்தில் வேதாந்த பாஸ்கரன் இரண்டாம் பதிப்பு சென்னையில் அச்சிடப்பெற்றது.

1929-௵த்தில் பிரஸின் முன் மெத்தைக் கட்டிடம் கட்டிப் பூர்த்தியாயிற்று.

### நம்பினதற்கு ஞாயமென் சொல்லுகேன்.

### (சோழவந்தான் சோமசுந்தரம் எழுதியது)

யான் என்னுடைய இளம் பிராயத்திலே, எனது சொந்த ஊராகிய சோழவந்தானிலே எங்கள் குடும்ப வேலைகளைக் கவனித்துக்கொண்டிருக்கும் பொழுது, அதாவது, 1929—30-௵ங்களில் பூபதி அவர்களுடைய நூற்களைப் பற்றி பத்திரிகைகளில் விளம்பரம் செய்திருந்ததைப்பார்த்து அவர்களியற்றிய "வேதாந்த பாஸ்கரன்" "ஞானக்களஞ்சியம்" "ஞானயோக ரகசியம்" முதலிய நூற்களைத் தருவித்துப் படித்துப் பார்த்துப் பெருமகிழ்வெய்தி, இப் பெரியாரிடம் சீடனாகத் தொண்டுசெய்து, பல அரிய ஞான யோக ரகசியங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டு

மென்று எனக்குப் பேரவா வுண்டாயிற்று. நான் மிகச் சிறுவனுதலால் என்னிஷ்டப்படி பூபதிகளைப் பார்க்கத் திடீரெனப் புறப்பட்டுப்போக முடியாமற்போயிற்று. ஆனாலும் கடிதமூலமாய் என்னை அறிமுகம் செய்துகொண்டு, நானும் ஒரு சீடனுகவே அன்பு பூண்டொழுகி வரலானேன். நான் முதல் முதலாக பூபதி அவர்கள் சமூகத்துக்கு ஞானக்களஞ்சியம் 2-ம் பதிப்பில் விமல மணிமாலை யென்று பதிப்பித்திருக்கிற ஒரு பதிகத்தையும், சந்தக்கவி யொன்றையும், ஞானயோக ரகசியம் முதற்பதிப்பில் பதிப்பித்திருக்கிற சற்குருமாலை என்னும் பதிகமும், சில சந்தக்கவிகளும் பாடி அனுப்பினேன். பூபதி அவர்கள் அதை ஏற்றுக்கொண்டு பெருமகிழ்ச்சியுற்று எனக்கு அடியிற்கண்ட ஆசீர்வாத நல்வாக்குப் பாசுரங்களை வரைந்தனுப்பினார்கள்.

---

எழுசீரடி ஆசிரிய விருத்தம்.

கலைவன மயின்று தமிழ்மழை பொழியுங்
கவிமுகிற் சுந்தரக் காளாய்!
கலைவன விலதா நின்னருட் பனுவல்
கண்டனங் களிதுளும் பினமே
கலைவனன் பொருங்க மானதத் தொடர்பு
கதித்திடுந் தலைமையன் புடையாய்!
கலைவன சரங்கை விட்டதை நிகர்நின்
கருத்துமுற் றறவருள் காப்பே!

---

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

நாளவந்தான் போகாமற் றிருவருளே துணையாக
நம்பி யிந்நாட்
சோளவந்தான் நகரிலுறை சோமசுந்த ரப்பெயராற்
றுலங்குஞ் செல்வ!
ஆளவந்தா னெனுங்குருவன் பகலாத நினைப்போல்வா
ரகிலத் துண்டோ!
நீளவந்தான் மனந்தெளிந்து சிவபிர மைக்யநிலை
நிறுவு வாயே!

பின்னும் சில நாட்களுக்குப் பிறகு அதாவது 1930ஹு ஆரம்பத்தில் பூபதிகளை நேரிற் காணவேண்டுமென்ற ஆவா அதிகரிக்க விஜயபுரம் வந்து பூபதிகளைத் தரிசித்து அன்புடைய மெய்த்தொண்டனு யொழுகி ஞானயோக ரகசியங்களின் நுணுக்கங்களிற் சிலவற்றை உபதேச மூலமாய் அறிந்துகொண்டிருந்தேன்.

## சென்னையில் மீண்டும் ஞானசூரியன்.

மூகம்மது ஹனீபா அவர்கள் 1930-ஹுத்திலிருந்து 1935-ஹு ஜூலை-மீ வரையில் விஜயபுரத்திலேயே தங்கி கருணாநிதி பிரஸை மானேஜ் செய்து வந்தார்கள்.

"ஞானசூரியன்" பத்திரிகையானது ஞான மார்க்கங்களைப் பொது ஜனங்களுக்குப் போதிப்பதிற் சிறந்ததொரு பத்திரிகையானதால் அதை மீண்டும் தொடர்ந்து நடத்த வேண்டுமென்று நேரிலும் கடிதமூலமாகவும் பலர் பூபதிகளைக் கேட்டுக்கொண்டார்கள். அதனுல் பிரமதூத-ஹு சித்திரை (1930-ஹு ஏப்ரல்)-மீ முதல் சோழவந்தான் கருணை. சோமசுந்தரம் என்னும் அபிதானமுடைய என்னுடன் சென்னைக்குச் சென்று ஞான சூரியன் பத்திரிகையைச் சென்னையிலிருந்து மறுபடியும் ஆரம்பித்து நடத்திவரலானுர்கள். பத்திரிகை பலராலும் நன்கு மதிக்கப்பெற்றுச் செவ்வனே நடைபெற்று வந்தது. பத்திரிகையின் முன்னேற்றத்திற்காக உதவி புரிந்த பல அன்பர்களில் முக்கியமானவர் விஜயபுரம் வாசரும், மோல்மேன் கு. மு. கம்பெனியின் மானேஜருமாகிய ஆலி ஜனுப் கா. சி. ஷேக் அலாவுதீன் ருவுத்தர் அவர்கள், பத்திரிகை ஆரம்பித்தவுடனே பத்திரிகை அபிவிர்த்திக்காக தாங்கள் நன்கொடை அனுப்பியும், சந்தாதாரராகச் சேர்வதாகச் சொன்ன பலருக்காகவும் தங்கள் கைப்பணத்திலிருந்து சிறிது தொகைகளும் சேர்த்து அனுப்பியும் உதவினுர்கள். இப்பெருந்தகையார் எப்பொழுதும் பெருந்தன்மையும் சிறந்த வுள்ளமும் படைத்தவர்கள், கற்ளுேர் முதலிய பெரியோர்களை ஆதரிக்கும் பெருங்குணமுடையவர்கள், இத்தகையோரது உதவி பெரிதும் போற்றக்கூடியதாயிருந்ததென்று பூபதிகள்

அடிக்கடி விசேஷித்துக் கூறுவதுண்டு. இரண்டாமுறை தொடங்கிய ஞானசூரியன் பத்திரிகையானது, சரியாக ஓராண்டு நடைபெற்று வந்தது. பத்திரிகை ஆபீஸ் சென்னையிலும், பூபதிகள் விஜயபுரத்திலுமாக இருந்த காரணத்தால் அடிக்கடி போய்ச் சரியாகக் கவனிக்க இயலா மல் நிறுத்தப்பெற்றது.

## காவிரி வெள்ளமும் கலங்கா உள்ளமும்.

1930-ஞ அக்டோபர்-மீ கடைசியில் நாடெங்கும் விடாது பெய்த பெருமழையினால் ஆறுகளெல்லாம் கரை புரண்டு உடைப்பெடுக்கும்படியான பெரிய வெள்ளமுண் டாயிற்று. அப்பொழுது விஜயபுரத்தில் ஓடம்போக்கி ஆற்றின் தென்கரையில் பெரும் உடைப்பு ஏற்பட்டு அதன் பக்கமுள்ள கட்டிடம் முதலியவைகள் வீழ்ந்தழியுமோ வெனப் பலரும் மனங்கலங்கினார்கள். கருணாநிதிப் பிரஸின் பெரிய கட்டிடத்திற்கும் அப்பொழுது பெருஞ்சேத முண் டாகக்கூடிய பயங்கர நிலையிலிருந்தது. பூபதிகளின் விரோதிகள் சிலர் கட்டிடத்திற்குச் சேதம் வாராதா என்று எதிர்பார்த்தார்கள். பூபதி அவர்களோ எதற்கு மஞ்சாது எல்லாம் இறைவன் செயலென்று கூறி வாளாவிருந்தார்கள். பூபதி அவர்களின் கலங்காவுள்ளத்தைக்கண்டு கலங்கியது போல் வெள்ளமும் சிறிது சிறிதாய்க் குறையலாயிற்று. பூபதிகளின் மனத்திட்பத்தைக்கண்ட பலரும் வியந்தார்கள்.

கருணாநிதி பிரஸை ஆரம்பிப்பதற்கு 20—6—1921-ல் தஞ்சை டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட்டினிடம் பிரஸுக்கு முதன் முதல் டெக்ளரேஷன் வாங்கியிருந்ததை, இப்போது பிரஸை மெத்தைக் கட்டிடத்திற்கு மாற்றுவதற்காக நாகை டிவிஷனல் மாஜிஸ்டிரேட்டினிடம் நன்னிலம் முகாமில் 11—11—1930ல் டெக்ளரேஷன் வாங்கி மாற்றப் பெற்றது.

1930-ஞூத்தில் ஞானக்களஞ்சியம் இரண்டாம் பதிப்பும், ஞானயோக ரகசியம் முதற் பதிப்பும் சென்னையில் அச்சிடப்பெற்றது.

1930-ளு நவம்பர் 13உ பிரஸ் முன்னிருந்த கட்டிடம் காலியாகிவிட்டமையா லதிலுள்ள நிலவறையில் நாலுநாள் வெளியில் வாராமல் பூபதி அவர்கள், வைராக்கியமாக நிஷ்டை கூடியிருந்து, 17ந்தாம் நாள் காலையில் வெளிப்போந்தார்கள். அதுசமயத்தில் கமுதி பெருநாழியிலிருந்து பல அவசரக் கடிதங்கள் பூபதிகளின் நிலபுலன்கள் சம்பந்தமாக வந்திருந்தது. பம்பாய்க்கடுத்த ஷோலாப்பூரிலிருந்து சில சன்னியாசிகள் பூபதிகள் விஷயங்களைக் கேள்வியுற்று தெரிசித்துப் போகவும் வந்திருந்தார்கள். பூபதிகள், சன்னியாசிகள் விருப்பத்தைப் பூர்த்திசெய்தனுப்பிவிட்டு பெருநாழிக்குச் செல்லும் விஷயமாக சிந்தனை செய்துகொண்டிருந்தார்கள்.

## பிறந்தபதியிற் பெரும்பிரசங்கம்.

ஞானபூபதி அவர்கள், 1930-ளு நவம்பர் மீ சந்தர்ப்பத்திலே தங்கள் ஜனன பூமியாகிய பெருநாழிக்கு தங்களுடைய பூர்வீக நிலங்களைப் பார்வையிடும் பொருட்டுச் சென்றிருந்தார்கள். அப்பொழுது, அவ்வூர்வாசிகளான இந்து முஸ்லிம் அன்பர்கள் பலரும், ஷௌகத் முஸ்லிம் வாலிப சங்கத்தின் அங்கத்தினர்களும், ஷை சங்கத்தின் சார்பாக தலைமை வகித்து ஒரு பிரசங்கம் செய்யவேண்டுமென்று கேட்டார்கள். பூபதி அவர்கள் அதற்கிசையவே, 21-11-30உ யில் ஒரு பெருங் கூட்டம் கூட்டப்பெற்றது. அதற்கு உள்ளூர், வெளியூர்களிலிருந்து இந்து முஸ்லிம் அன்பர்கள் பலரும் வந்து குழுமியிருந்தார்கள்.

பூபதி அவர்களை பெருத்த ஆரவாரத்தினிடையே உயர்ந்த மரியாதைகளுடன் பிரசங்கமேடைக்கு அழைத்து வந்தார்கள். பூபதிகள் ஆசனத்தமர்ந்ததும், பின்வரும் உபசாரப் பத்திரத்தை ஷௌகத் முஸ்லிம் வாலிப சங்கத்தின் சார்பாக வாசித்தளித்தார்கள்.

[அசலுக்குச்சரியான நகல்].

பெருநாழி "ஷௌகத் முஸ்லிம்" வாலிப சங்கத்தின்
ஜமாத்துல்ஆகிர் மாததறிய அவையானது 21—11—30ல்
நடைபெற்றபோது

பெருநாழி, சென்னை, திருவாரூர் வாசியும்,
வேதாந்த பாஸ்கரன், ஞானக்களஞ்சியம், ஞானயோகரகசியம்,
ரூஹுல் இஸ்லாம் முதலிய அரும்பெரும் நூற்களின்
ஆசிரியரும், ஞானசூரியன் பத்திரிகாதிபருமான
ஷெய்குல் மஷாயகு, காமில், முகம்மில், ஆரிபுபில்லா(ஹ்)
ஸ்ரீ கருணையானந்தம் என வழங்கும்

முஹம்மது இபுராஹீம் ஞானபூபதி அவர்கள்

சபாநாயகர்ப்பதவி வகித்ததற்காக
ஷை சங்கத்தார்களால் வாசித்தளித்த

## வந்தனோபசார வரவேற்புப் பத்திரம்.

**பரிசுத்த இஸ்லாத்தின் பரிபாலன மணியே!**

அருள் நிறை வள்ளலாம் ஆண்டவன் தமது திருக் கருணையால் மன்பதைகளின் சீர்திருத்தத்தின் பொருட்டு அவதரித்த செம்மலே! தங்கள் வரவு நல்வரவாகுக.

**தீனவர்புகழும் ஞானபூபதியே!**

இச் சங்கத்தின் கட்டிடத்தில் முன் ஒரு ஞான்று தங்கள் திருவசனங்களைச் செவிமடுத்த எம்போரவலும், அன்பு பெருகி வளர, தங்கள் திருச்சமுகத்தை என்று காண்போம்! என்று காண்போம்!! என்றேங்கிய எமது மனமும் இரு கண்களும் இன்று இவண் விஜயம் செய்த தங்கள் திருப்பதத்தைப் பார்த்ததும், அன்று மலர்ந்த தாமரையிலும் அதிக முகமலர்ச்சியுற்று நன்று நன்றெனக் கொண்டாடப்பெற்றது எங்கள் பெரும் பாக்கியமே!

**முத்தமிழ்வல்ல மோனச்சுடரே!**

"தன்னை மறந்தோர் தலைவனை யறியார்" என்னும் [illegible] பெரும் போதனையாற்றிய அன்[illegible]

தங்கள் இனிய பிரசங்கமாரி யென்னும் நல்லுணாவாலும், தேவரீருடைய திருவருள் முயற்சியாலும் இந்தச் சங்கமானது சிறப்பொடு பிறந்து வளர்ந்து விகசிதம்பெற்று வருகின்றது; இனியும் இன்னும் அதிகமாகக் கிளைத்துப் பூத்துச் செழிப்புறச் செய்வதற்கு மேன்மேலும் தங்கள் திருத்தெரிசனத்தை நாடிய எங்கள் மனக்குறையை நீக்கி மகிழ்வுறச்செய்யவேண்டுமென மிக்க இறைஞ்சுகின்றோம்.

அருளைநிறைந்தொளிரும் கருணாநிதியே!

இச்சங்கத்தின் கிரியா சாலவுஞ் சிறிதாயுளது. அங்கத்தினர்கள் வலுவோவா அதனிலும் குறைவு; எனினும் சிறந்தவாம் அருமையீ! தங்கள்பாலுள்ள நின் தருக்கணிகளை யுதவி எங்கள்பால் கிருபை யுற்றிடவும், என்றென்றுந் தங்கள் தவப்பெருமை மேன்மேலும் வளர்ந்தோங்கவும், எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லா(ஹ்) ஜல்ல ஷானுகு வதஆலாவைப் பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்,

பெருநாழி,
21—11—30.

தங்கள் அன்பார்ந்த ஊழியர்களாகிய,
ஷௌகத் முஸ்லிம் வாலிப சங்கத்தார்.

பிறகு பூபதி அவர்கள் பெருத்த ஆரவாரத்தினிடையே எழுந்து பேசியதாவது:—

அன்பர்களே!

யான் பிறந்த தாய்நாட்டிலே என்னைக் கௌரவிப்பதற்காகவும், எனது பிரசங்கத்தைக் கேட்பதற்காகவும், ஜாதி மத பேதமின்றி உள்ளூர் வாசிகளும், வெளியூர் வாசிகளும் வந்து இங்கு குழுமியிருப்பதைக் காண எனக்குப் பெரும் ஆனந்தமும் வியப்பும் உண்டாகிறது. என்னுயிரினுஞ் சாலச் சிறந்த எனது அருமைத் தந்தையார் புலவர்கள் நாயகம் (அவர்கள்) பிறந்து வளர்ந்து புகழ்பெற்றது இத்தலத்திலே யாகும். அவர்கள்பால் கல்வி கற்றோரும், கேள்வி பெற்றோரும், அன்புரிமை கொண்டோருமாகப்

பலர் இங்கே கூடியிருக்கின்றீர்கள். நீங்களறியாத ஒன்றிருப்பதாக நான் உங்கள் முன்னால் சொல்ல வருவது கொல்லர்தெருவில் ஊசி விற்பதுபோலாகும். ஆயினும் நீங்கள் என்னை விரும்பிக் கேட்டுக் கொண்டதற்காக யானறிந்தவற்றைச் சிறிது கூறலாமென்று எண்ணுகிறேன்.

இச் சபையில் நிறைந்துள்ள நாம் எல்லோரும், இன்னும் மற்றுமுள்ள ஹிந்து முஸ்லிம் யாவர்களும், ஆதமுடைய மக்கள் என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். நமது முன்னோர்களெல்லோரும் கள்ளர், மறவர், அகம்படியர், வேளாளர், நாயக்கர், ரெட்டியார், நாடார் முதலான வகுப்பையுடைய ஹிந்துக்களாகவே இருந்துள்ளார்கள். ஏர்பதியில் அடங்கியிருக்கும் இப்றுஹீம் ஒலியுல்லா அவர்கள், சில நூற்றாண்டு கட்கு முன் இப்பாண்டி நாட்டில் வந்து பாண்டியனை இஸ்லாமாகும்படி யழைக்க, அதற்கிணங்காமையினால் யுத்த முதலானவைகள் நடந்து ஹிந்துக்களை இஸ்லாமானவர்களாக ஆக்கினார்கள் என்பதை, தீன்நெறி விளக்கம் என்னும் புராணத்தின் மூலம் நன்கறியலாம். நமது முன்னோர்களெல்லாம் இஸ்லாத்தில் ஆனவர்களே தவிர வேறில்லை. இப்பொழுதும் கூட ஒருதாயின் பிள்ளைகளில் ஒருவர் ஹிந்துமதத்திலும், ஒருவர் இஸ்லாம்மதத்திலும் இருப்பதைப்பிரத்தியக்ஷமாகக் காண்கிறோம். ஆகையால், மத பக்தியில் வெவ்வேறு விதமாக இருப்பினும், ஒரே சகோதரர்களென்பதை யாரும் மறுக்கமுடியாது. அங்ஙனமிருப்ப, முன் பின் யோசியாமல் நமது நாட்டில் மதத் துவேஷமும், வகுப்புத் துவேஷமும் நிறைந்து, ஒருவருக்கொருவர் சண்டையிடுவதும், மண்டையுடைவதும், கொலை செய்யப்படுவதும், தீவைப்பதும், திருடுவதுமாக பலவித தீயதொழிலுக்கு ஆளாகிவிடுவது வருந்தத் தக்கது. யான் சிறு பிராயமுதல் இன்றளவும் பார்த்தேன்—பார்க்கிறேன், இத் தென்னிந்தியாவில், அதுவும் நம் பாண்டிய நாட்டில் முரட்டுத்தனமே குடிகொண்டு வருகிறது. இப்பொழுது நீங்கள் ஏகோபித்து ஒன்று சேர்ந்து குழுமி யிருப்பதைக்

காண, பெரிதும் வியப்பும் மகிழ்வுமடைகிறேன். இவ்விமான ஒற்றுமைக்குறைவை நிவர்த்திக்க,

நாம் உலகம் எங்கும் பரவவேண்டுமென்று விரும்புகி அன்புமார்க்கத்தைப்பற்றி உங்கள் முன்னால் சிறிது கூறலாமென்று எண்ணுகிறேன். உலகத்திலே எத்தனையோ மதங்களிருந்தாலும் எல்லோருக்கும் பொதுவான ஒரு அன்பு மதம் வேண்டியது அவசியம். அன்பு மதம் என்று சொன்னவுடனேயே சிலர் இவனென்ன புதிதாக ஒரு மதம் உண்டாக்கப் பார்க்கிறானென்று துள்ளிக் குதிக்கிறார்கள். அன்பு மதமென்பது பொருளில் புதிதாகத்தோன்றுகிறதேயன்றி வேறில்லை. நமது முன்னோர் கூறியவைகளிற் சிலவற்றை பிறரு உணர்கின்றோம், அவைகளை நேராக எடுத்துக் காட்டுவதே அன்புமதத்தின் முக்கிய நோக்கமாயிருக்கும். சகல மத சம்பிரதாயங்களும் பல பெரியார்களின் உள்ளக்கிடக்கையுமாகவிருக்கும். அன்புமதத்தின் நோக்கங்களையும் அவசியத்தையும் சிறிது பொறுமையுடன் கேட்டால் உண்மையை உணர்வார்கள் என்பது திண்ணம்.

உலகத்திலே நாம் சிலவற்றை விரும்புகிறோம் சிலவற்றை வெறுக்கிறோம். அப்படியே நம்மைச் சிலர் நேசிக்கிறார்கள் சிலர் வெறுக்கிறார்கள்.

ஒன்றினிடத்தில் (இராகம்) ஆசையும், மற்றொன்றில் (விராகம்) வெறுப்பும் மனிதர்களுக் குண்டாயிருப்பது எல்லோரும் அறிந்த விஷயம். இதுபோலவே மத விஷயத்திலும் விருப்பு வெறுப்பால் செய்யுங் காரியங்கள் அளவற்றன. ஒரு மதத்தைப் பின்பற்றி மனிதர்களிடத்தில் அன்பு பாராட்டி எல்லாவற்றையும் பிரியத்தோடு சிலர் காண்கிறார்கள். தன் மதத்தையே இறுகப் பிடித்துக்கொண்டு மற்றவர்களை வெறுப்பவர்களும் சிலருண்டு. இந்த மதப்பற்றினாலேதான் அநேகர் கொலையுண்டனர். மதப்பற்றினாலே ஏழைகளுக்கு அன்னசத்திரங்களும், தரும வைத்தியசாலைகளும் ஏற்படுத்தப்பெற்றன. மனிதர்களிடத்தில் மாத்திர

யின்றி, சாதாரண மிருகங்களிடத்திலும் கருணைவைத்து சீவ இம்சை கூடாதெனை வற்புறுத்தியதும், மதங்களின் காரியந் தான்.

இது இவ்வாறிருக்க, எல்லா மனிதர்களும் அநுசரிக் கத்தக்க ஒரு பொதுவான மதம் இப்போது உண்டா என்று ஆலோசிப்போம். இக்காலத்திலே அநேக சபைகள் கூடுகின் றன. மனிதர்கள் ஒருவருக்கொருவர் பகைத்தல் கூடாது, எல்லோரும் சமமாய் வாழவேண்டும், ஒருவருக்கொருவர் சகோதரத் தன்மையுடனும், அன்புடனும் நேசித்தல் வேண் டும் என்று கூறுகிறார்கள். மக்களுக்குள் பொறாமையும் பகையும் அதிகரித்து அதனால் வம்பு வழக்குகள் ஏற்படு வதை நிவர்த்திக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். அதை நிறைவேற்றவும் பல வழிகளில் பாடுபடுகிறார்கள். ஆனால் அம்முயற்சியெல்லாம் பயன்படுவதில்லை. சகோதர ஒற்றுமை என்பது வெறுஞ் சொல்லாய் முடிகிறது. முற் காலத்திலே அநேக மகான்கள் உலக நன்மைக்காக உண்மை யன்புடன் சகோதர ஒற்றுமை வேண்டுமென மொழிந்தார் கள். அவர்கள் இன்ன எண்ணத்தோடு சொன்னார்கள் என்பதை அறியாது சிலர் சகோதர ஒற்றுமையை வாயால் மாத்திரம் கூறி, காரியத்தில் காட்டாது வீணாக மதத்தின் அருமையும் பெருமையும் போக்கி, பிறர் நகைக்க ஆளாகின் றனர். கடைசியில் பலர் சபைகூடி உங்கள் மதம் அது, எங்கள் மதம் இது, அவர்கள் ஆசாரம் உயர்ந்தது, இவர்கள் ஆசாரம் இழிந்தது என்று பேதம் பாராட்டி சகோதர ஒற் றுமையை விருத்திசெய்யாது பழைய ஸ்திதியிலே வந்து நிற்கிறார்கள்.

இவ்வேறுபாடுகள் எல்லாம் ஒழிந்து ஒற்றுமையும், சமத்துவமும் உலகில் நிலவவேண்டுமானால், நாமெல்லோரும் ஒருண்மையைக் கடைப்பிடிக்கவேண்டும். எதனால் உலகம் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டிருக்கிறதோ! எதனால், தாய் குழந்தையை வளர்க்கின்றாளோ! எதனால் புருடன் மனைவியை நேசிக்கின்றானோ! எதனால் சிநேகிதனுக்கு உடல்

பொருள் அணியைக் காக்கம் செய்கின்றதே! அதுதான் அன்பு. அன்பு இல்லையேல் உலகமில்லை. உண்மைக் கண் கொண்டு நோக்குவார்க்கு எல்லாம் அன்புமயமாகவே தோன்றும்.

அன்பும் சிவமும் இரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே

என்ற பெரியார் வாக்கையும் இங்கே கூர்ந்து நோக்குங்கள்.

இவ்வன்பைப் பெருக்கிக்கொள்ளுகிறவனுக்கு ஆனந்தம் அதிகரிக்கும். அன்பினால் வசப்படாதது உலகில் எதுவுமில்லை. எல்லாம் அன்பிலே கட்டுண்டு கிடக்கின்றது. அன்பினாலேதான், உயிருக்கும் உடலுக்கும் தொடர்பு உண்டாயிருக்கிறது. உயிர்நிலையும் அன்பின் வழியதாகவே யிருக்கின்றது,

"அன் போடியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென் போடியைந்த தொடர்பு."!
"அன்பின் வழியது உயிர்நிலை"

என்ற திருவள்ளுவர் வாக்கும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

அழியா இன்பத்தையும் மனச்சாந்தியையும் அடைந்த பெரியோர்கள், இவ்வன்பு மார்க்கத்தைப்பற்றி எவ்வளவோ கூறியிருக்கின்றார்கள்.

மனிதர்கள் அந்தகாரத்தினின்றும் விடுபட்டு உயர்நிலையடைந்து, அன்பும், ஆனந்தமும். சாந்தியும் பெறுதற்கு இவ்வன்பு மார்க்கமே சிறந்த மார்க்கம். அன்பை போதிக்காத மதமே உலகில் இல்லை. எந்த மதத்தை அனுசரிப்பவராயினும் அன்பு மார்க்கத்தைக் கடைப்பிடித் தொழுகல் சாலச் சிறந்தது.

எல்லோருக்கும் பொதுவான அன்பு மார்க்க சங்கமானது, திருவாரூரிலும் சென்னையிலும் தாபிதம் செய்யப்

போகிறோம். தூத்துக்குடி முதலான இடங்களிலும் தாபிதம் செய்ய ஏற்பாடுகள் நடந்துவருகிறது. அன்பு மார்க்க சம்பந்தமான பிரசுரங்களைப் பார்ப்பீர்களாயின் எல்லாம் நன்குணர்வீர்கள். இங்கும் அன்புமார்க்க சங்கத்தை இணைத்து அக்கொள்கைகளைப் பரவச்செய்யுங்கள்.

என்று பல அரிய மேற்கோள்களுடன் கேட்டோர் வியப்புறுமாறு பேசிமுடித்தார்கள். எல்லோரும் சந்தோஷ ஆரவாரம் செய்து கரகோஷத்தால் தங்கள் அன்பைப் பூபதிகளுக்குத் தெரிவித்துக்கொண்டார்கள்

பூபதிகளை வந்தனோபசாரம் செய்து, பின்னரும் மாலை சூட்டி மகிழ்வித்தார்கள்.

அதன்பிறகு நான் பூபதிகளின் ஆக்ஞைப்படி சென்னையிலிருந்து விஜயபுரத்திற்கு வந்து 31-ம் வருடம் முதல் கருணைநிதி பிரஸை கவனித்து வந்தேன்.

1931 - 32-ம் வருடங்களில் கருணைநிதி பிரஸ் மெத்தைக் கட்டிடத்தில் பூபதியவர்கள் ஏகாந்தமாய் இருந்துகொண்டு தங்களது ஆத்மசக்தியைப் பெருக்குவதில் மிக்க வைராக்யத்துடன் நிஷ்டைகூடி வந்தார்கள். அவர்களுடைய சிம்ம கர்ஜனை போன்ற திக்று ஜல்லி (தியானங்) களை அடியேன் முதல் எத்தனையோ பேர்கள் இராக்காலங்களில் கேட்டு நித்திரையிலிருந்து பயந்து எழுந்து விலவிலத்து திகில் கொண்டுள்ளோம். விஜயபுரத்திற்கு மேற்கே தஞ்சைக்குப் போகும் ரஸ்தாவில் ஓடம்போக்கி ஆற்றின் தென்கரையில் திருவாரூர் பெரிய மைஸ்மில் தண்ணீர்பம்புக்கு மேல்புறம் மூங்கிற் புதர்களும், பல விருட்சங்களும், அடர்ந்த செடிகளும், பயங்கரமான கோயிலும், பாம்புகளும், பட்சிகளும், பள்ளங்களும், மேடுகளும், மிகுந்துள்ள ஓர் காட்டுத் தோட்டத்திற்கு காலை 3 மணிக்கு பூபதிகள், மான்தோல், புலித்தோலுடன் எழுந்துபோய் ஒருவரும் அறியாதபடி சென்று, பலவித தியானங்கள் செய்வார்கள். அப்பொழுதுண்டாகும் சிம்மநாதம்போன்ற ஒருவகைத் தொனியைக்கேட்டு

ஆற்றின் வடகரையிலுள்ள சிலர், அரிவாள், தடிக்கம்பு முதலிய ஆயுதங்களுடன் ஓடிவந்து, ஏதோ ஒரு பிராணி சப்திக்கிறது, அதனால் ஜனங்கள் அநேக நாட்களாக பீதியடைந்து வருகிறார்கள், அது இன்னதென்று கண்டறிய வேண்டுமென்று காட்டில் நாலாபக்கமும் வந்து நுழைந்து தேடினார்கள். அங்கு பூபதிகளைத் தவிர வேறொருவரையும் காணாமல் திகைத்து பூபதிகள்பால் வந்து வினவினார்கள். பூபதிகள் அதற்கொன்றும் பதில் உத்தரம் கூறாமலிருக்கவே, அவர்கள் வெகுநேரம் நின்றுவிட்டு ஒன்றும் செய்யமுடியாமல் பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டு போய்விட்டார்களாம். சில காலத்திற்குப் பிறகு அங்ஙனமே, 1933-௵த்தில் கருஷோ. சோமசுந்தரமாகிய அடியேனும் பூபதிகள்பால் அப்பியாசங் கேட்டு அதே காட்டிற்குச்சென்று தியானம் செய்யும்போது சிலர் வந்து, என்னையும் பயமுறுத்தி, பூபதிகள் முன் நடந்துகொண்ட விஷயத்தையும் ஞாபகப்படுத்தி, இனிமேல் பூபதிகளைத்தவிர நீங்களெல்லாம் இக்காட்டிற்கு வரக்கூடாது, அப்படி வந்து எங்களுக்கு பயங்கரம் உண்டாகும்படி செய்தால் பெருத்த மனஸ்தாபம் உண்டாகும் என்று அறிவுறுத்திச் சென்றார்கள்.

ஒருதினம் பூபதிகளும் அடியேனுமாக சாதாரணமாக வந்து தியானம் செய்யும்போது அத்தோட்டத்துக்கு உரியவன் எங்களைக்கண்டு (நிர்த்தாட்சண்யமாக) என் உத்தரவின்றி நீங்கள் தோட்டத்திற்குள் வரக்கூடாது என்று கூறினான். அப்பொழுதே பூபதிகள் இந்தத் தோட்டம் நமக்கு மிக்க அவசியம் என்று கருதி, பலதடவை அவனிடம் விலைக்குக் கேட்கும்படி செய்தார்கள். அதற்காக அவன் சினந்து அப்படியும் கேட்கலாச்சா என்று முறுமுறுத்தான். பிரஸ் கட்டிடத்திற்கு அடுத்த தென்புறத்து வீட்டுக்காரனாகிய அவன், பூபதிகள் விஷயமாக சமயம்போல் பலவித இடுக்கண்புரிந்து வந்தான். அது விஷயமாக அவனைக் கண்டிக்கவேண்டுமென்று பலர் சொல்லியும், அதற்கு பூபதிகள் "எல்லாம் ஆண்டவனுக்குத் தெரியும் அவன் நம்மை நேர்வழியில் நடத்துவான். குர்ஆனில், வஜஅல்னா

யம்லக்கும் லிபம்லின் பித்னத்துன் அதஸ்பிறூன் = உங்களில் சிலரை சிலருக்குச் சோதிப்பாக ஆக்கினோம். நீங்கள் பொறுமை செய்வீர்களா? பொறுமை செய்யுங்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது.

And We have made some of you a trial for others; will you bear patiently?

*Qur-An. Part XVIII Ch XXV Sec. 2 No. 20.*

அன்றியும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பகைஞர் இருந்தே தீரவேண்டும்; இல்லாவிடில் அவர்கள் முன்னுக்கு வரமுடியாது என்பது விழுமியோர் கருத்து. இது விஷயமாக ஞானக் களஞ்சியம்—அடியார் நிந்தை என்னும் அத்தியாயத்தில் சாங்கோப சாங்கமாக விவரிக்கப்பட்டிருக்கும் விஷயங்களை நீங்கள் தயவு செய்து பார்த்தால் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்ய முற்படமாட்டீர்கள்'' என்று சமாதானம் கூறி அவர்களை மகிழ வைத்தார்கள்.

இப்படிக்கு,
கருணை. சோமசுந்தரம்.

பின்னர், அவனுக்கு பலவிதமான இம்சைகள் நேர்ந்ததால் வீட்டையும் விற்று வெளியேறி ஷை தோட்டத்தையும் 1933-ஞு ஜூலை-மீ 7உயில் பூபதிகளுக்கு கிரையத்துக்கு விற்று விட்டு, ஊரில் வாடகை கொடுத்து குடியிருக்க முடியாமல் ஒரு காட்டில் குடியிருந்து வருகிறுன். ஆகையால், பூபதிகள் எண்ணியவாறு அத்தோட்டம் பூபதிகளுக்கே கிடைக்கப்பெற்றது.

## மெஸ்மரிஸ ஆத்மஞான திருஷ்டி.

பூபதிகள், தங்கள் புதுக் கட்டிடத்தின் மேன்மாடியிலிருந்துகொண்டு, பிரஸ் இந்தக் கட்டிடத்திற்கு வருவதற்கு முன், பழைய கட்டிடத்தில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்துகூறி, அதே பிரகாரம் சரிதானு என்று பார்த்து வரச்

செயவார்கள். யார் யார் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள், என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து அவர்களிடம் கேட்பார்கள். இது பூபதிகளுக்கு எப்படித் தெரியவரும்? நடந்ததையாவது யாரும் போய் சொல்லியிருக்கலாம், நினைத்ததை யார் போய் சொல்லியிருக்கக்கூடும், இதுபூபதிகளின் ஆத்ம சக்திதான் என்று வியப்பும் அச்சமும் அடைவார்கள். பூபதிகள் ஆபீஸிலில்லாதபொழுதும், வெளியூர் போயிருக்கிறபொழுதும் ஆபீஸிலிருக்கிறவர்கள், "அப்பா! வேலைகளை எல்லோரும் சரியாகப் பாருங்கள். பூபதிகள் எங்கிருந்தும் நமது திருட்டுத்தனங்களைக் கண்டு பிடிப்பார்கள். நாளை மறுதினம் இது விஷயமாகக் குறிப்பிட்டு கடிதம் வந்தாலும் வரும், ஜாக்கிரதையாய் வேலையைப் பாருங்கள்" என்று பேசிக்கொள்வார்கள் அநேகருக்கு மெஸ்மெரிசம், ஹிப்நாடிசம் மூலமாக ஆச்சரியப்படும்படி சிற்சில அற்புதங்களைச் செய்து காண்பிப்பார்கள். பூபதிகளின் ஏக குமாரராகிய ஜமால் என்னும் இளம்பூபதி அவர்களை ஒரு சமயம் பலபேர்கூடியிருக்கின்றபோது தங்களது அருட் பார்வையால் உருக்கிப் பார்த்தார்களாம் உடனே இளம்பூபதிகள் விழிப்பு நிலையில் அநேக தூர திருஷ்டிகளை சென்னை, கொழும்பு முதலான இடங்களில் நடக்கிறதைத் தெரிந்து சொல்லினர். அதைச் சிலர் கொழும்பு, சென்னை முதலிய இடங்களில் நடக்கிறதைச் சொன்னால், சரி சரியில்லை என்று நாங்கள் எங்ஙனம் தெரிந்துகொள்ள முடியும். சமீபத்தில் நடக்கிறதைத் தெரிந்து சொன்னால் நாங்கள்போய் பார்த்துத் தெரிந்துகொள்ளலா மென்று கூறினார்கள். உடனே பூபதிகள் "தம்பி ஜமால்! நமது ஆபீஸில் என்ன நடக்கிறது சொல் பார்ப்போம்" எனக்கேட்டார்கள். அதற்கு ஜமால் "சிலர் பத்திரிகைகள் ஆர்டர்கொடுக்க வந்திருக்கிறார்கள். 500 பத்திரிகைக்கு ரூ. 6 கேட்கிறார்கள். அவர்கள் ரூ. 4—8—0 தருகிறேனென்று சொல்லுகிறார்கள். அது டிம்மி ¼ சைஸ் கிளேஸ் பேப்பர், முக்காடிட்ட விக்ரகம் (இராமலிங்க சுவாமிகள்) பழைய பிரதியும்

கொண்டு வந்திருக்கிறார்கள். இவ்விதமாக நிகழ்ந்துகொண்டிருக்கிறது'' எனச் சொல்லவே, ஒருவர் அங்கு சென்று விசாரித்து, சொல்லியதுபோல் நிகழ்ந்திருக்கக்கண்டு பெரிதும் வியப்புற்றார்கள். இங்ஙனமே 1931—32 வருஷங்களில் நடந்த சில அற்புதங்களுக்குக் கங்கு கரையில்லை.

கமுதியிலேயே புராதனமாக வசித்துவரும், மூ. காசி ஆச்சாரியாருடைய செல்வப் புதல்வராகிய நாகலிங்க ஆச்சாரியார் என்பவர், இளமையிலேயே எந்தக் கல்விமான்களைக் கண்டாலும், அவர்களை மிக உபசரித்துப் புகழ்ந்து பாராட்டி, அவர்கள் வாயிலிருந்துவரும் அறிவுரைகளை மிக விருப்புற்று உள்ள மகிழ்ந்து உடலம் பூரித்துக் கேட்கும் உயர்குணமுடையவர். அடியார்களைக் கண்டாலும் அவ்வாறே அன்புடன் வணங்கி உபசரிக்கும் கடப்பாடுடையவர். தெய்வபக்தி நிரம்பியவர், சத்திய சீலர். அந்நகரத்து முஸ்லிம் பெருமக்களாலும், ஏனைய சமூகத்தினராலும் அன்றும் இன்றும் என்றும் மதிக்கப்பெற்றவர். பெரும்பகுதியினரான அவ்வூர் முஸ்லிம்களும் மற்றவர்களும் ஆபரணாதிகள் செய்யக் கொடுக்கும்போதும் வாங்கும்போதும், உரை பார்த்தும் நிறுத்தும் கொடுக்கும் வழக்கமில்லாத அவ்வளவு நன்னம்பிக்கையுடையவர். இப்பொழுதும் முஸ்லிம்கள் வெளிநாடு செல்லும்போது தங்கள் பொருளைக் காத்து ஒப்புவிக்க, ஆச்சாரியாரின் உதவியை நாடுவது வழக்கம். நற்குண சீலர்; இன்மொழியும் புன்முறுவலுமுடையவர். இவர்களுடைய மூத்த புதல்வர் சிதம்பர ஆச்சாரியும், "தந்தையறிவு மகனறிவு'' என்றபடி; நற்குணமுடையவர், தமிழ் ஆங்கிலங் கற்றவர்.

நாகலிங்க ஆச்சாரியார் இளம்பிராயத்திலே பூபதிகளின் அருமைப்பிதாவாகிய புலவர்கள் நாயகம் அவர்களிடத்தில் அன்பு பூண்டு, கற்பதும் கேட்பதும் ஆகிய பெரும்பாக்கியத்தைப் பெற்றவர். புலவர் பெருமான் தஞ்சை ஜில்லாவிலிருந்து பெருநாழிக்குச் செல்லும்போதும் வரும்போதும், கமுதியில் நாகலிங்க ஆச்சாரியாரின் விருந்

தினராகத் தங்கி அளவளாவிச் சென்றுவருவது வழக்கம். அதுபோலவே, பூபதி அவர்களும் வருடந்தோறும் பெருநாழி சென்று வருங்கால், ஆச்சாரியாரவர்கள் இல்லத்தில் தங்கி உபசரிப்பை ஏற்றுவருவது வழக்கம். இத்தகைய பேரன்புடையவராகிய நாகலிங்க ஆச்சாரியாரின் இரண்டாவது குமாரர் நடராஜ ஆச்சாரிக்கு 1932-ஆம் ஜூன்-மீ 5உ (ஆங்கிரச-ஆம் வைகாசி-மீ 23உ) நடைபெற்ற விவாகத்திற்காகப் பூபதிகளின் ஆசீர்வாதப்பாடலோடு திருமணப் பத்திரிகை அச்சடித்து அனுப்பவேணுமென்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். அங்ஙனமே பூபதிகள் ஆசீர்வாதத் திருவிருத்தம் அமைத்து, திருமண அழைப்புப் பத்திரிகை அச்சியற்றி அனுப்பியிருந்தார்கள். அத் திருமணப் பத்திரிகை அங்குள்ளார் பலருக்கும் அனுப்பப் பெற்றது. அப் பத்திரிகையைக் கண்ணுற்ற பலர் அதில் வரைந்துள்ள,

சுரும்புமுரன் றரும்புதுவைத் திரும்பிழியா றுங்கலுழி
துலக்கி யோடிக்
கரும்புகமு குடன்சாலி விளைபழனம் புடைசூழுங
கமுதி யூரில்
விரும்பிவளர் நாகலிங்கேந் திரன்புதல்வன் நடராஜன்
விழைவி னோடு
வரும்பிடிநேர் பேச்சியம்மா ளுடனட்டைஸ் வரிய முடன்
வாழ்க மாதோ

என்ற ஆசீர்வாதப் பாசுரத்தின் இலக்கண அமைதி பொருளமைதிகளைப் பாராட்டியும், சிற்சில இடங்களில் பொருள் விளங்காமலு மிருந்தார்கள். பிறகு பூபதிகள் குழந்தை ஜமாலுடனும் கருணை.சோமசுந்தரம் ஆகிய அடியேனுடனும் அத் திருமணத்தைச் சிறப்பிக்கச் சென்றிருந்தபோது அப்பாடலுக்குப் பொருள் அறிவிக்குமாறு பூபதிகளிடம் தெரிவிக்க, அவர்கள் கூறிய அர்த்த புஷ்டியான உரையைக் கேட்டு அங்கு குழுமியிருந்த பெரிய வித்துவான்கள் முதல் பலரும் பெரும் வியப்புற்றார்கள். அத்திருமணச் சபையில் மணமகனுக்கு ஞானபூபதிகள் இயற்றி ஆசீர்

வதித்தருளிய பாடலை, ஞானபூபதிகளின் மாணவராகிய கருணை.சோமசுந்தரம் என்னும் என்னிடம்கொடுத்து வாசிக்கச்செய்தார்கள். அப்பாடல்களுள்,

தனம்படைத்தா ர் சமஸ்தானு திபதியெனச
சகஙகொண -ாடும

கனம்படைத்தா ருலகிலுளர் கருதலரைப் புறங்காணக்
கடல்போல் பந்து

சனம்படைத்தா ருலகிலுளர் நாகலிங்கேந் திரசுமுகன்
தன்னைப் போன்று

மனம்படைத்தா ருளரோவென் றறிஞர்புக ழிவன்பெருமை
வழுத்தற் பாற்றே

என்று கூறியிருந்த செய்யுளைக்கேட்டு அங்குள்ள அறிஞர்கள், ஐயா! நாகலிங்க ஆச்சாரியாரே! ஞானபூபதிகள் வாக்கினால் இத்தகைய ஆசிர்வாதச் செய்யுள் கூறப்பெற்றுள்ளதானது, "நீரும், உமது முன்னோர்களும், உமது சந்ததிகளும் செய்த மகாபாக்கியம்" என்று கூறிமகிழ்ந்தார்கள். பூபதிகள் குடும்பத்துடன் கமுதிக்கு விஜயம் செய்திருப்பதைக் கேள்வியுற்று, பெருநாழியிலுள்ள பல அன்பர்களும் வந்து தரிசித்து, தங்களூருக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்கு நாகலிங்க ஆச்சாரியார், இப்பொழுது வெளியூர்களிலிருந்து பல அன்பர்கள் தரிசிப்பதற்காக அடிக்கடி வந்துகொண்டிருப்பதாலும், இன்னும் பல அன்பர்கள் தரிசிக்க வருவதாகச் சமாச்சாரம் வந்துகொண்டிருப்பதாலும், நீங்கள் இன்னும் சில தினங்கள் கழித்து வந்து அழைத்துக்கொண்டு போங்கள் என்று கூறியனுப்பினர். அவ்வாறே அவர்கள் பெருநாழிக்குத் திரும்பிப்போய், 14—6—32ல் செவ்வாய்க்கிழமை யன்று, பூபதிகளுக்கு மிக்க நண்பராகிய பிச்சை முஹையதீன் எனபவரை, பூபதிகளை அழைத்துவரும்படி வண்டியுடன் கமுதிக்கு அனுப்பி யிருந்தார்கள். எமது ஞானப்பிதாவாகிய பூபதிகள், பெருநாழிக்குச் செல்லும்பொருட்டு, அவர்கள் தேவியார், குழந்தை முதலானவர்களோடு அன்றுதக்க நேரத்தில் (பகல் 2 மணிக்கு) புறப்பட்டார்கள். வழி

யனுப்ப வந்திருந்த பல அன்பர்களோடு உரையாடிக்கொண்டிருந்ததனால் சற்று நேரந்தாழ்த்து, மாலை 4 மணி ஆகிவிட்டது. அங்குள்ளார் பலரும் இன்று முன்னிருட்டான தாலும், வழியில் கள்ளர் பயம் அதிகமானதாலும் இன்றிரவு இங்கேயே தங்கி, காலையில் போவதே நல்லதென்று கூ கள.

## கள்வர்கள் நல்லவர்களானது.

பெருநாழியிலிருந்து அழைக்க வந்திருந்த பிச்சை முஹையதீன் என்பவர் அதெல்லாம் ஒன்றும் வராது! பல ஊர் அன்பர்களும் பூபதி அவர்களைப் பார்க்கும் பொருட்டு வந்து பெருநாழியில் காத்துக்கொண் டிருப்பார்களாகையால், அவசியம் புறப்படத்தான் வேண்டும், என்று பிடிவாதமாக கூறி அழைத்துச் சென்றார். எல்லோரும் தனிவண்டியில் வாகைக்குளம் மார்க்கமாக வாகைக்குளத்துக்கும் கீழ்க்குடிக்கும் மத்தியில் செல்லும்போது, கமுதி சந்தைக்கு வந்த சிலர் பின் தொடர்ந்து வந்தார்கள். பூபதி அவர்களின் தேவியாரும், குழந்தை ஜமாலும் ஏராளமான நகைகள் அணிந்திருப்பதையும், வண்டி தனிமையாகச் செல்லுவதையும் அவர்கள்பார்த்து, திரும்பிப்போய்ச் சில சகாக்களைச் சேர்த்துக் கொண்டு வந்து வண்டியை மறித்து, வண்டியை நிறுத்தும்படி பயமுறுத்தினார்கள். அதைக் கண்டு சுத்த வீரராகிய பிச்சை முகையதீன் என்பவர் மிக்க தைரியத்தோடு கையிலிருந்த கழியைச் சுழற்றி, உங்களை யெல்லாம் எமனுலகத்திற்கு அனுப்பிவிடுகிறேனென்று அறை கூவி எ‌ழுந்தார். இத்தருணத்தில் பூபதி அவர்கள் பிச்சை முகையதீனைக் கையமர்த்தித் திருடர்களைநோக்கி, ஐயா! உங்களுக்கு வேண்டியது நகையும் பணமுந்தானே எங்களை ஏன் அனாவசியமாகத் தொந்தரவு செய்யவேண்டுமென்று கூறி, ஞானக் களஞ்சியம் 578-வது பக்கத்தில் கூறியுள்ள "சீவராசிகளை வசமாக்கும் அப்பியாசத்தைச் சிறிது பிரயோகித்தார்கள். பிரயோகிக்கவே, இளங்கன்றை யகன்ற தாய்மானைக் கொலை செய்யப் பிடித்துவந்த வனவேடனை முகம்மது (ஸல்) அவர்கள் கருணைபாலித்து, அவ்வேடனை இஸ்லாமாக்கி மானை

விடுத்த சரிதம் போலவும், "ஞானக் களஞ்சியம் 271—272-ம் பக்கங்களில் கூறியபடி":—வசவேசருடைய திருமடாலயத்தில் காஷாயம் அணிந்து வழுதுளங்காயை இலிங்கமாகக் கட்டிக் கொண்டு அடியார்களைப்போல் அமுதுண்ண வந்திருந்த கள்வர்களை,

"வெள்ளவேணிப் பெருந்தகைக்கு யாஞ்செய் யடிமை மெய்யாகக்
கள்ளவேடம் புனைந்திருந்த கள்ளரெல்லாம் களங்கமறும்
உள்ளமோடு மெய்யடியாராக" ... "

என்று கூறி மெய்யடியாராகச் செய்த வசவேசரைப்போலவும், அக்கள்வர்களை தங்கள் மனோசக்தியால் சன்மார்க்கர்களாகச் செய்துவிட்டார்கள். திருடவந்த கள்வர்கள் பழைய குணம்மாறி, பூபதிகளை நோக்கி, ஐயா! தாங்கள் எந்த ஊர்? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே செல்லுகிறீர்கள்? என்று வினவி நயமொழி கூறி வணங்கி வழியனுப்பிச் சென்றார்கள்.

பூபதி முதலானவர்கள் இரவு 10 மணிக்கு பெருநாழிக்குச் சுகமாகப் போய்ச்சேர்ந்தார்கள். அங்கே தங்கியிருக்கும்போது பதினாயிரக்கணக்கான ஜனங்கள் தரிசிக்க வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அநேக வியாதியஸ்தர்கள் வந்து, தங்கள் தங்கள் நோய் தீரப்பெற்றுச் சந்தோஷமடைந்து சென்றார்கள். இன்னும் பலர் தங்கள் தங்கள் குறைகள் நிவர்த்தியாகி மனோபீஷ்டங்களைப் பெற்றுச் சென்றார்கள். ஆயினும் எவரிடத்திலும் எவ்விதக் கைம்மாறும் கருதாத பூபதிகள், எல்லோருடைய வினைகளையும் அகற்றிவைத்தார்கள்.

அப்போது பூபதிகளின் பிரதம சீடராயிருந்து இராங்கூன் சென்று காலஞ்சென்ற ப. சி. செய்யது முஹம்மது அவர்கள் மனைவியார் வந்து, எனது குமாரிக்கு விவாக வயது வந்தும் இன்னும் விவாக மாகவில்லையே! எனது பிள்ளை உங்கள் பிள்ளையல்லவா! தாங்கள் ஏதாவது உதவி செய்தால்தான் கல்யாணகாரியம் நிறைவேறும் என்று பூபதிகளிடம் தெரிவித்துக்கொள்ள, அதற்குப் பூபதிகள் அம்மா!

இது சமயம் நானொன்றும் கையில் பணம் அதிகமாகக் கொண்டுவரவில்லை; இரண்டு மூன்று மாதங்களில் பணத்துடன் வந்து விவாகத்திற்கு ஏற்பாடுசெய்கிறேன் என்று கூறியனுப்பினார்கள்.

பின்னர் மீண்டும் கமுதிக்கு வந்து அங்கிருந்து திருவாரூர் வந்து சேர்ந்தார்கள்.

பிறகு அடுத்த ஆனிமாத கலியாண தேதி காலத்தில், பிரசிலிருந்து வசூலான தொகையுடன் ஸ்ரீகுரு ஞானபூபதிகள், ஷெ பெண்ணின் விவாகத்துக்கு வாக்களித்ததை நிறைவேற்றும் பொருட்டு, 1932-ஹு ஜூலைமீக் கடைசியில் பெருநாழிக்குச் சென்றார்கள். அங்கே ஷெ பெண்ணின் சிற்றப்பன்மார்களை அழைத்து, "உங்கள் சகோதரர் பெண்ணை விவாகம் செய்து கொடுக்கவேண்டியது அவசியமாயிருக்கின்றதே! எங்கிருந்தோ! யாரோ! ஒருவர் வந்து கலியாணஞ் செய்து கொடுத்துவிட்டுப் போய்விட்டார் என்று அபவாதம் கூறுகிறீர்கள்; உங்கள் அப்பெண்ணுக்கு விவாகம் செய்துவைப்பதா யிருந்தால் நான் பிரவேசிக்கவில்லை, நீங்கள் முன்னின்று விவாகத்தை முடிக்கிறதானால் எல்லோருமாயிருந்து திருமணத்தைப் பூர்த்திசெய்து வைப்போம்; இல்லாவிட்டால் எனக்கு அனுமதி கொடுங்கள். நான் முடித்துவைக்கிறேன்" என்று அனுமதி கேட்டார்கள். அதற்கு அப்பெண்ணின் சிற்றப்பன்மார்கள், தாங்களேயிருந்து முடித்துவைப்பதாக ஒப்புக்கொண்டு விவாகம் நடந்தேறியது. அதற்காகக் கொண்டுபோன பணம் பூபதிகளிடம் எஞ்சியிருந்தது.

பெருநாழி கிராமத்தில் பூபதிகளின் பிதுரார்ஜித நிலங்கள் அதிகமாயிருந்ததால், பூபதிகள் இளம்பிராயத்தில் அந்நிலங்களைப் பார்க்கும்பொருட்டுப் போகும்போது, வழியில் கோடை காலங்களில் தண்ணீர் கிடைப்பது அரிதாயிருக்கும். சித்திரை வைகாசி மாதங்களில் அங்குள்ள சேர்வைக்காரர் ஊருணியில் மட்டும் சிறிது ஊற்றுநீர் கிடைப்பதைத் தவிர வேறெங்குமே தண்ணீர் கிடைக்காது. அப்பொழுது தண்ணீருக்குக் கஷ்டப்பட்ட ஞாபகம் பூபதி

களுக்கு இப்பொழுது வரவே, தங்கள் கையிலிருந்த பணத்தைக்கொண்டு சேர்வைக்காரர் ஊருணியை விலைக்குவாங்கி கிணறுவெட்டித் தருமஞ்செய்து நியமிக்க அங்குள்ளாரோடு கலந்து யோசித்தார்கள். உடனிருந்தார் பலரும் அந்த இடம் சமஸ்தானத்தைச் சேர்ந்துவிட்டதாகவும், இப்போது சமஸ்தானத்திலிருந்து வாங்குவது சிரமம் என்றும் குறிப்பிட்டார்கள். அதனால் அம்முயற்சியைக் கைவிட்டு விட்டுப் பெருநாழியிலிருந்து கமுதிக்கு வந்தார்கள்.

அப்பொழுது கடுங்கோடை; வேனில் வெப்பம் மிக அதிகமாயிருந்தது பூபதி அவர்கள் தாகசாந்தி செய்து கொள்ளக் குளிர்ந்த நீர் கேட்டார்கள்; அங்குள்ளார் குளிர்ந்த பானைச் சலம் கொண்டுவந்து கொடுக்க, அதைப் பருகிய பூபதிகள், இது மிக்க நல்ல ஜலமாயிருக்கிறதே! எந்தக் கிணற்று ஜலம்? என்று கேட்க, அங்குள்ளார் இங்கே இதனினும் மேலான நல்ல ஜலம் இருக்கிறது என்று கூறி, பாலகிருஷ்ண செட்டியார், மோட்டாரில் அழைத்துக் கொண்டுபோய் பசும்பொன்னுக்கு அருகிலுள்ள இயற்கை ஊற்றுக்கிணற்றைக் காட்டி, அதிலிருந்து தண்ணீர் சேந்திக் கொடுத்துப் பருகச்செய்தார்கள். இது மிகவும் நல்ல ஜலமாயிருக்கின்றது; ஆனால் ஊற்றிலிருந்து நீரைச் சேந்தியெடுப்பதற்கு வாளி முதலியன போட்டிருந்தாலன்றி வழிப்போக்கர்கள் நீர் பருக முடியாதே! என்ன செய்வார்கள்! என்று அநுதாபங்கொண்டு, இங்கே ஓரிடத்தை விலைக்கு வாங்கி கிணறு முதலியவை கட்டி ஒரு தருமம் நடத்தினால் நல்லா ருக்குமே! என்று பேசிக்கொண்டு காரைத் திருப்பி அனுப்பிவிட்டுப் பாதசாரியாக நடந்து கமுதியை நோக்கிச் சென்றார்கள்.

கோட்டைக் கட்டிடத்திற்குச் சமீபமாக இவ்வாறு பேசிக்கொண்டு செல்லுகையில், அவைகளைப் பின்னால் கேட்டுக் கொண்டே வந்த சிதம்பர நாடார் என்பவர், சுவாமிகளிடம் எதைப்பற்றிப் பேசிக்கொண்டு போகிறீர்கள் என்று நாகலிங்க ஆச்சாரியாரைக் கேட்டார். இவ்விடத்தில் சுவாமிகள் ஒரு தருமம் ஏற்படுத்த வேண்டுமென்று [illegible]

பிராயப்படுகிறார்கள் என்று கூறினர். அப்படியானால் அடியேனுடைய நிலம் இங்கேயே யிருக்கிறது. அதை வேணடுமானால் சுவாமிகள் எடுத்துக் கொள்ளட்டும், விலை எதைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளுகிறேன் என்று மனத்தயாளத்துடன் கூறி அழைத்துக் கொண்டுபோய் நிலத்தைக்காட்டிப் பத்திரம் எழுதிக் கொள்ளும்படியாகச் சொன்னார். கொடுத்ததை வாங்கிக்கொள்ளுகிறேன் என்று சிதம்பர நாடார், கூறினபடியால், அவர் மகிழும் படியாக அவர் வாங்கிய விலைக்குமேல் அதிகத் தொகை கொடுத்து $4\frac{1}{2}$ ஏக்கர் நிலத்தை 1932-ஞு ஆகஸ்டு-மீ 11௳யில் கிரயத்திற்கு வாங்கினார்கள்.

## கமுதி சோதியண்டல அனுதரட்சக தருமக் கட்டிடம்.

இராமனாதபுரம் ஜில்லாவிலுள்ள கமுதி மிகப்புராதன மான நகரம், அங்குள்ள கோட்டையின் சிதைந்த பாகங் களே அதன் பூர்வீகபபெருமையை ஞாபக மூட்டிக்கொண் டிருக்கிறது.

இங்கே இருந்த தாலூகா கச்சேரி, மாஜிஸ்டிரேட் கச் சேரிகளை, முதுகுளத்தூரைத் தாலூகாவின் தலைமை ஸ்தான மாக மாற்றிய பொழுது அங்கே கொண்டுபோய் விட்டார் கள். இப்பொழுது சப்ரிஜிஸ்டரார் ஆபீஸ், பெரிய போலீஸ் ஸ்டேஷன், தந்தி தபால ஆபீஸ், பெரிய சந்தை கூடுமிடம், முழுதும் மலைக்கற்களால் அமைத்த பள்ளி வாசல், சமஸ்தானத்தின் தாலூகா ஆபீஸ், யூனியன் ஆபீஸ் இவைகள் இங்கே யிருக்கின்றன.

இக் கமுதிமா நகரத்திற்கும், அபிராமம் என்னும் ஊருக்கும் இடையே கோட்டைமேட்டில் மானமதுரைக்குச் செல்லும் முக்கிய ரஸ்தாவின் அருகில், வடபாலுள்ள 1390 நெம்பர் செய்வல $4\frac{1}{2}$ ஏக்கர் நிலம் தான் பூபதிகள் தரும ஸ்தாபனம் செய்ய கிரயம் வாங்கிய இடம். அவ் விடத்தில் அயச்சத்தும், அபிரேகச்சத்தும் கலந்த பூமியாக விருப்பதால், அந்த நிலத்தில் வசிப்பவர்களுக்கும், காற் றுப் பட்டவர்களுக்கும், அதிலுள்ள நீரைப் பருகியவர்

களுக்கும், சகல வியாதியும் நீங்குமாதலால் இங்கோர் நல்ல * கிணறும் உண்டாக்க வேண்டுமென்றும், அந்த வெட்ட வெளியில் ஒரு நாள் இரவு எழுந்த சோதியின் அறிகுறியாக சோதி மண்டல ஐமுகோங்கார தருமக் கட்டிடம் ஒன்று கட்டவேண்டுமென்றும் பூபதிகள் கருதினார்கள்.

அந்தப் பிரதேசங்களில், அடிக்கடி கொலை, கொள்ளை, வம்பு, வழக்கு, அடிதடி முதலிய தீச்செயல்கள் நடந்துவருவதால், அங்குள்ள சனங்களுக்குக் கல்வி அறிவை உண்டாக்கி ஒழுக்க முறைகளைப் போதித்துச் சீர்திருத்தம் செய்வதற்காக கல்விச் சாலை, வைத்தியசாலை, புத்தகசாலை, சன்மார்க்க சங்கம் முதலியன ஏற்படுத்தியும்; சோதி மண்டபம் அமைக்கவும் வேண்டுமென்றும், பூபதிகள் அபிப்பிராயப்பட்டார்கள். நல்லவர் தீயவரென்று பாராமல் எல்லோருக்கும் ஞானோபதேசம் செய்துவந்த கருணைக்கடலாகிய அல்லமதேவர் ஒரு பெருங்காட்டின்வழியே செல்லும்போது, இரக்கமென்பதே சிறிதுமில்லாது கொலைத் தொழிலை மேற்கொண்டு, கையில் ஏந்திய வில்லுடன் ஒருவேடன் எதிரே வர, அவனைக் கண்டு இரக்க மெய்தியவராய், "இயற்கையிலேயே அன்புடையவனாய் கண்ணைக்கோண்டி அப்பிய கண்ணப்பனாகிய வேடனுக்கு அனுக்கிரகம் செய்தது புகழன்று; அன்பில்லாத இவ் வேடனுக்கன்றோ அனுக்கிரகம்செய்து தீவினை யொழிந்தவனாகச் செய்ய வேண்டுமென்று திருவுளமிரங்கி, பாவியாகிய அவ்வேடன் உய்யும்

* இந்தக் கிணறு தோண்டிய அபிராமம சுந்தரபண்டாரம் சில அநுபவமான விவேகி. தான் இது வரையில் சுமார் 500 கிணற்றுக்குமேல் தோண்டியிருப்பதாகவும், இந்தக்கிணற்றில் காணப்பெற்ற பலவித உலோகமண்களைப்போல் தான் பார்த்ததேயில்லை யென்றும், கிணற்றுக்குள் இறங்கி வேலை செய்கையில், அங்கு பலவித பரிமளம் கமழ்கிறதென்றும, பலவித தொனிகள் கேட்கிறதென்றும், இது ஒரு தெய்வீகம் பொருந்திய கிணறு என்றும், இன்னும் பலவாறு புகழ்ந்து கூறுகின்றார்.

சிலர், இந்தக் கிணற்று நீரைப்பருகி பற்பல வியாதி தீரப்பெற்றிருக்கின்றனர்.

வண்ணாம் அவனை நோக்கி, நீ அறிவென்னும் வேலினால் ஐம் புலன் என்னும் மான்களை, அருள் என்கிற வலையினின்று தப்பிப்போகாமல் எய்வாயானால் உனக்குத் துன்பமென் பதே யில்லை; அறிவை வில்லாகவும் மனத்தை அம்பாகவும் கொண்டு இறைவன் மீது எய்வாயானால் மேலானவனென்று உன்னைச் சொல்லுவார்கள், என்றிவ்வாறு வேடனுய்யும் வண்ணாம் ஞானோபதேசம் செய்தனுப்பினார் என்பது போலவே, நமது ஞானபூபதி அவர்களும், கமுதி நாட்டி லுள்ளோருக்கு ஞானோபதேசஞ் செய்து நல்வழிப்படுத்த வேண்டுமென்று எண்ணி, அநாதரட்சக தருமச்சாலை தாபிதம் செய்யக் கருதினார்கள்போலும். இவ்விதத் தரும சாலை அமைக்கவேண்டுமென்று ஞானபூபதி அவர்கள் அபிப் பிராயப்பட்டதை அவ்வூர் வாசிகள் பலரும் மனக்களிப் புடன் ஏற்றுக்கொண்டார்கள்.

ஆனால் சாயபு அபிராமம் பிரபல வர்த்தகர் ஆலே ஜனாப் கி. இ. ந். முஹம்மது அப்பாக்கர் அவர்கள், தம் நோய் நிவர்த்திக்காக பூபதி அவர்களிடம் கொடுத்த ரூ. 30-ஐக் கொண்டு அவ்விடத்தில் கிணறு தோண்டும்படியும், கமுதி தா. மு. காதர்முசாபர் அம்பலம் அவர்களுடைய உதவி யால் கொட்டகை அமைக்கும்படியும் பூபதிகள் ஏற்பாடு செய்தார்கள்.

பூபதிகளின் ஏற்பாட்டின்படியே அவ்விடத்தில் கிணறு தோண்டப்பெற்றது. அதிலிருந்து எதிர்பாராதவிதமாக அமிர்தம்போன்ற மிக்க நல்ல ஜலம் ஊற ஆரம்பித்தது. அதைக்கண்டு எல்லோரும் பெரும் வியப்புற்றார்கள். கோட்டையிலுள்ள போலீஸ் உத்தியோகஸ்தர்களும் துரை மார்களும் வந்து அவ்விடத்தைப் பார்வையிட்டு, போலீஸ் உத்தியோகஸ்தர்களின் உபயோகத்திற்காக இஞ்சினீயர் மேற்பார்வையில் ரூ. 2000 வரை செலவு செய்து நாங்கள் கிணறு தோண்டியும் உவர் ஊறுகிற இந்த இடத்தில் இவ்வித நல்ல நீர் ஊறுவதற்கு என்ன காரணம் என்று அவர்கள் ஆச்சரிய மடைந்தார்கள்.

இவ்வித நல்ல ஜலம் ஊறுவதைக் கண்டு கி. இ. தீ. மு. அவர்கள் கிணற்று வேலைகள் முழுவதையும் தங்கள் சொந்தச் செலவிலேயே கட்டித்தருவதாக ஒப்புக்கொண்டார்கள்.

கமுதி பிரபல வர்த்தகர் ந. ராம. சு. அழகர்சாமி செட்டியார் வகையராக்களால் அனுதாரட்சக ஆலயம் வேலை ஆரம்பித்து பூபதிகள் எழுதிய ஆத்மசக்தி என்னும் நூலின் 23-ம் பக்கமுதல் 28-ம் பக்கம் வரையில் குறிப்பிட்டபடி கட்டட வேலைகள் நடைபெற்றது.

கமுதி ஸ்ரீமான் சேஷகிரிராவ் அவர்கள் புத்திரி லெட்சுமிபாய் அம்மாள் அவர்கள், இக்கட்டடத்திற்கு உபயோகமாகும் பொருட்டு 1385 ரூ. செவ்வல் 2½ ஏக்கர் நிலத்தை விலைக்கு வாங்கி உதவினார்கள்.

## அன்புமார்க்க சங்கம் நிறுவியது.

தேச விடுதலைக்கும், தேசமக்கள் முன்னேற்றத்திற்கும், தேச சுயராச்சிய ஆன்ம சுயராச்சியத்திற்கும், அன்பாயுதந்தாங்கி அன்புவழி-அருளென்னும் சொல்லம்பால் அனுதினமும் நய பய நலங்காட்டி உடலாலும் உயிராலும் உழைக்கவேண்டுமென்று கருதி, 1933-ளு தை-மீ த்திலே திருவாரூர் விஜயபுரத்தில் அன்புமார்க்க சங்கம் என்னும் பெயருடன் ஒரு சங்கத்தை நிறுவினார்கள்.

## திருவாரூர்—விஜயபுரத்தில் சர்வ ஜனோபகாரத் தருமக் கட்டடத்திற்குத் தோட்டம் வாங்கியது.

திருவாரூர் சீரும் சிறப்பும் பொருந்தி, கல்வி மலிந்து நிறைசெல்வத் திருவாரூரென்று புகழ்ப்பெற்ற மிகப் புராதனமான நகரம். இது ஓர் காலத்தில் தமிழரசர்களுக்குத் தலைநகரமாயிருந்தது, இந்நகரத்திற்கு நடுவண் அமைந்துள்ள பெரிய கோவிலும், திருக்குளமும், அரண்மனையின் சிதைந்த பாகமும் இதன் பூர்வீகப் பெருமையை ஞாபகப்படுத்திக்கொண்டு விளங்குகின்றன. இந்நகரத்

திற்குத் தென்மேற்கிலுள்ள மடப்புரத்தில் ஸ்ரீகுரு தட்சணாமூர்த்தி சுவாமிகள் சமாதிகொண்டுள்ளார்கள். இங்கே சப் கோர்ட்டு, சப் மாஜிஸ்டிரேட் கோர்ட்டு முதலான கச்சேரிகளும் இருக்கின்றன.

இந்நகரத்திற்குத் தென்பாலுள்ளது விஜயபுரம். திருவாரூரையும் விஜயபுரத்தையும் இரண்டாகப் பிரிப்பது ஓடம்போக்கி என்னும் ஆறு. இந்த ஆறு, நகர மத்தியில் ஓடுகின்றது.

விஜயபுரம் பிரபலமான வியாபார ஸ்தலம் மாயவரம் அறந்தாங்கி இருப்புப்பாதையும், தஞ்சை, நாகூர் இருப்புப் பாதையும் சந்திக்கும் பெரிய ஜங்ஷன். இந்நகரத்தில்தான் நமது ஞானபூபதி அவர்கள் ஆசிரமமும், அச்சியந்திரசாலையும் இருக்கின்றன. அவர்களுடைய வாழ்நாளில் பெரும் பகுதி நாட்களை இங்கேதான் கழிக்கின்றார்கள்.

இங்கே முற்காலத்திலிருந்த அரசர்களாலும், பிரபுக்களாலும் அன்னதானக்கட்டளை, தரும சத்திரம், மடம் முதலியன ஏற்படுத்தி தருமம் நடைபெற்று வந்தது. இக்காலத்திலே அவைகள் சரிவர நடவாமலும், களவடைக்கப் பெற்றும், அவ்விடங்கள் வியாபார ஸ்தலங்களாக மாறியும் சீர்குலைந்து தருமம் சிதைந்து தடுமாறி நிற்கின்றன.

இத்தலத்தில் ஞானபூபதிகள் கமுதி அனாதரட்சக தருமச்சாலையைப்போலவே சர்வ ஜனோபகாரத் தருமக்கட்டிடம் ஒன்று கட்டி, அதில் அன்னதானம், அனாதைகளுக்கு இடவசதி, கல்விச்சாலை, வைத்தியசாலை முதலிய உதவிகள் ஏற்படுத்த வேண்டுமென்று கருதி, ஓடம்போக்கி ஆற்றின் தென்கரையில், விஜயபுரம் கிராமத்தில், தஞ்சாவூர் ரஸ்தாவிற்கும் ராஜாங்கக் கட்டளை நஞ்சைக்கும் வடக்கு, ஷை ராஜாங்கக் கட்டளை நஞ்சைக்கு மேற்கு, தஞ்சாவூர் ரஸ்தாவுக்கும் T. S. No. 557 க்கும் கிழக்கு T. S. No. 557 க்குந் தெற்கு இதற்குள்பட்ட வார்டு 3 பிளாக் 15 T. S. No. 558, ஏகர் 1 சதுர அடி 9496 T. S. No. 559 சதுர அடி 33541 ஆக இனம் நிலத்தை விஜயபுரம் சோணையன்

சேர்வையிடம் கிரயத்திற்கு வாங்கி யிருக்கின்றார்கள். அவ்விடத்தில் ஒரு சிறு ஆசிரமம் அமைத்து பல பிரதேசங்களில் இருந்துவரும் சாதுககளும் தங்கி வருகிறார்கள். பெரிய கட்டிடமாகக் கட்டவேண்டுமென்று முயற்சித்து வருகிறார்கள்.

## 1933—34-ம் வருஷ நிகழ்ச்சிகள்.

ஞானபூபதி அவர்கள், சென்னை காதர்பக்கிர் ருவுத்தர் கம்பெனி துணைக்கடையில் தங்கியிருக்கையில ஒரு சமயம் திருவருளை நினைந்து நினைந்து, அதையே உணர்ந்து உணர்ந்து, உடல் நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பு நிறைந்து நிறைந்து, ஊற்றுப்போல் இரண்டு கண்களிலிருந்தும் ஒழுகும் ஆனந்த பாஷ்பத்தால் தேகமெல்லாம் நனைந்து நனைந்து, வாய்விட்டரற்றி ஆனந்த பரவசமாய்விட்டார்கள். அதுபோது உடனிருந்த ஜெ. மு. ஷரீபு முதலானவர்கள் கைலாகு கொடுத்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் சைத்தியோபசாரம் செய்து தெளியவைத்தார்கள். இந்த நிகழ்ச்சிகளை கருணை சோமசுந்தரம் என்பவரும் பன்முறை உடனிருந்து கவனித்து வந்திருக்கிறார். இவ்வாறுகவே பூபதி அவர்கள் உவைசுல்கர்னி, முஹியித்தீன் ஆண்டவர்கள், செய்யிது அஹ்மது கபீருர்ரபாயி இவர்கள் சரிதங்களைக் கேட்டும், குணங்குடி மஸ்தான் சாஹிபு அவர்கள் பாடலிலுள்ள "மாதவர்க்கரசான மன்னர்க்கு மன்னாக வந்த மஹராஜ னே" என்ற பாடல் முதலியவற்றைப் பாடியும், மனங்கனிந்து உள்ள முருகி ஆனந்தக்கண்ணீர் விடுவது வழக்கம். பள்ளிவாசலில் இமாம் ஜமாஅத்தோடு தொழுகையில் ருக்கூஉ செய்தால் குனிந்தபடியாகவும், சஜ்தாச் செய்தாலும், அத்தஹியாத்து ஓதினாலும் மெய்ம்மறந்து அசைவற்றுப்போய் விடுவார்கள். சில சமயம் நிலையாகவே நின்றும் விடுவார்கள். இத்தனை றக்ஆத்து தொழுதோமென்பதையும் மறந்து போய், பக்கத்தில் தொழுதுகொண்டிருப்பவர்கள் ஏது நினைத்து விடுவார்களோ! என்றஞ்சி நடுக்குறுவார்களாம்.

இதனாலேயே இமாம் ஜமாஅத்தோடு தொழுக மிகவும் அஞ்சுவார்களாம். பெரும்பாலும் தனித்தொழுகையையே விரும்புவார்கள்.

## பூபதிகள் ஆரூர்ப் பிரசங்கம்.

1934-ஆம் செப்டம்பர்-மீ த்தில் திருவாரூர் G. இராமானுஜ முதலியார் அவர்களுக்கு முனிஸிபல் சேர்மனும், T. N சபாபதி முதலியார் அவர்களுக்கு முனிஸிபல் வைஸ் சேர்மனும் ஆனதற்காக நகரவாசிகளால் கருணாநிதி தியேட்டரில் ஒரு டீபார்ட்டி நடத்தப் பெற்றது. அப்பொழுது சப் ஜட்ஜ் C. இராஜகோபாலய்யர் தலைமையில் விருந்தினர்களைப் புகழ்ந்து சிலர் பேசினார்கள். ஞானபூபதிகளையும், அவ்விருவரையும் பாராட்டிப் பேசுமாறு பலர் கேட்டுக்கொண்டார்கள் அதை மறுக்க வியலாமல் பேச ஆரம்பித்து, விசுவாமித்திர முனிவருடைய யாகத்தை இராம லட்சுமணர் காத்ததைப்பற்றிக் கம்பர் இராமாயணம்,

> எண்ணரு நூற்றிரண் டிரண்டு மூன்றுநாள்
> விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
> மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
> கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்

என்ற பாடலைக்கூறி உதாரணங்காட்டி, அந்த இராம லட்சுமணர்களைப்போல இந்நகரப் பொதுக் காரியங்களைக் காத்து வருவதில் இவ்விருவரும் இருந்துவர வேண்டுமென்று சாங்கோபாங்கமாக ஓர் அரிய பிரசங்கம் செய்தார்கள் அப்பொழுது கூட்டத்திலிருந்த ஒருவர் எழுந்து, இராகவனுக்கும் இராமானுஜருக்கும் ஒருவாறு பெயர் பொருத்தமாயிருந்தாலும், இலக்குவன் என்ற பெயருக்கும் சபாபதி என்ற பெயருக்கும் பொருத்தமாயில்லையே என்று கேட்டார். அதற்கு பூபதி அவர்கள்:—

> "பெருகியசீர் மருகருடையார் அம்பலத்தே நடிக்கும்
> பெருந்தகையென் கண்ணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
> அருட்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
> யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவ னென்பேன்".

என்ற பாடலைக்கூறி எல்லாப் பெயர்களும் இறைவனுடைய பெயர்கள்தான், அல்லாமலும் இங்கே குண ஒற்றுமைபற்றிய உவமையேயொழிய பெயர் ஒற்றுமைபற்றிய உவமையல்ல என்று விடையிறுக்க, எல்லோரும் சந்தோஷமடைந்து கரகோஷம் செய்தார்கள். அதைக் கேட்ட சப் ஜட்ஜ், பூபதிகளைப்பற்றி விசாரிக்க, அவர்கள் ஒரு முஸ்லிம் என்று சொல்லக்கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்து, ஒரு முஸ்லிம் இவ்வாறு தமிழில் மிகவும் கற்றறிந்தவராயிருப்பது பெரிய ஆச்சரியமென்று புகழ்ந்து பாராட்டிப் பேசினூர். அது முதல் சப் ஜட்ஜ் C. ராஜகோபாலய்யர் அவர்கள் பூபதிகளோடு நட்பு அதிகமுடையவரா யிருந்தனர்.

## தாய்நாடு பத்திரிகை ஆரம்பம்.

தேசீய வாரப் பத்திரிகை யொன்று நடத்தவேண்டுமென்று பூபதிகளைப் பலர் கேட்டுக் கொண்டார்கள் அதற்கிணங்க, கிராமச் சீர்திருத்தம், பொது ஸ்தாபன நிர்வாகம், வாக்குரிமை முதலிய விஷயங்களைப்பற்றிப் பொது மக்களுக்கு எடுத்துக் கூறும் நோக்கத்துடன் "தாய் நாடு" என்னும் பெயருடன் 1935-ஆ ஜனவரி-மீ 14உ ஞாயிற்றுக்கிழமையிலிருந்து விஜயபுரம் கருணைநிதி அச்சியந்திரசாலையில் அச்சிட்டு வெளியிட்டார்கள். அப் பத்திரிகையின் ஆரம்ப விழாவை திருவாரூர் சப்ஜட்ஜ் இராஜகோபாலய்யர் B. A. B. L., அவர்கள் சிறப்புற நடத்திவைத்தனர். அவர்களுக்குப் பூபதிகள் பூமாலையோடு வாடாத மாலையாகிய கீழ்க்கண்ட பாமாலையும் சூட்டி மகிழ்வித்தார்கள். அவ்விழாவிற்கு உள்ளூர், வெளியூர்களிலிருந்து பல பிரமுகர்கள் வந்திருந்தார்கள். அவர்களிற் சிலர்; தாய்நாடு பத்திராதிபராகிய ஞானபூபதிகளின் திறமையைப்பற்றி புகழ்ந்து பேசினூர்கள்.

“ தாய்நாடு ” பத்திரிகையின் திறப்புவிழா வாற்றிய

திருவாரூர்—சப்ஜட்ஜ்

# C. இராஜகோபாலய்யர் B. A., B. L.,

அவர்களுக்கு

ஸ்ரீகுரு கருணையானந்த ஞானபூபதிகள் அளித்த

# புகழ்ப்பாமாலை.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பூமாலை புனைவார்கள் பொதுவாக வெவ்வெவர்க்கும்
புகழ்வா டாத
பாமாலை புனைவதையே கடவுளரு நனியுவப்பர்
பலகா லென்ற
மாமாலை யகநிறுவித் தாய்நாடுக் கவைத்தலைமை
வகித்த தற்காய்
நாமாலை தனைப்பாவாய் நாமியற்றச் சமயமொன்று
நண்ண வெண்ணி, (1)

அறந்தவறி லாதுஞற்றும் அந்தணர்கு லோத்துங்க
அறிஞ னாகிப்
பிறந்தவர்கள் பிறவாத பெரும்பதியென் றரும்பெருமைப்
பேரா ரூரிற்
சிறந்திலக வதுபுரிந்த தவமெனவே தெவ்வர்களுஞ்
செப்பா நிற்பப்
பிறந்தவதி பதிராஜ கோபால அய்யர்மிளிர்
பீ. எ., பீ. எல்., (2)

தோயமுங்கீ ரமும்பிரித்துப் பாறனையே யெகினமுண்ணுந்
தொடர்பு போல
வாய்மையும்பொய் மையுங்கலந்த வழக்குகளி னுண்மைபெற
வழக்கா ராய்ந்து

ஞாயமதைச் சமன்செய்து சீர்தூக்குங் கோலெனவே
நவின்ற முப்பாற்
றாயமொழிக் கிலக்காக சப்ஜட்ஜ் உத்யோகத்
துறையைப் பெற்றோன், (3)

சிட்டர்பரி பாலனமுந் துட்டர்களி னிக்ரகமுஞ்
செய்யு மாற்றற்
கட்டழகன் கற்றவரை யுற்றவராய்ப் பெற்றிசெயுங்
கலைஞன் றேர்ந்து
அட்டதிசை களும்வியப்பப் பிரசங்க மதுரமழை
யதனை யாதுந்
தட்டிலா மற்பொன்மலர் நாற்றமுடைத் தெனப்புரியுந்
தகைமை யாளன், (4)

தேங்கமழூர் துடைவைசெறி திருவாரூ நகரில்வளர்
செல்வ ரான
நாங்கள்செய்த தவப்பேறே பெரும்பேறென் றுளங்குளிர
நவயா யின்று
ளோங்கவரு தாய்நாடுப் பத்திரிகை வளர்பிறைபோ
லுயர்வான் வேண்டிப்
பாங்குபெறுந் திறந்துவைத்த [illegible] சொற்பொழிவு மொழிவியெனப்
பகர்ந்தான [illegible] (5)

தன்னலத்தைக் கருதாமற் போந்திருந்து சிறப்பாற்றிச்
சாலச் செய்த
நன்மைகட்கெல் லாம்வல்ல விறைவனருள் பாலிக்க
நாடு கின்றே
மன்னதுடன் செய்ந்நன்றி யறிதலெனுங் குறட்பாவை
யகத்துட் கொண்டு
மன்னுமொரு வந்தனமுந் தந்தனமா லெந்நாளும்
வாழ்க மாதோ! (6)

விஜயபுரம்,
14—1—35.

இங்ஙனம்,
K. A. ஞானபூபதிகள்.

தாய்நாடு பத்திரிகை ஆரம்பத்தில் ஆயிரக்கணக்கான பிரதிகள் அச்சிடப்பெற்று பலராலும் வாசிக்கப்பெற்று வந்தது. அப்பொழுது நமது கருணாநிதி பிரஸிலிருந்த டிரெடில் மெஷின்களால் அச்சிடுவது அசாத்தியமாயிருந்தபடியால், சிலிண்டர் மெஷின் ஒன்று அவசியம் தேவையாயிற்று. சென்னை மவுண்டு ரோடு, No. 7 அத்திப்பட்டன் தெருவிலிருந்த R. S. பிரஸ், என்னும் பெரிய அச்சுக்கூடமொன்றை அதிலுள்ள ஏராளமான டைப்புகள் பிளாக்குகள், பார்டர்கள், சிலிண்டர் மெஷின் முதலிய ஏராளமான பல உபரிய சாமான்களுடன் விலைக்கு வாங்கி 1-2-35 முதல் ஒரு மாத காலம் சென்னையிலேயே பிரஸ் நடந்து வந்து, பிறகு எல்லாச் சாமான்களும் விஜயபுரம் கருணாநிதி பிரஸில் கொண்டுவந்து சேர்க்கப்பெற்றது. அது முதல் கருணாநிதி பிரஸில் எவ்வளவு பெரிய புத்தக பாரங்களாயினும் சரி, வேறு எத்தகைய பெரிய வேலையாயிருந்தாலும் சரி, கலர் பிரிண்டுகளாயிருந்தாலும் சரி, செய்து கொடுக்கக்கூடிய தொரு பெரிய அச்சியந்திரசாலையாயிற்று. தாய்நாடுப் பத்திரிகையும் அவ்வருடம் தாராள வூக்கத்துடன் நடத்தப்பெற்று வந்தது. ஆனால் பூபதிகள் வெளியூர்களுக்கு பிரசங்கம் புரியச் சென்றுவிடுவதாலும், அடிக்கடி ஆன்மலாப சமாதியில் அமர்ந்து விடுவதாலும், சில வாரங்களில் பத்திரிகை காலாகாலத்தில் வெளியாகாததால் அவ்வாறு காலந்தாண்டி நடத்துவதிலும் பத்திரிகையை நிறுத்திவிடுவது சாலச் சிறந்ததென்று நிறுத்திவிட்டு, ஆனந்தசாகரம், ஞானநேர் வழி, சங்கீத லெட்சுமி முதலான சிறு சிறு புத்தகங்களை அச்சிட்டு வெளியிடலாயிற்று.

## காரைக்கால் அஞ்சுமனே இஸ்லாமியா சங்கத்தில் அக்கிராசனம் வகித்தது.

காரைக்கால் அஞ்சுமனே இஸ்லாமியா சங்கத்தின், ஆண்டு விழாவிற்கு தலைமை வகிக்க வேண்டுமென்று, பூபதிகளை சங்கத்தின் நிர்வாகிகள் வந்து கேட்டுக்கொண்டு

கள். பூபதிகள் அதற்கிசையவே, காரைக்காலிலிருந்து கார் கொண்டுவந்து, அழைத்துச் சென்றார்கள். 1936-ஹு அக்டோபர்-மீ 18உ யன்று காரைமாநகரில் ஷை சங்கத்தார்களால் குதூகலமான பெருஞ் சிறப்புடன் வரவேற்று அக்கிராசன பீடத்தில் அமரச்செய்தார்கள்.

முஸ்லிம், கிருஸ்தவ, இந்து அன்பர்கள் நிறைந்த பெருங் கூட்டத்தினிடையே பூபதிகளுக்கு கீழ்க்கண்ட உபசாரப் பத்திரத்தை வாசித்தளித்தார்கள்.

## வரவேற்பு வந்தனோபசாரப் பத்திரம்.

(அசலுக்குச சரியான நகல்)

திருவாரூர்

மௌலானா ஸ்ரீகுரு ஞானபூபதி அவர்கள்

**18—10—36** ஞாயிறனறு காரைக்கால் அஞ்சுமனே இஸ்லாமியா சங்கத்தில் அக்கிராசனம வகித்தபொழுது ஷை சங்கத்தாரால் வாசித்தளிக்கப்பெற்ற

## வரவேற்பு வந்தனோபசாரப் பத்திரம்.

சகல ஜீவ சிருஷ்டியாளனும், சாட்சாத் கருணைகரனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்,

அஸ்ஸலாமு அலைக்கும்

திருவளருகின்ற திருவணியாகிய திருவாரூரின்கண்ணே தருமமென்னும் பயிர் தழைத்தோங்கவந்த தண்முகிலே! மோனநன்னிலையை முற்றுமுணர்ந்த ஞானபூபதியவர்களே! வருக!! வருக!!! நுங்கள் வருகை நல்வருகையாகுக.

நாவலந்தீவினுள், நாவலர் போற்றும் பாவலர் பெருமானே! உங்களது கல்வி, அறிவு, ஒழுக்கம், கருணை

பொறை, நிறை, சாந்தமாதிய நற்செயல்களைப் போற்றிப் புகழுவதற்கு, எமக்குப் பல நாவுகள் வேண்டுமேயன்றி இவ்வொரு நாவினுல் (மட்டும்) புகழமுடியாத கண்ணியமிக்க புண்ணிய பூபதியே! வருக!! வருக!!!

திருஞானத்திலகமே!

தாம் பெற்ற இன்பத்தைத் தரணி மக்களும் பெற வேண்டுமென்ற பெருங்கருணைகொண்டு, தாங்கள் அநேக அரிய நூற்களை வெளியிட்டிருக்கிறீர்கள். தங்களது அன்பு குடிகொண்ட அகமும், அருள் குடிகொண்ட முகமும், இன்பங் குடிகொண்ட வசனங்களும் எங்களைப் பரவசப்படுத்துகின்றன. எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே தங்கள் கருணையாக நிற்கும் வள்ளலே வருக! வருக!!

எங்கள் உள்ளத்திருள் போக்கவந்த ஒளிவளர் தீபமே!

நுங்கள் நல்வரவால் எங்கள் கோரிக்கைகள் யாவும் கைகூடி, எங்கள் எங்கமும் இனிதோங்குமென்று உவகை யடைகின்றோம். எல்லாம் வல்ல இறைவனின் இன்னருளால் தங்களது தொண்டுகள் யாவும் குன்றின்மேலிட்ட தீபம்போல் பிரகாசித்து, ஆரோக்கிய திடகாத்திர சுகஜீவியாய்ப் பல்லாண்டு வாழ்வீர்களாக! ஆமீன்! ஆமீன்!! யாறப்பில் ஆலமீன்!!!

18—10—36, காரைக்கால்.

இங்ஙனம்,
அஞ்சுமனே இஸ்லாமியா சோஸைட்டி.

அன்பர்களே!

எம்மை இப்பெருங் கூட்டத்திற்குத் தலைமை வகிக்க வேண்டுமென்று விரும்பி யழைத்துக் கௌரவித்ததற்காக நாம் உங்களுக்கு நன்றி செலுத்துகின்றனம் என்று

முன்னுரையாகச் சில வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, சங்கத்தின் நிரந்தர தலைவராகிய உ. மு. உதுமான் லெப்பை மரைக்காயர் அவர்கள் ஒரு கடிதத்தை பூபதி அவர்களிடம் சமர்ப்பித்தார் அதில் ' லௌகிக சம்பந்தமான சொற்பொழிவுகளை எல்லோரும் செய்கின்றார்கள் தாங்கள் தௌஹீது (ஞானமார்க்கம்) சம்பந்தமாக ஆழ்ந்த கருத்துக்களுடன் ஒரு பிரசங்கம் செய்யவேண்டுமென்று சபையிலுள்ளார் பலரும் விரும்புகின்றார்கள் " என்று வரையப்பெற்றிருக்கக்கண்டு பூபதிகள் அதை அன்புடன் ஏற்றுக்கொண்டு கீழ்க்கண்டவாறு அரிய பிரசங்கம் புரிந்தார்கள்.

## கோடானுகோடி கொடுப்பினும் கிடைக்காமல் வீடுபயக்கும் வியன் பொன்மொழிகள்.

## இருதயக்கண்ணாடியின் இணையில்லா அற்புதம்.

அன்பர்களே !

இருதயமானது ஒரு கண்ணாடியைப்போலிருக்கிறது. அவ்விதமே லௌஹும், மஹ்பூலும் அமைந்துள்ளது. இருதயம் என்னும் கண்ணாடியில் அண்ட பிண்ட சராசரங்களின் கோலமும் நன்கு தெரியும். இது பற்றியே மஸ்தான், அல்லும் பகலும் சுகானந்த நிஷ்டையில் அண்டமும் பிண்டமும் தெரியும் என்றார்கள். அவ்வாறு தெரிவதற்கு இருதயம் சுத்தமாகவும், பஞ்சேந்திரிய உணர்ச்சியில் சம்பந்தப்படாததாகவும், சூட்சும உலகத் (ஆலமுல் மலக்கூத்) துக்கு நேரானதாகவு மிருத்தல்வேண்டும். இவ்வுலக மாயாகாரியங்களில் பராக்காயிருக்கிற வரையில் சூட்சும உலகத்துக்கு நேர்வழி கிட்டாது. நித்திரையில் இவ்வுலக விவகாரங்கள் நீங்குவதனால் சூட்சும உலகம் காணப்படுகிறது. நித்திரையில் பஞ்சேந்திரியங்கள் சும்மா இருந்தபோதிலும், நினைவு உழன்று கொண்டே இருப்பதால் நினைவின் மாதிரியான கோலமே அங்கும் தோன்றுகிறது.

மரணமான பின் நினைவும், ஐயறிவும் இல்லாததால் மறைவான எல்லாம் திரையின்றிப் புலப்படும். நித்திரை, மரணத்தினாலன்றி இருதயவாசல் திறக்க முடியாதென்று கருதவேண்டாம். அரும்பாடுபட்டு ஆசை, கோபம் முதலான துர்க்குணங்களை நீக்கி, ஏகாந்தமாக ஓரிடத்திலிருந்து வெளிக்கண்களைமூடி, அறிவில் நினைவைக் கலக்காதபடி குருநாதன் சொன்னபடி நிறுத்தி, அல்லாஹ் என்ற தொனி உதயமாகும்படி கல்பை ஆலமுல் மலக்கூத்திற்கு நோக்கி, நமது ஞானக்களஞ்சியத்தில் அருவஞான அத்தியாயம் ஆகாய அப்பியாசம் என்ற தலைப்பின் கீழ் கூறியபடி, தன் சரீர முதலிய எல்லாவற்றையும் மறந்து அல்லா(ஹ்)வை உருகி நினைந்தால் விழிப்பு நிலையிலேயே இருதயவாசல் திறக்கும். கனவில் காணுகிற அற்புதங்கள் விழிப்பு நிலையில் காணும். தீர்க்கதரிசிகள் முதலான எல்லாப் பெரியோர்களுடைய சந்திப்பும் பெறலாம்.

இருதயமாகிய கல்புக்கு வெளியில் ஆலமுஜிஸ்மானி என்னும் ஆலம் மஹ்ஜூஸாத்தின் பக்கம் ஐந்துவாசல்கள் உள்ளன. பெரும்பாலும் மனிதர்கள் இந்த வாசல்களைத் தான் அறிந்திருக்கிறார்கள். இந்த வாசல்கள் ஒரு கிராமபோனின் குழாயைப்போல் இருக்கின்றன. இந்த வெளி வாசல்களினால் உண்டாகும் அறிவோ மிகச் சொற்பம். இந்த வாசல்கள் நித்திரையில் அடைபட்டு அதன்பின் உள் வாசல் திறக்கிறது. ஆலமுல் மலக்கூத்தில் (லௌஹ்மஹ்பூலில்) இருந்து மறைவான விஷயங்கள் வெளியாகின்றன. அப்பொழுது விழிப்பில் அறியாத விஷயங்களைச் சொப்பன மூலமாக உணர்வார்கள். விழித்திருப்பவர்களுக்குத்தான் எல்லா அறிவும் உண்டாகுமென்று நினைத்தல் கூடாது.

இருதயத்தின் அற்புதத்திற்கு எவ்வித முடிவுமில்லை. அருமையான யாவற்றிலும், அது மிக மிகச் சிரேஷ்டமானது. அதன் பெருமையைப்பற்றி யாராலும் எழுதியோ, சொல்லியோ முடியாது.. அதற்கு இருவித பெருமை இருந்துவருகிறது, ஒன்று இல்மென்னும் அறிவினாலும்,

மற்றொன்று குத்ரத் என்னும் வல்லமையினுமாம். ல் மென்னும் அறிவானது இருவகைத்தாகும். (1) பகிரங்கம். (2) அந்தரங்கம். பகிரங்கமோ சகல கலைக்கியானங்களை அறியும் சக்திவாய்ந்திருக்கிறது. வானலோகம், பூலோகம் முதலியவைகளிலுள்ள இரகசியங்களை நன்கறிந்து அளந்து குறிப்பிடுகிறது. சகல உலகங்களையும் ஒரு இமைப்பொழு தில் சுற்றிவருகிறது.

ஆனால். அந்தரங்கக் கல்வியோ அங்ஙனமன்று. இருதயத்திற்குள்ளே ஆலமூருஹானி என்னும் ஆன்மூல் மலக்கூத்துக்கு ஒரு சூட்சுமவழி திறந்திருக்கிறது என்பது ஒவ்வொருவரும் முக்கியமாய் ஞாபகத்தில் பதித்து ஆழ்ந்து சிந்திக்கவேண்டியது.

அந்த இருதயமாகிய கல்புக்குள்ளிருந்து உதிப்பு என்னும் இல்ஹாமும், யூகமென்னும் திராசத்தும் உதயமா காத இன்சான் எவரும் இருக்கமாட்டார்கள். ஆகையால் கல்பு விஷயத்தில் கவனம் செலுத்துவோர் எல்லாப் பலன்க ளும் இனிது பெறுவார்கள் என்பது உண்மை என்று கூறி முடித்தார்கள். (ஆனந்த பரவசம்)

## மீண்டும் தாய்நாடு.

1936-ஹு நவம்பர்-மீ இறுதியில் நாகூர் G. M. அலி ஹுஸேன் ஆகிய என்னையும் உதவி ஆசிரியராகக் கொண்டு 29—11—36-ல் மீண்டும் தாய்நாடு பத்திரிகை யானது வீரதீரத்துடன் வெளிபபோந்து தனது அன்பை விசிறி மக்களைப் பரவசப்படுத்தி வந்தது.

## சென்னையில் அன்புமார்க்க சங்கத்தின் கிளையொன்று நிறுவியது.

1936-ஹு டிஸம்பர்-மீ 10உ இரவு 7 மணிக்கு சென்னை இராயபுரம் மன்னார்சாமி கோவில் தெரு அன்பர் P. முருகேச நாட்டார் அவர்களது 170 நெ. கட்டிட மேல் மாடியில் புரசவாக்கம், அன்பர் C. தியாகசுந்தரம் அவர்

கள் செலவில், ஸ்ரீகுரு ஞானபூபதி அவர்களால் அன்பு மார்க்க சங்கத்தின் கிளை யொன்று நிறுவப்பெற்றது. அப்பொழுது பூபதி அவர்களால் அன்பு மார்க்க சங்கத்தின் அவசியத்தைப்பற்றியும், மக்கள் அனுஷ்டிக்க வேண்டிய முறைகளைப்பற்றியும் தக்க மேற்கோள்களுடன் விரிவாகச் சொற்பொழி வாற்றப்பட்டது. "கண்ணாடிக்குள்ளொளி போல்முகம் காணவும்" என்ற விபரத்தைப்பற்றிப் பூபதிகள் கூறியது குறிப்பிடற்பாலது.

அப்பொழுது சென்னை பிரபல ஆர்ட்டிஸ்ட் A. D. ஆச்சாரி என்பவர், ஞான பூபதிகளின் தியாகச்செயலைப்பற்றியும், அன்னார் சமத்துவத்திற்காக இயற்றியுள்ள அநேக நூற்களின் மகத்துவத்தைப்பற்றியும், அன்பு மார்க்க சங்கம் மக்களுக்கு எவ்வளவு அவசியம் என்பதைப்பற்றியும் சாங்கோபசாங்கமாக எடுத்துக் கூறினார். அப்பொழுது அங்கு வந்திருந்த ஏராளமான ஹிந்து முஸ்லிம் கிருஸ்துவ அன்பர்கள் பலர் அன்பு மார்க்க சங்கத்தின் அங்கத்தினர்களாகத் தங்களைப் பதிவுசெய்து கொண்டார்கள்.

## தூத்துக்குடியில் அரிய பிரசங்கம்.

" 3—1—37 இரவு 7 மணிக்கு தூத்துக்குடி தச்சர் தெரு உயர்தர எலிமெண்டரி பாடசாலையில், தூத்துக்குடி விஸ்வகர்ம வாலிபர் சங்கத்தின் ஆதரவில் பொதுக் கூட்டமொன்று கூடியது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்தனர். அப்பெரிய கூட்டத்திற்கு தலைமை வகித்து பூபதிகள் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு வருமாறு:—

அன்பர்களே!

நாம் பல நாட்களாகப் பொதுக் கூட்டத்தில் பேசுவதை விரும்பவில்லை, ஏனெனில் பேச்சு அதிகரிக்கிற போது உணருந் தன்மை குறைவுபடுகிறது. உணர்ந்து அனுபவித்தலே மிகச் சிறந்தது. ஆயினும் உலகில் அவரவர்களுக்குத் தெரிந்த உன்னத அனுபவத்தை "நான் பெற்ற பேறு பெறுகவிவ்வையகம்" என்பதற் கிணங்க, தாம் அனு

யவித்ததுபோல் ஏனையோரும் அனுபவிக்கும் பொருட்டு தமக்குத் தெரிந்ததை மறைக்காமல் பிறருக்கு விளங்கச் செய்யவேண்டியது கற்றுணர்ந்தோர் கடமை. அவ்வாறு சொல்லமுயலும்போது, சனங்கள் அபிப்பிராயம் பலவிதமாயிருப்பதால், அபிப்பிராயபேதம் உண்டாவது இயல்பாயிருக்கிறது. "மௌனம் கலகநாசம்" என்பதுபோல் தானறிந்த ஒன்றை தன்னோடாவது, அல்லது தன்னோடொத்த அறிவுடையவர்களுடனாவது நிறுத்திக்கொள்வது ஒருவாறு சிறந்ததெனினும், கற்றுணர்ந்தவர்களிற் சிலரால் அவ்வாறிருக்க முடிவதில்லை. ஆகையால், நீங்கள் எல்லோரும் ஏகோபித்துக் கேட்டுக் கொண்டதற்காக எமக்குத்தெரிந்தவற்றை உங்கள் முன்னால் கூறுகின்றேன். நீங்கள் பொறுமையுடன் கேட்டு ஆனந்திப்பீர்களாக.

அன்பர்களே!

நாம் பிறந்துவளர்ந்து வாழ்வது இந்திய நாடு நமது தென்னாடு எல்லாவளங்களாலும் சிறந்தது. முன்னோர்கள் நமது நாட்டைப் புண்ணிய நாடென்று கூறியிருக்கிறார்கள். அதிற் சிறிதும் ஐயமில்லை. நீர்வளம் நிலவளங்களாற் சிறந்தது, நெல்விளையும் நாடு, பருத்திவிளையும் நாடு, கரும்புதரும் நாடு, பிறநாட்டை எதற்கும் எதிர்பாராத நாடு, ஆனால், நாட்டில் வளமிருந்தும், நமது உள்ளத்தில் வளமில்லை. சாதிச்சண்டை, மதச்சண்டை, நிறச்சண்டை, அரசியற் சண்டை இவைகளெல்லாம் பெருகுகின்றன. அன்பும், சகோதரத்துவமுமில்லை. ஒருவர் மீது ஒருவர் பொறாமை காரணமாகப் பகைகொள்ளுகின்றனர். தேசாபிமானம், பாஷாபிமானம் என்று பலர் பறையடித்தாலும் உண்மையில் ஒருவருள்ளத்திலும், தேசாபிமானமும், பாஷாபிமானமும் சிறிதுமில்லை. எல்லாம் போலிவேடமாகவே யிருக்கின்றது. தெய்வ நம்பிக்கையும், ஆன்மவிசாரணையும் மக்கள் நினைவிலில்லை. நாகரீகப் பேய்பிடித்து அலைகின்றனர். மேனாட்டு மோகம் நாட்டினர் உள்ளத்தைக் கரைக்கிறது. இவ்வாறு [illegible] ம் நாம், [illegible] யமாயும் அவசர மாயும் [illegible] யங்கள பல

இவ்வாறு சாங்கோ பாங்கமாக உபந்நியாசம் செய்து கொண்டிருக்கையில், ஸ்கூல் டீச்சர், நா. சிதம்பர ஆச்சாரியாரும், அ. சி. வா. கனகசபாபதி நாடாரும் எழுந்து பூபதி அவர்களிடம், இப்பொழுது தாங்கள் பிராணயாமம் என்பதைப்பற்றிப் பேசவேண்டுமென்று எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். ஆகையால், சுவாமிகள்! பிராணயாமத்தைப்பற்றிச் சிறிது விளக்கமாகச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவ்வாறே பூபதி அவர்கள் பிராணயாமத்தைப்பற்றி மிக அருமையான பிரசஙகம் செய்தார்கள் அது வருமாறு:—

அன்பர்களே!

நாம் சரியை கிரியையாதி அநுஷ்டானங்களேயே சரிவர அநுசரிக்க முடியாதவர்களா யிருக்கின்றோம். சரியை கிரியைகளைச் சரிவர அநுஷ்டித்து இயமம், நியமம், ஆதனம் ஆகிய யோகாங்கங்கள் நன்கு கைவந்த பின்னரே பிராணயாமத்தைப்பற்றிக் கேட்டு அநுஷ்டிக்கவேண்டும். அன்றியும் இதுபோன்ற விஷயம் ஒரு பொதுக் கூட்டத்திலே பேசக்கூடியது மல்ல. இவ்விஷயம் வேடிக்கை விளையாட்டாக நாடகம் சினிமாவில் காலங்கழிப்பதுபோன்றது மல்ல. இந்தக் காதால் கேட்டு அந்தக் காதால் விட்டுவிடுகிற விஷயமுமல்ல. ஒவ்வொருவரும் மிக்க பயபக்தியோடு கேட்டு மனதில் பதித்து வைத்துக்கொண்டு அநுசரிக்க வேண்டிய விஷயம். இவ்விஷயத்தை எல்லோரும் உணருமாறு எளிதில் கூறுவதும் சிரமம். நீங்களெல்லோரும் எம்காபித்து ஒரு பொதுக் கூட்டத்தில் கேட்டுவிட்டபடியால், அதை மறுக்காமல் சிறிது கூறலாமென்று நினைக்கிறேன். அமைதியுடன் கேட்டுப் பயன்பெறுவீர்களாக!

## பிராணயாமம் (சிவாயாமம்)

## நப்பலாகிய சிவான்மாவைத் தடுத்து அறிதல்.

பிராணயாமம் என்றால், அநேகர் கருதுவதுபோல சுவாசத்தைப்பற்றிய தல்ல. சுவாசத்தை அடக்கும் அப்பியாசமானது உண்மையான பிராணயாமத்தை அடைய

தற்கு முன் செய்யவேண்டிய சாதனங்களிலே ஒன்று. **பிராணாயாமம்** என்பது பிராணனை அடக்கியாளுதல். தத்துவ நூலாசிரியர்கள் அபிப்பிராயப்படி இவ்வுலகமானது இரண்டு விதப் பொருள்களால் உண்டானது. அவ்விரண்டுவிதப் பொருளிலே ஒன்று ஆகாயம். உலகத்தினுள்ள எல்லாப் பொருள்களும் இந்த ஆகாயம் என்னும் தத்துவத்திலிருந்து உண்டானவைகள். இந்த ஆகாயமே காற்றாகவும், தீயாகவும், நீராகவும், மற்ற பரூஉப் பொருள்களாகவும் ஆகின்றன. நம்முடைய தேகம், மிருகங்களினுடைய உடம்பு, மரம், செடி கொடிகள், இன்னும் நம்மால் காணப்படும் மற்ற உருவங்களும், இந்திரிய வாயிலாக அறியும் ஏனைய வஸ்துக்களும் ஆகாயத்தினாலே உண்டானவைகள். ஆகாயம் என்னும் தத்துவத்தை நாம் தனியாகக் காணமுடியாது. ஆகாயம் மிக்க சூட்சுமமானதால் இந்திரியங்களுக்குப் புலனாகாது. ஆகாயம் தடித்து ஒரு ரூபத்தை அடைகிறபொழுதுதான் நாம் அறியக்கூடும். படைப்புக்கால ஆரம்பத்திலே ஆகாயம் ஒன்றிருந்தது. படைப்பின் முடிவில் உலகத்திலுள்ள கடின பதார்த்தங்களும், நீரும், தீயும், காற்றும் எல்லாம் ஆகாயமாகவே மாறிவிடுகின்றன. அடுத்த சிருஷ்டியிலே எல்லாம் ஆகாயத்தினிடத்திலிருந்தே உண்டாகின்றன. இந்த ஆகாயமென்கிற சடதத்துவமானது எந்தச் சக்தியினால் உலகமாயிற்றோ, அத்தகைய சக்திக்குத்தான் பிராணன் என்றும், சீவாத்துமா என்றும் பெயர். அது தான் இரண்டாவது வஸ்து. எவ்வாறு ஆகாயமானது எங்கும் நிறைந்த சடதத்துவமாயிருக்கின்றதோ! அவ்வாறே பிராணன் எங்கும் நிறைந்த அகண்டாகாரமாய் ஆகாயமென்னும் உபகரணத்தைக் கொண்டு பலவிதமான ரூபங்களோடு எல்லாவற்றையும் தோற்றுவிக்கின்ற ஒரு சக்தியாயிருக்கின்றது.

பிரளய காலத்திலே சடப்பொருள்களெல்லாம் எப்படி ஆகாயமாக மாறிவிடுகின்றதோ அப்படியே உலகிலுள்ள சக்திகளெல்லாம் பிராணனாக மாறிவிடுகின்றது. அதை

தல், இழுத்தல், தள்ளுதல், நினைத்தல் ஆகிய எல்லாம் அந்தப் பிராணனின் தொழிலேயாம்.

இவ்விதமான சக்திகள் ஒரே பிராணனும் ஊழிக் காலத்திலே ஒடுங்கி நின்று சிருஷ்டி காலத்திலே ஆகாயத்தோடு சம்பந்தப்பட்டு உலகத்தை உண்டாக்குகின்றது. சூட்சுமமான ஆகாயமென்னும் சடதத்துவத்தை இயக்கி, தூலமான பல ரூபங்களுடன் அநேக வஸ்துக்களை உண்டாக்கி அவைகளை ஆட்டிவைப்பதும் இந்தப் பிராணனே. உலக காரணமான பிராணனையே அடக்கியாளுந் திறமுடையவனுக்கு உலகத்திலே வசமாகாதது எதுவுமேயில்லை. எல்லாம் அவனுக்கு உட்படும். சூரியனை ஓரிடத்திலிருந்து மாற்றவும், தேவதைகளை வரவழைக்கவும் சக்தியுடையவனாகிறான்.

இப்பிராணனை பிராணாயாமத்தினாலே தான் அடக்கியாளவேண்டும். யோகியானவன் தன்னருகிலுள்ள வஸ்துவை அடக்க முதலில் முயற்சிக்கவேண்டும். ஒருவனுக்கு அதிசமீபத்திலிருப்பது அவன் தேகம் தான். அதனினும் சமீபமுள்ளது மனம். தேகத்திலும் மனத்திலும் வேலை செய்து கொண்டிருக்கும் பிராணன் உலகத்திலுள்ள எல்லாப் பிராணனைவிட அதிக சமீபமானது. பிராணசத்தியாகிய பெரிய கடலிலுள்ள ஒரு அலையைப் போன்றது நம்மிடமிருக்கும் பிராணன். இச் சிறிய அலையாகிய பிராணனை அறிந்து அடக்கியாள்வோமானால், பிறகு பிராணனாகிய சமுத்திரத்தையே நாம் அடக்கி ஆளக்கூடும். சகல பிராணிகளிடத்திலும் ஜீவாதாரமாயிருப்பது இந்தப் பிராணனே. நமது தேகத்தில் இந்தப் பிராணன் செய்யும் காரியங்களை யெல்லாம் நாம் அறிவதில்லை. பசிவந்து ஆகாரத்தை உட்கொள்ளுகிறோம். ஒருவனுக்கு ஆகாரத்தை உட்கொள்ளும் வரையிலேதான் ஆகாரத்தின் ருசி முதலியவைகள் தெரியும். ஆகாரம் உள்ளே சென்ற பிறகு அந்த ஆகாரம் என்ன ஆகிறதென்று அவனுக்குத் தெரியாது. வயிற்றிற்குள் சென்ற ஆகாரம் சீரணிப்பதற்காக அவன் செய்யும் வேலை ஒன்றுமில்லை. சாப்பிட்ட பிறகு அவன் மற்

றோர் வேலையைச் செய்ய ஆரம்பித்துவிட்டாலும் ஆகாரம் நன்றாகச் சீரணமாகி, சத்துவேறாகவும், அசத்துவேறாகவும் பிரிந்து விடுகிறது. இதைச் செய்வது எது? பிராணனே. ஆனால் அவன் அதை அறியவில்லை. வயிற்றினுள் செய்த காரியத்தை அறிகிறானேயன்றி அதுசெய்த விதமும் திறமும் அவனுக்குத் தெரியாது. தேகத்திலே மனிதன் அறியாதபடி சில காரியங்களை நடத்தும் இப் பிராணனே காரியங்களை அறிந்து செய்யவும் உதவுகிறது. மனிதனுக்கு விஷயத்தை அறியவும், அறிந்த பிறகு தர்க்கிக்கவும், ஒத்தாசை செய்கிறபோது அப்பிராணனுக்கு மனம் என்றும் புத்தியென்றும் பெயர்கள் உண்டாகின்றன. படித்தல், படித்து அறிதல், அறிந்தபடி நடத்தல், உலக வியவகாரங்களில் பிரவேசித்தல் ஆகியவைகள், மனம் புத்தியின் காரியங்கள். நம்மை யறியாமலே பிராணன் செய்யும் தாழ்ந்த காரியங்களும், நாம் அறிந்து பிராணன் செய்யும் தொழிலும் இருப்பதுபோல, இப்பிராணனை அடக்கியாளும் சக்தியையும் பெறுவோமானால், நாம் மனம் புத்திகளுக்கு எட்டாத ஒரு உயர்ந்த நிலையிலும் இருக்கக்கூடும். அந்த நிலைக்குத்தான் சமாதி என்று பெயர்.

தேகத்திலே பிராணன் இருப்பதானது தூலமாய் சுவாசங்களாகத் தெரியும். சுவாசம் நின்றுவிட்டால் தேகம் அசையாது. பிராணனுடைய சூட்சும சக்திகளும் நின்று பிணமாய்க் கிடக்கும். சுவாசத்தை நிறுத்தி உயிருடன் சீவித்திருக்கும் வன்மையுடைய மனிதர்களும் உலகத்திலே யிருக்கின்றார்கள். யோகிகளை மாதக் கணக்காய்ப் பூமியில் புதைத்துவைத்தாலும், சுவாசத்தை அடக்கிக்கொண்டு சீவித்திருப்பார்கள். பிராணனை யடக்கியாளும் சக்தியைப் பெற்ற யோகிகளிடத்தில் தூலமான சுவாசங்கள் நின்றிருந்தாலும் பிராணனுடைய சூட்சும சக்திகள் அவர்களிடத்தில் வேலை செய்து கொண்டிருக்கும். சுவாசம் நின்றாலும் அவர்கள் சீவித்திருப்பார்கள். விரும்பினால் பிராண சுவாசங்களாகவிடுவார்கள். பிராணன், சுவாசப்பையை அசைவிக்கும்; அந்த அசைவினால் உள்காற்று வெளியே செல்லவும்,

வெளிக்காற்று உள்ளே செல்லவும் கூடும். இதற்குத்தான் சுவாசம் என்று பெயர்.

பிராணுயாமம் என்றால் சுவாசத்தை விடுவதுமல்ல, சுவாசத்தை அடக்குவதுமல்ல என்பதை அன்பர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

சுவாசத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கிற மூல சக்தியாகிய பிராணனை அடக்குவதற்குத்தான் பிராணுயாமம் என்பது என அறிந்துகொள்ளவேண்டும். எல்லாவற்றிற்கும், மூலாதாரமான இந்தப் பிராணனை வசப்படுத்திவிட்டால் நம்முடைய தேகமுழுதும் நமக்கு வசமாகிவிடும். பிராணனை வசப்படுத்திக்கொண்ட ஒருவன் மற்றவர்களின் தேகத்தையும் மனதையும் வசமாக்கும் சக்தியையும் பெறுகின்றான். உலகத்திலே அவனுக்கு வசமாகாதது எதுவுமேயில்லை. அவன் கூறும் அபிப்பிராயத்தை எல்லோரும் உடனே ஏற்றுக்கொள்வார்கள். ஆகையால், பிராண சக்தியானது அளவற்றது. அது ஆச்சரியப்படத்தக்க காரியங்களையெல்லாம் செய்யவல்லது.

ஒரு சமுத்திரத்திலே பெரிய அலைகளும், சிறிய அலைகளும், குமிழிகளும், சிறுதிவலைகளும் இருக்கின்றன. இவைகளுக்கு ஆதாரமாயிருப்பது சமுத்திரம் அல்லவா! சிறுதிவலைகளுக்கு ஆதாரமா யிருக்கிற சமுத்திரமே பெரிய அலைகளுக்கும் ஆதாரமா யிருக்கிறது. அதுபோல, பிராணன் என்னும் மகா சமுத்திரத்தில் பற்பல சிருஷ்டிகளும் இருக்கின்றன. ஒருவன் அறிவாளியாக விருக்கிறான். மற்றொருவன் அறிவீனனுயிருக்கின்றான். விவேகமில்லாத மிருகாதி உயிர்வர்க்கங்களு மிருக்கின்றன, இவைகளுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பது பிராணன்தான். இவ்வளவு பெருமை வாய்ந்த பிராணனை அடக்கியாளும் சக்தியை ஒருவன் பெறுவானுகில் அவன் எத்தகைய அரிய காரியங்களையும் செய்யக்கூடும். இந்தச் சக்தியைப் பெறுவதற்கு முக்கியமாக வேண்டப்படுவது, காலமும் முயற்சியுந்தான். யோகி

யானவன் காலம் போதாதென்று முயற்சியை விடுவதில்லை. யோகியானவன், விடாமுயற்சியுடன் அப்பியாசம் செய்து வந்தால் கூடிய சீக்கிரம் சித்திபெறலாமென்று எண்ணு கிறான்.

மணிக்கு 25 மைல் வீதம் செல்லுகிற நீராவியந்திரத் திற்கு இன்னும் அதிகமான நீராவியை உண்டாக்கினால் மணிக்கு 50 மைல் வீதம் செல்லும். அதுபோல் மிக்க சிரத்தையுடனும் சுறு சுறுப்பாகவும், தினமும் அப்பியாசம் செய்யும் பொழுது பிராணசக்தி முழுவதையும் அடக்கி யாள வலிமைபெற்று நித்தியானந்தத்தைப் பெறலாம்.

மனமானது பகிர்முகமாய் உலக விஷயங்களை அறிவதி லேயே பழக்கமுடையதாகி தேகத்திற்குள் நடக்கும் விஷயங் களை யறியச் சக்தியற்றதாய்ப் போய்விட்டது. தேகத்திற் குள்ளே நடக்கிற அதி சூட்சுமமான விஷயங்களை அறிந்த பின்னரே அவைகளைக் கிரமமாக நடத்தவும் அடக்கியாள வும் சாத்தியமாகும். ஆரம்பத்திலே தூலமாகவுள்ள சுவா சங்களை சரிவர நடத்தப் பழகிக்கொண்ட பிறகு, அத னினும் சூட்சுமமான பிராணசக்தியை அறிந்து வசப்படுத்த லாம்.

மனிதனுடைய நடு முதுகெலும்பின் மத்தியில் மூலா தாரத்திலிருந்து அதாவது அடியிடுப்பிலிருந்து சிரசுவரை யில் இடகலை பிங்கலை யென்னும் நாடிகளுக்கு மத்தியில் ஓடு கின்ற கால்வாய்போன்ற இரத்தக் குழாய்க்குத்தான் சுழி முனை என்று சொல்லப்படும். சாதாரண ஜனங்களுக்கு இட கலை பிங்கலை நாடிகள் தான் திறக்கப்பட்டிருக்கின்றன. சுழி முனை நாடி மாத்திரம் மூடப்பட்டே யிருக்கிறது. யோகி களுக்குத்தான் சுழிமுனை நாடி திறக்கப்பட்டிருக்கிறது. சுழிமுனை நாடியைத் திறந்துவிடுவதுதான் யோகிகளின் முதற் பிரயத்தினம். அதைத் திறப்பது விக்கல்போன்ற தியானத்து (திக்று)டன் பிராணாயாமத்தினால்தான் முடி யும். இச் சுழிமுனை நாடியில் ஆறு ஆதாரங்கள் இருக் கின்றன. மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம்,

அநாகதம், விசுத்தி, ஆக்ஞை, என்பவைகள்தான் ஆறு ஆதாரங்கள். சுழிமுனை நாடியின் அடிப்பாகமான மூலாதாரம் திறக்கப்பட்டுக் குண்டலிசக்தியும் எழுப்பப்பட்டால், மனிதனுடைய எண்ணமானது சுழிமுனை நாடியின் வழியாக மேலே ஏற ஆரம்பிக்கும். மேலே ஏற ஏற மனமானது இந்திரிய விஷயங்களின் சம்பந்தமற்று சமாதி நிலையை அடையும். மூலாதாரத்தில் சகல சக்தியும் அடங்கியிருக்கிறது. அந்தச் சக்தியையே மூலாதாரத்திலிருந்து ஆக்ஞை அல்லது மூளைக்குக் கொண்டு வரவேண்டும். மனிதனிடத்திலுள்ள எல்லாச் சக்திகளிலும் உயர்ந்தது ஓஜஸ். இந்த ஓஜஸ் எவ்வளவு அதிகமாயிருக்கிறதோ, அவ்வளவுக்கு புத்திசாலியாகவும், ஞானியாகவும் இருப்பான். ஓஜஸ் அதிகம் உள்ள மனிதனுக்கு அதிக மனோதைரியம் உண்டு. எந்தச் சக்தியானது ஸ்திரீ சம்போகத்திற்குக் காரணமாயும், அப் போகத்தையும் அதனாலுண்டாகிற இன்பத்தையும், அடிக்கடி நினைக்கிறதற்கு காரணமாயுமிருக்கிறதோ! அந்தச் சக்தியை மாதர்களிடத்தில் செலுத்தாமல் அடக்கிவிட்டால், அது ஓஜஸாக மாறிவிடுகிறது. மாதர்போகத்திற்குக் காரணமான சக்தி மூலாதாரத்திலிருப்பதால் யோகியானவன் மூலாதாரத்திலிருக்கும் அந்தச் சக்தியை ஓஜஸாக மாற்றி மூளைக்குக் கொண்டுவருகிறான். ஆகையால் யோகியாக விரும்புவோன் மாதர் போகமே இல்லாதிருக்க வேண்டுமென்று அநுபவயோகிகள் கண்டிப்பாய்ச் சொல்லுகிறார்கள். இது காரணத்தினாலேதான் போகிக்கு யோகம் சித்தியாவதில்லை.

பிராணனை அடக்கியாளும் முறைகளைப்பற்றி இங்கே விரிக்கிற் பெருகும். அன்றியும், அவ்விஷயங்கள் உபதேச வாயிலாக தெரிந்தறியக்கூடியது. இன்னும் அதிக விபரமாக இப்பிராணாயாமத்தைப்பற்றி அறிய விரும்புவோர், நம்மால் எழுதப்பெற்றுள்ள வேதாந்த பாஸ்கரன், ஞானயோக ரகசியம் என்னும் நூல்களிற் படித்துணரலாம். பிராணனாகிய சிவாத்மாவைப்பற்றி ஞானக் களஞ்சியம்—ஆன்ம விளக்கம்

என்ற அத்தியாயத்தில் சரீர சிவவாதம் என்ற தலைப்பின் கீழும் படித்தறியலாம்.

அன்பர்களே! நாம் இதுகாறும் எடுத்துக் கூறியதி லிருந்து பிராணாயாமம் என்பது பிராணனை அடக்கியாளுதல் என்றும், சுவாசத்தை அடக்கியாளுதல் அல்ல என்பதும், சுவாசப பழக்கமானது ஆரம்ப காலத்தில் அப்பியாசிக்கவேண்டிய தொன்று என்பதும் ஒருவாறு உணர்ந்திருப்பீர்களென்று நினைக்கின்றேன். நீங்கள் இது வரையில் பொறுமையுடன் கேட்டின்புற்றதற்காக எனது ஆசி உரியதாகுக என்று கூறி முடித்தார்கள். பிரசங்கத்தைக் கேட்டு எல்லோரும் ஆரவாரித்துக் கரகோஷம் செய்தார்கள். பிரசங்கத்தைக்கேட்டு ஆனந்தித்த பலரும் நேரில் வந்து தரிசித்து தங்களுடைய மனோபீஷ்டங்களைத் தெரிவித்துங் கேட்டும் திருப்தியடைந்து இரவு 11 மணிக்குச் சென்றார்கள்.

## பூபதிகள் தலைமையில் தூத்துக்குடி றஹ்மதுல்லாபுரம் பள்ளிவாசலுக்கு எதிரில் மற்றொரு பிரம்மாண்டமான கூட்டம்.

தர்சர்தெரு உயர்தர எலிமெண்டரி பாடசாலையில் 3—1—37உயில் விஸ்வகர்ம வாலிபர் சங்கத்தின் ஆதரவில் பூபதிகள் நிகழ்த்திய சொற்பொழிவைக் கேட்டு ஆனந்தித்த மேலூர் வாசிகள், பாபாஜான் இலவச மக்கள் சீர்திருத்த ஆச்சிரமத்தின் சார்பாக 10—1—37உ மாலையில் மேலூர் றஹ்மதுல்லாபுரம் தெருவில் ஒரு பிரசங்கம் செய்ய வேண்டுமென்று பூபதிகளைக் கேட்டுக் கொண்டார்கள். அதற்கிசையவே பூபதிகளை ஒரு பீட்டனில்வைத்து பஜனைக் கோஷ்டிகளுடன் ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள்.

பூபதிகள் பீட்டனிலிருந்து இறங்கியவுடன் அடியிற்கண்ட,

பேநாழி அகமதுதாஸ் பாடிய

(கனகமணி யோகசையே என்ற மெட்டின் பாடலை.)

ஞானசூரியன் பத்திரிகையிலிருந்து

கண்ணிகள்.

திருவருட் கருணாநிதி தவத்
திகழும ஞான பூபதி
நின்றருளப்பெரு மான்மொழிபசுந்
தேனுறு துய்ய மஹான்குரு வருவீர்
வருவீர்—வருவீர்—வருவீர் (திரு)

தருப முற்றநகு ஞானரா வரும்
சருவ சிவத யாபரா
கண்டவிழேநற் கண்டெனன்புகழ்
கொண்டநெய்விகத் தொண்டரே வருவீர்
வருவீர்—வருவீர்—வருவீர் (திரு)

மோன முத்தமிழ் சேத்திரா தவ
ஞான சித்தநற் பாத்திரா
மூர்த்தியே அருள் கீர்த்தியே தரும்
பூர்த்தியே செயத் தோத்திரம் வருவீர்
வருவீர்—வருவீர்—வருவீர் (திரு)

கற்பித கருணை யானந்தம் ஞானக்
கனிந்தி யப்பெரு மானந்தம்
காட்சியே தவ மாட்சியே தரும்
நீட்சிக்கலைய ராட்சியே வருவீர்
வருவீர்—வருவீர்—வருவீர் (திரு)

ஸ்ரீவேதாந்த சாகமே முதல்
சித்தாந்தரிய தங்கமே
தேசிகன் புகழ் பேசமகிது
தாசனின் துணை நேசமே வருவீர்
வருவீர்—வருவீர்—வருவீர் (திரு)

என்னும் பாடலைப்பாடி வரவேற்றார்கள். அங்கு குழுமியிருந்த பெருந்திரளான சனங்களின் ஆரவாரத்தினிடையே பூபதிகள் தலைமைவகித்தார்கள். A. K. சையத் ஆதம்ஷா என்பார் கடவுள் வாழ்த்துக் கூறி, பூபதி அவர்கள் மீது தாம் பாடிய பாடலையும் பாடினார்.

பூபதிகள் தமது தலைமைப் பிரசங்கத்தில் ஆசிரமத்தைப் பற்றிச் சிறிது கூறிவிட்டு, இந்து முஸ்லிம் ஒற்றுமையைப்பற்றிக் கூறுகையில்:—எல்லோரும் ஆண்டவனது மக்கள், ஆண்டவன் சன்னிதானத்தில் எல்லோரும் சமம், நாமெல்லோரும் சகோதரர்கள், நடை உடை முதலிய வெளித்தோற்றங்களின் வேறுபாட்டைக்கொண்டு வித்தியாசம் பாராட்டக்கூடாது.

"காணும் சொரூபமெல்லாம் 'ஹக்கன்மனுஹர்' எனப் பேணி ஷஹூது செய்வாய்" என்று மேலோர்கள் கூறியிருப்பது ஈண்டு கவனிக்கவேண்டிய விஷயம். அப்படி ஒவ்வொரு சொரூபத்திலும் ஆண்டவனுடைய தோற்றம் வெளியாகி யிருப்பதையும், அவனன்றி யாராயும் இவ்வுலகத்தில் வெளியாகவில்லை என்னும் ஆப்தமொழியையும் உள்ளபடி உணர்வோமேயானால், ஒருவரை அன்னியரென்றும், ஒருவரை உறவினரென்றும், ஒருவரை உயர்ந்தவரென்றும், தாழ்ந்தவரென்றும் வித்தியாசங் காணமாட்டோம் என்பது போன்ற அநேக நீதிமொழிகளை, குர்ஆன் ஷரீபாகிய தலீலிலும், நாயக வாக்கியமாகிய ஹதீது ஷரீபிலும், திருக்குறள் முதலிய அநேக நீதிநூல்களிலிருந்தும், பல உதாரணங்கள் விளக்கமாக எடுத்துக்கூறி, பாபாஜான் மீதும், அவர்களுடைய இலவசமக்கள் சீர்திருத்த வாசகசாலை மீதும், அவ்வூர் முஸ்லிம்கள் சிலர் கொண்டிருந்த துவேஷத்தை மாற்றி சமரசம் அடையும்படி, சுமார் இரண்டு மணி நேரம் பிரசங்கம் செய்தார்கள். அதைக்கேட்ட பலரும் ஆனந்தமெய்தி, மறுநாளும் ஒரு பிரசங்கஞ் செய்ய வேண்டுமென்று பூபதி அவர்களைக் கேட்டுக்கொண்டார்கள். பின்னர் வந்தனோபசாரம் கூறி மலர்மாலை சாத்திப் பூபதிகளை மகிழ்வித்தார்கள். மறுநாள் நஹ்மதுல்லாபுரம் ஸ்கூலில், ஹை ஸ்கூல் ஹெட்மாஸ்டர் M. முஹம்மது பீர்கான் சாஹிபு, S. சையத் அப்துல் நபிஷா சாஹிபு இவர்களுடைய ஆதரவில் விருப்புற்றுக் கேட்டுக் கொண்ட ஆண் பெண் இருபாலர்களு மடங்கிய சில

அன்பர்களுக்கு ஆன்மலாப சம்பந்தமான ஒரு அரிய பிரசங்கம் செய்தார்கள்.

## அடித்ததுபோதும் அணைத்திடல் வேண்டும்.

1937-ஆம் ஜனவரி-மீ ரெட்டியபட்டி மேல ஆஸ்பத்திரி சத்திர சிகிச்சையில் வல்லுனரான நேட்டிவ் டாக்டர் ப. அழகர்சாமி ரெட்டியார் அவர்கள் பூபதிகளால் நிறுவிய கழுதி அனுதாட்சக தருமக் கட்டிடத்தில் அடிக்கடி வந்து தங்கி, பொது ஜனங்களுக்கு வைத்திய உதவி புரிந்து வருவதாக வாக்களித்து அவ்வாறே அடிக்கடி வந்து வைத்திய உதவிசெய்துவந்தார்கள்.

ராஜபாளையம் என்னும் ஊரிலுள்ளார் சிலர் ரெட்டியார் அவர்களை ராஜபாளையத்தில் வந்திருக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதன்பேரில் ராஜபாளையத்திற்கே சென்றுவிடுவதாக எண்ணி ஒரு நாள் ரெட்டியபட்டியிலுள்ள தன் வீட்டு மேல் மாடியிலிருந்த மருந்துச் சாமான்களை எடுத்துவரும்பொருட்டு மாடியின்மீது ஏறும்பொழுது படிக்கட்டுகளிலிருந்து தவறிக்கீழேவிழுந்து பலமானகாயம்பட்டுப் படுக்கையிலிருந்தார். அன்றிரவு அவரது கனவில் பூபதிகள் உருவந் தோன்றி அனுதாட்சக தருமக் கட்டிடத்தில் இருந்து வைத்தியம் செய்துவருவதாக ஒப்புக்கொண்ட நீர், அதற்கு மாறாக ராஜபாளையத்திற்குப் போக நினைத்ததனால் உமக்கு இப்படிப்பட்ட துன்பம் நேர்ந்திருக்கிறது என்று கூற, ரெட்டியார் உணர்ந்து பூபதி அவர்களிடம் மன்னிப்புக் கேட்கவேண்டுமென்று எண்ணியிருந்தார். சில தினங்களுக்குப் பிறகு தன்னைப் பார்க்க வந்த பூபதிகளைக் கண்டதும், டாக்டர் எழுந்திருக்க முடியாத அவ்வளவு அதிகமான தன் நோயையும் கவனியாது திடீரென்று ஆவேசம் வந்தவர்போல் எழுந்து, பூபதிகளின் பாதத்தில் அடியற்ற மரம்போல் விழுந்து, தான் செய்த தவறை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டார். பூபதிகளும் ஆண்டவன் அருளால் ஒன்றும் குறைவு வராதென்று கூற, சில தினங்களுக்குள் அழகர்சாமி ரெட்டியாருக்கு எழுந்து நடமாடும்படியாக நோய் குணமாகி விட்டது.

## ஆய்ப்பாடியில் மஹா பிரசங்கம்.

தரங்கம்பாடிக்குச் சமீபமுள்ள ஆய்ப்பாடி, ராத்திபத்துல் காதிறிய்யா பீ - அலாமத்தில் இஸ்லாமிய்யா சங்கத்தார்கள், பூபதி அவர்களை தங்கள் சங்கத்திற்கு வந்து ஒரு முறை பிரசங்கம்செய்ய வேண்டுமென்று பல வருஷங்களாகக் கேட்டுக்கொண்டே வந்தார்கள். பூபதிகளுடைய யோக ஞான நியதிகள், அவ்வாறு சென்று பிரசங்கம்செய்ய இடந்தராம லிருந்துவந்தது. கடைசியாக ஷை சங்கத்தார்கள், 5—6—37உ முஹம்மது நபி (ஸல்) அவர்களுடைய ஜனன விழா வைபவத்தின்போது நடைபெறும் மகா நாட்டையாவது வந்து திறந்துவைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்குப் பூபதிகள் தங்களுக்கு இப்பொழுது உடல் நலம் சரியாக இல்லாத காரணத்தால் வரமுடியவில்லையென்று மறுத்தும் அவர்கள் பிடிவாதமாய் கொடிக்கால்பாளையம் காப்டன் முகம்மது இஸ்மாயில் அவர்கள் வசம் செலவுக்குப் பணம் அனுப்பி எப்படியும் கண்டிப்பாக அழைத்துவர மேண்டுமென்று வற்புறுத்திச் சென்றார்கள். அதுகாரணத்தால் பின்னரும் மறுக்கமுடியாமல் மகா நாட்டுக்கு வருவதாக இசைந்து ஹிஜ்ரி 1356-ஹு றபீஉல்அவ்வல்-மீ பிறை 25 (5—6—37) சனியன்று ஆய்ப்பாடிக்குச் சென்றார்கள். ஷை சங்கத்தார்கள் பூபதிகளை பெருஞ் சிறப்புடன் குதூகலமாக எதிர்கொண்டு வரவேற்று மகா நாடு நடக்கு மிடத்துக்கு அழைத்துச் சென்று ஆசனத்தமர்ந்ததும் கீழ்க்கண்ட வரவேற்பு வந்தனோபசாரப் பத்திரத்தை வாசித்தளிக்க முன் வந்தார்கள்.

தம்மை அளவுகடந்து புகழ்ந்திருப்பதாகப் பூபதிகள் குறிப்பாலறிந்து, உபசாரப் பத்திரத்தை மகா நாட்டுக் கூட்டத்தில் படிக்கவேண்டாமென்று கூறி, உபசாரப் பத்திரத்தைக் கையில் வாங்கிக்கொண்டார்கள்.

உபசாரப் பத்திரத்தின் சரியான நகல்:—

சர்வ ரட்சகனும் சாட்சாத் கருணாநிதியுமாகிய
அல்லாஹ்வின் திருநாமத்தால்.

நிறைசெல்வத் திருவாரூர் வாசரும்,
வேதாந்த பாஸ்கரன், ஞானக் களஞ்சியம்,
ஞானயோக ரகசியம், ரூஹுல் இஸ்லாம்
முதலான பல பிரபல அரும்பெரும் நூற்களின் ஆசிரியரும்,
"ஞான சூரியன்" பத்திரிகாதிபருமான அல்ஆரிபு பில்லா(ஹ்)
மௌலானா, கருணை ஆனந்த
முஹம்மது இபுறுஹீம் ஞானபூபதி அவர்கள்
ஹிஜ்ரீ 1356-ஹு ரபீஉல்அவ்வல்-மீ பிறை 25 (5—6—37)
சனிக்கிழமையன்று
முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஜனனவிழா வைபவ
மஹாநாட்டைத் திறந்து வைத்தபொழுது
ஆய்ப்பாடி ஜாத்திரத்துல் காதிரிய்யா பீ - அலாமத்தில்
இஸ்லாமிய்யா சங்கத்தார்களால் வாசித்தளிக்கப்பெற்ற

## வரவேற்பு வந்தனோபசாரப் பத்திரம்.

அன்பு மார்க்கம் தழைத்தோங்கவந்த அருண்முகிலே!
யோகாநந்தநிலையைத் தேனெனப்புகட்டும் ஞானபூபதியவர்களே!
அஸ்ஸலாமு அலைக்கும்! வறஹ்மத்துல்லாஹி வ பறக்காத்துஹு—
வருக! வருக!! தங்கள் வருகை நல்வருகையாகுக!!!

பாவலர் போற்றும் நாவலர் பெருமானே!

தங்களைத் தெரிசித்து, தங்கள் திருவசனங்களைச் செவி மடுக்கும் புண்ணிய நாள் எந்த நாள்! எந்த நாள்! என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்த எங்கள் கண்களும் மனமும் புளகாங்கிதம் அடைய, இவண் விஜயம் செய்து அரிய பெரிய சொற்பொழிவாற்றி மகிழ்விக்கப்பெறும் எங்கள் பாக்கியமே பெரும் பாக்கியம்.

பரிசுத்த இஸ்லாத்தின் பரிபாலன மணியே!

தங்களது கல்வி, அறிவு, ஒழுக்கம், கருணை, பொறை, நிறை, சாந்தமாகிய நற்செயல்களைப் போற்றிப் புகழுவதற்கு எங்களுக்குப் பல நாவுகள் வேண்டுமேயன்றி இவ்வொரு நா புகழுதல் சாலுமோ?

வானபூபதியை மாண்புடனுணர்ந்த ஞானபூபதியே!

"தன்னை அறிந்தோர் தலைவனை அறிவார்," என்னும் அருட்பெரும் போதனையாற்றிய அன்புடைப் பெரியீர்! தங்களது இனிய பிரசங்கமாரி என்னும் நல்லுணவால் மழை முகம் கண்ட பைங்கூழ்களைப்போல் விகசிதம் பெற்று நாம்பூரித்தேம்.

உள்ளத்திருள்போக்கும் ஒளிதிகழ் பானுவே!

"யாம் பெற்றபேறு பெறுக இவ்வையகம்" என்னும் உயரிய நோக்கத்துடன் கருணை மேலீட்டால் தாங்கள் அநேக அரிய பெரிய நூற்களை எழுதி வெளியிட்டதுடன், பிரசங்கவாயிலாகவும் உழைத்துவருவது, "பொன்மலர் நாற்றமுடைத்து" என்னும் முதுமொழிக் கிலக்காகத் திகழ்கிறீர்கள். தங்களது அன்பு குடிகொண்ட அகமும், அருள்குடிகொண்ட முகமும், இன்பங்குடிகொண்ட வசனங்களும் எங்களைப் பரவசப்படுத்துகின்றன.

அருணிறைந்தோளிரும் கருணாநிதியே!

தாங்கள் எங்கள் அழைப்பிற்கிணங்கி விஜயம் செய்து எங்கள் கோரிக்கையை நிறைவேற்றி மகிழ்வுறச் செய்தீர்கள். தங்களுக்கு அரோக திடகாத்திரமும் நெடிய ஆயுளும் கொடுத்து, உலக மன்பதைகள் சீர்திருந்தும் விதமாக பிரசாரம் புரிந்து திகழுமாறும், தாங்கள் விஜயம் செய்த

விசேஷத்தால் எங்கள் சங்கம் மேன்மேலும் அபிவிருத்தி யடையுமாறும் எல்லாம் வல்ல இறைவனான அல்லா(ஹ)ஜல்ல ஷானுஹு வதஆலா நல்லருட் கருணைபுரியுமாறு பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம் தங்கள்,

ஆய்பபாடி, 5—6—37.

ராத்திபத்துல் காதிரிய்யா
பீ. அலாமத்தில் இஸ்லாமிய்யா
சங்கத்தார்கள்.

பூபதி அவர்கள் மகா நாட்டைத் திறந்துவைத்துச் சில வார்த்தைகள் கூறியபிறகு, மகாநாடு ஆரம்பமாயிற்று. மகா நாட்டுத் தலைவரும் வேறு சிலரும் பிரசங்கம் செய்தார்கள். அன்று மாலையில் ஞானசம்பந்தமாக ஒரு பிரசங்கம் செய்ய வேண்டுமென்று பூபதி அவர்களை கேட்டுக்கொள்ள, பின் வருமாறு ஒரு அரிய சொற்பொழிவாற்றினார்கள்:—

அன்பர்களே!

நமது மார்க்க நாயகமாகிய முஹம்மது நபி (ஸல்) அவர்களுடைய பிறந்ததின விழாவை இன்று இவ்வளவு பெருந் சிறப்புடன் நீங்கள் கொண்டாடியதற்காக, நாம் மிக மிக மகிழ்ச்சியடைகின்றோம். இன்று காலையில் பிரசங்கம் செய்தவர்களெல்லாம் முகம்மது நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி நடக்கவேண்டுமென்பதையே வற்புறுத்திக் கூறினார்கள். இவ்விஷயம் இன்று நேற்றல்ல; பல வருஷங்களாகப் பல மகா நாடுகளிலும், கூட்டங்களிலும் ரசூலுல்லா அவர்களைப் பின்பற்றவேண்டும் என்றே பேசி வருகிறோம். ஆயினும், அதனால் பலன் ஏற்பட்டதா? யாராவது பின்பற்றி நடந்தார்களா? என்று பார்த்தால் பதில் கூற நாவெழவில்லை. காரணம், நாயகம் அவர்களுடைய உயரிய ஒழுக்க முறைகளைப் பின்பற்றுவதாயின் அவர்களுடைய குணகுணங்களில் பதினாயிரத்தில் ஒரு பங்கேனும் நாம் பெறுதவர்களாயிருப்பதே யாகும். யானையைப்போலப் பூனையும் நடந்துகொள்ள வேண்டுமென்றால்

எவ்வாறு கூடும். யானையின் உருவம் தோற்றம் பெருமித நடை முதலிய வெல்லாம் பூனைக்கு வருமா? முகம்மது நபி (ஸல்) அவர்களோ தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளர்; தனக்கென ஒன்றையும் சேமித்துவைத்துக் கொள்ளாதவர்கள். தன்னுடைய தெல்லாம் பிறருடைய நன்மைக்கென்றே கருதுகிறவர்கள், நாமோ உலகத்திலுள்ள எல்லாப் பொருளும் கிடைத்தாலும், அவா அடங்காதவர்களா யிருக்கிறோம். செல்வங்களெல்லாம் சேமித்துத் தனக்கென்றே வைத்துக்கொள்ள நினைக்கிறோம். அதுமாத்திர மின்றி, தொடர்ந்து வரும் சந்ததியார்களெல்லாம் அப்படியே பிறருக்கு ஈயாமல் அழிக்காமல் வைத்திருக்க வேண்டுமென்றும் கருதும சுபாவமுடையவர்களா யிருக்கின்றோம். நாயகம் அவர்களோ அவ்வாறில்லை; ஏனென்றால்:—

நாயகமவர்கள் கேட்டவர்களுக்கு இல்லையென்று சொன்னதில்லை. அவர்கள் நாளைக்கென்று ஒன்றும் வைத்திருக்கமாட்டார்கள். ஒரு தடவை நாயகமவர்களுக்கு தொண்ணூறாயிரம் (90,000) தங்க நாணயம் வந்தன. அவையனைத்தையும் விரிப்பின்மீது பரப்பிவைத்துக் கேட்டவர்களுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தார்கள். முழுவதையும் கொடுத்த பின்பே அவ்விடத்தை விட்டு எழுந்தார்கள். அவர்களிடம் எங்கிருந்தாவது பொருள் வந்தால் அதைச் செலவு செய்யும்வரை அவர்களுக்குத் திருப்தியுண்டாகாது. செலவிடாமல் அப்பொருள் வீட்டிலிருந்தால், வீட்டில் தங்கவுமாட்டார்கள். ஒரு சமயம் நாயகமவர்களிடம் நான்கு ஒட்டகங்களின் சுமையில் தானியங்கள் வந்தன. அவர்களின் ஊழியத்திலிருந்த ஹஸரத் பிலால் அவர்கள், அத் தானியங்களைக் கடை வீதியில் கொண்டுபோய் விற்றார்கள். விற்றமுதல் நாணயத்தில் ஒரு பாகத்தை, ஒரு யூதனுடைய கடனுக்காகக் கொடுத்து விட்டு நாயகமவர்களிடம் வந்து நடந்ததைச் சொன்னார்கள்.

"அப்பணத்தில் மிச்சமுண்டா" வென்று அவர்கள் கேட்க, கொஞ்சம் மிச்சமிருக்கிறது என்றார்கள். அப்போது கொஞ்சமாவது மீதியிருக்கும்வரை நான்வீட்டிற்குப்

போக முடியாது என்று சொல்ல, ஹஸரத் அவர்கள் "நான் என்ன செய்வது! கேட்பவர் ஒருவரும் இல்லையே என்றார்கள். அன்றிரவு முழுவதும் நாயகமவர்கள் பள்ளி வாசலிலேயே இருந்துகொண்டார்கள். மறுநாள் ஹஸரத் அவர்கள்நாயகமவர்களிடம் வந்து "யாரசூலுல்லா! ஆண்டவன் உங்களுக்கு இலேசாக்கிவிட்டான். அஃதாவது:— இருந்ததைப் பங்கிட்டுவிட்டேன் என்று சொல்ல, அவர்கள் ஆண்டவனைத் தோத்திரம் செய்துவிட்டு வீட்டுக்குச் சென்றார்கள்.

ஒரு சமயம் நாயகம் மேலாடையில்லாமலிருப்பதை யறிந்து, ஒருவர் ஒரு மேலாடை கொண்டுவந்து கொடுக்க. நாயகமவர்கள் அதை அணிந்துகொண்டார்கள். கொஞ்ச நேரத்திற்குள் அவர்களிடம் ஒரு ஸஹாபிவந்து "இந்த மேலாடை நன்றா யிருக்கின்றதே! என்று சொல்லவும், அவர்கள் அதையெடுத்து அவருக்குக் கொடுத்துவிட்டார்கள். அவர் வாங்கிக்கொண்டு வெளியில் வரவும், ஜனங்கள் அவரிடம் "நாயகமவர்களுக்கு மேலாடை அவசியம் தேவையா யிருக்கிறதென்பதும், யாராவது கேட்டால் அவர்கள் மறுப்பதில்லை யென்பதும் உமக்குத் தெரியுமே! என்று சொல்லிக் கண்டித்தார்கள். அப்போது அவர் "ஆம்! நான் பறக்க (கை விசேஷ)த்துக்காக வாங்கியிருக்கின்றேன். இவ்வஸ்திரத்திலேயே என்னைப் பொதிந்தடக்க வேண்டுமென்பதற்காகத்தான் வாங்கினேன் என்றார்.

நாயகமவர்களிடம் விருந்தினர்கள் வந்தால் அவர்களுக்கு மிகுந்த உபசாரம் செய்வார்கள். அவர்களுடைய தாராளத்திற்கு முஸ்லிம்கள் மட்டும் பாத்திரவான்களென்றில்லை. முஸ்லிமல்லாதாரும் அவர்களிடம் அடிக்கடி விருந்தினராய் வருவார்கள். அவர்கள் வித்தியாசம் பாராட்டாது அவர்களுக்கு உபசாரம் செய்வார்கள். ஓர் இரவு, ஒரு காபிர் நாயகமவர்களிடம் விருந்தாளியாய் வர, அவர்கள் அவனுக்கு ஒன்றன் பின் ஒன்றாய் ஏழு ஆட்டின் பாலைக் கறந்துகொடுக்க அவன் முழுமையும் பருகிவிட்டான். அன்றிரவு வீட்டிலுள்ள எல்லோரும் பட்டினியா யிருக்க

நேரிட்டது. நாயகமவர்களின் சுயநல மறப்பையும், அவர்களின் தாராள சிந்தையையும் அக்காபிர் கண்டு, அன்று காலையில் முஸ்லிமாய்விட்டார். இதேவிதமாக அபூபஸ்ரா கப்பாரி என்பவர் இஸ்லாத்தில் சேர்வதற்கு முன், நாயகமவர்களிடம் விருந்தினராய் வர, வீட்டில் அன்றிரவு ஆகாரத்திற்காக வைக்கப்பட்டிருந்த பால் முழுமையும் அவருக்குக் கொடுத்துவிட்டு, வீட்டிலுள்ள எல்லோரும் பட்டினியாயிருந்தார்கள். நாயகமவர்களுக்கு மிகுந்த துன்பத்தைக் கொடுத்த தக்கீப் கூட்டத்தார் மதினாவிற்கு வந்தபோது, அவர்களுக்குவேண்டிய சௌகரியங்களையெல்லாம் அவர்களே நேரில் கவனித்துவந்தார்கள். நாயகமவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் யூதர்கள் பலவித இடையூறு செய்து வந்தும், அவர்களை அன்பாக நடத்தி வந்தார்கள். யூதர்களின் வியாதியஸ்தர்களையும் பார்த்து வந்தார்கள். ஒரு சமயம் நாயகமவர்கள் ஓரிடத்தில் உட்கார்ந்திருக்கும்போது அவ்வழியாக ஒரு யூதனுடைய பிரேதத்தைக்கொண்டு போவதைக் கண்டு, அவர்கள் எழுந்து நின்றார்கள். அப்போது பக்கத்திலிருந்தவர்கள், நாயகமவர்களிடம் "இது ஒரு யூதனுடைய பிரேதம்" என்று சொல்ல, அவர்கள் "அது ஒரு ரூஹை (ஆன்மாவை) யுடையதன்றோ? என்று சொன்னார்கள். நஜ்ரான் மாகாணத்திலுள்ள கிறிஸ்தவர்கள் நாயகமிடம் தூது வந்தபோது, அவர்கள் அன்னிய மதஸ்தராயிருந்தும், அவர்களைப் பள்ளிவாயிலில் இறக்கி வைத்ததோடு நில்லாமல், அவர்கள் வணக்கத்தையும் அங்கு வைத்து நடத்துவதற்கு இடங்கொடுத்தார்கள். அவர்களுக்குப் போதுமான உபசாரமும் செய்தார்கள்.

இத்தகைய பெருங்குணம் நமக்கெல்லாம் வருவது மிக அருமை. அத்தகைய குணங்கள் நமக்குவரவேண்டுமானால், "ஊரார் பிள்ளையை ஊட்டிவளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என்றபடி நாம பரோபகார சிந்தையையே மேற்கொண்டு நடந்து வருவோமேயானால், முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய பெருங்குணங்களில் சில பாகமாவது நம்மிடம் வந்து பொருந்தும், அன்றியும் முஹம்மது நபி (ஸல்

அவர்கள் இல்லறத்தை மட்டுந்தான் மேற்கொண்டிருந்தார்களென்றும், இஸ்லாத்தில் துறவாச்சிரமம் அனுஷ்டிக்கப்படவில்லை யென்றும் கூறிவருகிறார்கள். முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஹிராமலையில் பல காலம் ஏகாந்தமாய்த் தங்கியிருந்து கடுமையான தவம்புரிந்து, அங்கிருந்தே ஞானோதயம் பெற்றுவந்தார்கள். ஆகையால், நாமும் இல்லத்திலிருந்தாலும் சில காலம் ஏகாந்தியாய் தனித்து தவஞ்செய்தாலன்றி,

உண்டதே யுண்டு வுடுத்ததே வுடுத்து
அடிககடி வுரைத்ததே வுரைத்துக்
கண்டதே கண்டு கேட்டதே கேட்டுக்
கழிந்தன கடவுளே யெல்லாம்

என்றபடி நமது வாணாளை வீணாகப் போக்கிவிடுவோம். முஹம்மது நபி (ஸல்) அவர்கள் துறவாச்சிரமத்தையும் மேற்கொண்டிருந்தார்கள் என்ற விபரம் நமது வேதாந்த பாஸ்கரன் என்னும் நூலில் ஆசிரியர் இயலிலும், எனது குருநாதர் என்னும் நூலில் விரிவாய்க் கூறப்பெற்றிருக்கிறது என்று விரிவாய்க் கூறிமுடித்தார்கள். கூட்டத்திலுள்ளோர் பலரும் கேட்டு ஆனந்தபரவச மடைந்தார்கள்



## பூபதிகளின் தேக அசௌக்கியமும் அது சம்பந்தமாக அன்பர் கடிதமும்.

பூபதி அவர்கள் ஆய்ப்பாடியில் மேற்கண்டவாறு நெடுநேரம் பிரசங்கம் செய்ததால் சரீரம் மிகவும் களைப்படைந்தது. அதுகண்ட தலைவர் சென்னை அமீர்சாட்சா சாஹிபு அவர்களும், சென்னை J. M. ஷரீபு அவர்களும், மன்னார்குடி முஹம்மது யூசுப் பாவலர் முதலானவர்களும் வேண்டிய சௌகரியத்தைச் செய்துகொள்ளும்படி ஏற்பாடு செய்தார்கள். அவர்களில் சென்னை J. M. ஷரீபு அவர்கள், சென்னைக்கு வந்தவுடன் அங்கு தங்கியிருந்த நான் இது விஷயத்தை, பூபதிகளின் பேரன்பினராகிய கொழும்பு

M. S. M. புஹாரி அவர்களுக்கு கடித மூலமாய்த் தெரிவித்தேன். அதுகண்ட புஹாரி அவர்கள் மிக்க ஆயாசமுற்று ஆண்டவனைத் துஆச்செய்து பூபதி அவர்களுக்கு கடிதம் எழுதியிருந்தார்கள். புஹாரி அவர்களின் அன்பின் பெருக்கத்தையும் ஆர்வத்தையும் எல்லோரும் அறிந்து, இவ்வாறு குருபிரானிடத்தில் அன்பு செலுத்த வேண்டும் என்பதற்காகவே அக்கடிதத்தின் நகலை கடைசியில் பிரசுரிக்கப்பெற்றிருக்கிறது.

## பூபதி அவர்கள் பாடிய தமிழ் சுபுஹான மௌலிது அச்சியற்றியது.

மாட்சிமை தங்கிய நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களுடைய ஜனன சரிதமாகிய சுபுஹான மௌலிது ஷரீபை அரபி பாஷையில் ஓதிவருவதால் சிறந்த உலமாக்களுக்கன்றி ஏனையோர்களுக்கு பொருள் விளங்காமலும், அப்பாடலின் நவரசங்களை அனுபவிக்கமுடியாமலு மிருக்கின்றதால், அதைத் தமிழ் வசனமாக (ஹிகாயத்தாக)வும், தமிழ்ப் பாடல்களாக (பைத்துகளாக)வும் இயற்றி வெளியிட்டால் எல்லோரும் உணர்ச்சி ததும்ப ஓதுவார்களே என்று, பூபதி அவர்கள் வெகு நாட்களாக எண்ணங்கொண்டிருந்தார்கள். சுபுஹானமௌலிதை தமிழில் மொழிபெயர்த்துத்தர, அரபி பாஷையில் மிக்க பாண்டித்யமுடைய மௌல்வி ஒருவர் கிடைக்காமையால், அவர்கள் எண்ணம் பூர்த்தியாகாமல் காலந்தாழ்த்தே வந்தது. பூபதி அவர்கள் அரபி தமிழ் மொழிபெயர்ப்பாளரைப் பற்றிப் பலரிடமும் விசாரித்து வந்தார்கள்.

ஒரு நாள் பூபதி அவர்கள் கூத்தாநல்லூர் சென்றிருந்த ஞான்று, அங்கு பல மௌல்விகளை விசாரித்துத் திரும்பு காலையில் ஷெய்யூர் அரபிக்கலாசாலை மத்ரஸா மன்பஉல் உலா

நாவலிர், (Principal) மௌலானா மௌல்வி ஹாஜி ச. அ. முஹம்மதலி ஆலிம் சாஹிபு அவர்களைச் சந்தித்து, சாவகாசமிருந்தால் தாங்களே மொழிபெயர்ப்புச் செய்து கொடுக்கலாமே! என்று கேட்டுக்கொண்டதற்கு, அவர்கள் எனக்கு இப்போது சௌகரியமில்லை, புதக்குடியில் முஹம்மது அப்துல்லா ஆலிம் சாஹிபு நூரிய்யி என்பவர்கள் இதை மொழிபெயர்க்கத் தகுதிவாய்ந்தவர்கள்; அவர்கள் இப்பொழுது கூத்தாநல்லூர் சாந்திப் பிரகடன சபையாரால் வெளியிடப்பெற்ற குர்ஆன் திருமறைத் தமிழுரையையும் சரிபார்த்துக் கொடுத்தவர்கள். அவர்களே உங்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிவைக்கத் தக்கவர்கள். அவர்கள் மிக்க நற்குணமுடையவர்கள் காட்சிக் கெளியராய் இன்சொல் கூறுபவர்கள் என்று கூற, பூபதி அவர்கள் பூதமங்கலம் ப. சி. முஹம்மது உசைன் ஹாஜியார் அவர்களைப் புதக்குடி மௌலானா மௌல்வி கா. அ. அல்ஹாஜ் அப்துல்லா ஆலிம் சாஹிபு நூரிய்யி அவர்களிடம் சுபுஹான மௌலிதை மொழிபெயர்த்துக்கொடுக்கச் சவுகரியமுண்டா? என்று தெரிந்துவரும்படி அனுப்பினார்கள்.

புதக்குடி என்பது அழகிய சிறு கிராமம். தஞ்சை ஜில்லாவில், கொரடாச்சேரி ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்பால் மூன்று மைல் தூரத்திலுள்ளது.

அவ்வூர் வாசியும், பினாங்கு கனதன வியாபாரியுமான நூர்முஹம்மது றவுத்தர் அவர்கள் தமது ஏராளமான செல்வத்தைக்கொண்டு தாராள மனத்துடன் புதக்குடியில் அரபிக் கலாசாலை ஏற்படுத்திவைத்துக் காலஞ்சென்றனர். அது முதல் அக்கிராமம் தென்னிந்தியாவிலுள்ள பல முஸ்லிம் மாணவர்களைப் பயிற்சி செய்து உலமாக்களாகச் செய்யுமிடமாக விளங்கியது.

அக்கலாசாலைக்கு நாயகமாயும் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் மதரஸாவின் தலைமை ஆசிரியராகிய, ஷம்சுல் உலமா மௌலானா மௌல்வி ஹழரத் அப்துல்வஹாப் ஸாஹிப்

அவர்களிடம் கல்வி பயின்ற பிரதம மாணாக்கராகிய மௌலானா மௌல்வி ஹாபிஸ் ஹாஜி, அப்துல்கரீம் ஸாஹிப் (பாக்கவி) அவர்களைத் தலைமை ஆசிரியராகக் கொண்டு நடைபெற்று வந்தது. அப்துல்கரீம் அவர்கள் உயரிய உத்தம குணமுடையவர்கள். ரசூலுல்லா அவர்களுடைய பெருங் குணங்களுக்கு இலக்கியமாகக் கூறத்தக்கவர்கள். மேலும் அப்துல்கரீம் ஹஸரத் அவர்கள் மஞ்சக்குப்பம் படேசா சாஹிபு அவர்களை ஞானாசிரியராகக் கொண்டு ஞானகலையில் தேர்ச்சியானவர்கள். இத்தகைய பெரியார் புதக்குடி மத்ரஸாவில் தலைமை ஆசிரியராக இருந்தபொழுது மௌலானா மௌல்வி கா. அ. அல்ஹாஜ் முஹம்மது அப்துல்லா ஆலிம் சாஹிபு நூரிய்யி அவர்களும், ஷை மத்ரஸாவில் உதவி ஆசிரியராக இருந்துவந்தவர்கள். ஷை அப்துல்கரீம் ஹஸரத் அவர்களுடைய அன்பையும்பெற்று அவர்களோடு மக்கா யாத்திரையும் சென்று வந்தவர்கள். அவர்கள் மூலமாய் மஞ்சக்குப்பம் படேசா சாஹிப் ஹஸரத் அவர்களையும் ஞான போதகாசிரியராகப் பெற்று, அவர்கள் கிருபைக்குப் பாத்திரமானவர்கள். இன்னும் ஹைதராபாத் ஸூபி ஹஸரத் முதலிய பெரியார்களிடத்திலும் நெருங்கிப்பழகி அன்னவர்களுடைய கருணையைப் பெற்றவர்கள்.

இத்தகையாரிடம், பூதமங்கலம் ப. சி. முஹம்மது உசைன் ஹாஜியார் பூபதிகளுடைய விருப்பத்தைத் தெரிவித்தார்கள். முஹம்மது அப்துல்லா ஆலிம்சாஹிபு நூரிய்யி அவர்கள், ஏற்கனவே பூபதிகளின் பெருமையை நன்கறிந்தவர்களாதலாலும், ஷை மகான்கள் அப்துல்கரீம் ஹஸரத் அவர்கள் மூலமாகவும், படேசா ஹஸரத் அவர்கள் மூலமாகவும், பூபதிகள் ஞான சம்பந்தமானவர்கள் என்பதைக் கேள்விப்பட் டிருந்தபடியால் மிக்க சந்தோஷமடைந்து, ஞானபூபதி அவர்களிடம் நெருங்கிப் பழக எப்பொழுது சமயம் வாய்க்கும், அவர்களிடத்திலுள்ள ஞான சம்பந்தத்தை எவ்வாறு உணரலாம் என்று தாகமுற்றிருந்த அவர்களுக்குத் தண்ணீரானது வலிய அழைப்பதுபோ லிருந்த

தனால், உடனே அழைக்கப் போனவர்களுடன் கூடவே விஜயபுரம வந்து, பூபதிகளோடு அளவளாவி மகிழ்ந்து அவர்களோடு ஒரு வாரம் வரையில் தங்கியிருந்து அரபி சுபுஹான மௌலிதை தமிழில் மொழிபெயர்த்துக் கொடுத்தார்கள்.

அதைப், புதக்குடி அந்நூர் முஹம்மதிய்யு மத்ரஸா தலைமை ஆசிரியர், கிளியனூர் மௌலானா மௌலவி ம அப்துல் ஹமீது பாஃவில நூரியபி அவர்களால் ஒப்பிட்டுச் சரிபார்க்கச் செய்து, ஞானபூபதிகள் தமிழில் சொற்சுவை பொருட்சுவை நிரமபி மதுரம் ததும்பும் அழகிய பாடல்கள் (பைத்துகள்) இயற்றி 12-7-37-ல் அச்சியற்றி வெளியிட்டார்கள்.

அந்நூலைக் கொரடாச்சேரிக்கடுதத அத்திக்கடை ஜனாப் அ. செ. நக்கர்சா ரூவுத்தர் அவர்கள் முயற்சியால் அததிக்கடையில் குத்பாபள்ளி முகப்பில் 18-8-37 வியாழக்கிழமை இரவு மௌலிது ஓதுவதாகப் பலருக்கும் அழைப்புப் பத்திரிகைகள் அனுப்பினார்கள். ஷை அ. சே. ந. அவர்களது நண்பர்கள் சிலர், தங்கள் தங்கள் செலவில் பூப்பந்தல், தப்றக் முதலான திருப்பணியி லீடுபட்டு அழகாகச் சிங்காரிக்கப்பெற்ற பூப்பந்தலில், சிறந்த பல வெளியூர் உலமாக்களும், புதக்குடி அந்நூர் முஹம்மதிய்யு மத்ரஸா (அரபிக் காலேஜ்) ஆசிரியர்களும், மாணவர்களும் ஆனந்த பரவசத்துடன் வந்து குழுமினார்கள். உள்ளூர் வெளியூர் முஸ்லிம் ஜமா அத்தார்கள் எகோபித்து தக்பீர் சொன்னவர்களாக நிறைந்திருந்தார்கள். அத்தகைய சிறந்த மஜ்லிஸில், சில உலமாக்கள் தமிழ் மொழிபெயர்ப்பைப்பற்றிய பல பிரசங்கங்கள் புரிந்தார்கள். பின்னர், உலமாக்கள் அரபியில் சுபுஹான மௌலிதை ஓதினார்கள். அதே இராகத்தில் ஞானபூபதிகள் தங்களது புதல்வர் K. M. ஜமால் முஹியித்தீன் என்பவரால், தமிழ் சுபுஹான மௌலிது பைத்தையும், ஹிகாயத்தையும் ஓதி, தமிழிலே துஆவும் ஓதச்செய்து அரங்கேற்றினார்கள். அதைக்கேட்டு சகல உலமாக்களும் சபையோர்களும் மகிழ்வெய்தினார்கள். சில

உலமாக்கள் கேட்ட கேள்விகளுக்குப் பூபதிகள் சமய பதிலிறுத்தார்கள், இத்தகைய தமிழ் மொழிபெயர்ப்பு மிக்க அவசியமென்றும். அதிலும் ஞானபூபதிகள் வாக்கிலிருந்து மணிமணியாக வெளியானது விசேடத்திலும் விசேடமென்றும் உலமாக்கள் பிரசங்கமாரி பொழிந்தார்கள். சபையோர்கள் மர்ஹபா! மர்ஹபா!! (சோபனம் - சோபனம்) ஆமீன்! ஆமீன!! யாறப்பல் ஆலமீன் என்று மகாநாததார் சிரக்கம்பத்துடன் கூறிய ஸ்தோத்திரங்களுடன் ஆச்சரியித்து ஆனந்த பரவசம் அடைந்தார்கள். அத்தர், ஊதுவத்தி, பன்னீர் முதலானவைகள் வழங்கப்பெற்று இனிது நிறைவேறியது.

## அறியாமை — ஆமை.

சூரியன் உதயமாவதைக்கண்டு புஷ்பங்கள் மலர்ந்து மணம் வீசுகின்றன. பறவைகள் சந்தோஷித்து ஆரவாரம் செய்து பாடுகின்றன. விலங்கினங்கள் களித்து மகிழுகின்றன. மக்கள் பலர் துதித்து வணங்குகின்றனர். தொழிலாளர்கள் குதூகலத்துடன் தங்கள் தொழிலைத் தொடங்குகின்றனர். சூரியனைக் கண்டவுடன் ஆந்தைகள் பொந்தில் பதுங்குகின்றன. நரிகள் பதுங்குகின்றன. கள்வர் ஒளிகின்றனர். சில நாய்களும் காரணமின்றிக் குரைக்கின்றன. அதுபோலவே பூபதிகளால் வெளியிடப்பெற்ற தமிழ் குதுபாவை பொன்வீது என்னும் சூரியனைக்கண்டு சந்தோஷமுற்றவர் பலர். புகழ்ந்து கொண்டாடியவர் பலர். வாங்கிப் படித்து ஓதி மகிழ்ந்தவர் பலர். நூற்றுக்கணக்காகப் புத்தகங்களைத் தருவித்துப் பலருக்கும் வழங்கி உளம் பூரித்தவர் பலர். இவ்வாறிருக்க, ஒருவர் இதன் புகழ்கண்டு பொறாமையால் புழுங்கி முறுமுறுத்துக் குரைக்கலாயினர். மனம் போனபடியெல்லாம் வசைமொழி வரையலாயினர். அவர் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகும்படியாக நாமும் எழுதிவிடுவோம். அவ்வாறு எழுதுவதற்காக பூபதிகளுடைய சம்மதம் கேட்டோம். என்னுடைய குற்றங்களையெல்லாம் அவர் சரியாகக் கண்டுபிடித்து எழுதவுமில்லை. மிகவும், தூஷிக்கத் தெரிந்த

வருமல்ல. ஆகையால், அவர் அறியாதவரே யாவர். "அவர் தான் அறியாமல் எழுதினார், நாமும் பதிலுக்கு எழுதலாமா? ஆண்டவன் அவருக்கு நல்ல பத்தியைக கொடுக்கட்டும்" என்று பதிலிறுத்தார்கள். ஆகையால் நாமும் வாளா விடுத்தனம். உயர்குணமுடையார் சிறு விஷயங்களுக்காகக் கோபிக்கமாட்டார்கள். கோபிப்பார்களாயின், "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்தலரிது" என்றபடி பிறரால் தாங்கமுடியாததாயிருக்கும். அவர்கள் இதுபோன்ற அற்பசெயலைக் கனவிலும் நினையார்கள். ஆகவே, நூல் வெளியிடுவோர் சிலர் தனது இழிசெயலைக் காட்டி பரிசுத்த நூலை அசங்கியம் செய்துவிடுகிறார்கள்.

சூரியன் எல்லோருக்கும் பொதுவென்றறியாத ஒருவன் உச்சிப்பொழுதில் தன் வீட்டுக்கு நேராயிருக்கும் சூரியனைத் தனக்குமட்டுந்தான் சொந்தமென்று நினைத்து, மற்றவர்கள் சூரியனுடைய ஒளியின் பயனை அனுபவிக்கக்கூடாதென்றுறும் அதுபோல் குர்ஆன் ஷரீபு, சபூறான மௌலிது முதலானவைகள் எல்லோருக்கும் பொதுவாயிருப்பதல்லால் ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்குத் தக்கவாறு உரை எழுதி வெளியிட்டுள்ளார்கள். அந்த முறையில், எம்பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களுடைய ஞான கீதமாகிய சபூறான மௌலிதுக்கு ஞானபூபதிகள் தமிழ்ப்பாடலமைத்து வெளியிட்டுள்ளார்கள். சபூறான மௌலிது பொதுவென்றறியாத ஒரு அறிவிலி, றசூலுல்லாவும், அவர்கள் சபூறான மௌலிதும் தனக்கே ஏகபோக சொந்தமென்று மனம் புழுங்கி பிறர் பாடுவது தவறென்று தூஷிக்க முன்வருபவன் மூடர்களுக்குள் முதல் தாம்பூலம் பெறத்தக்கவனாவான்.

ஒரு காட்டுமிராண்டி கண்ணாடி எவ்விதமிருக்குமென்று பார்க்க விரும்பிப்போய் கண்ணாடியைப் பார்த்துவிட்டு, அதில் தோன்றிய தன் உருவத்தைக் கண்டு, கண்ணாடி களங்கமற்றதென்று சொன்னார்களே! அதுவும் என்போன்ற ஒரு காட்டுமிராண்டியாகத்தானே யிருக்கிறதென்று நிந்தனை செய்து போயிற்றாம். அதுபோலவே, சினிமா பார்த்துப்

பார்த்துக் கண் கெட்டுப்போய் ஆப்பரேஷன் செய்து கொண்டு கண்ணாடி போட்டுக்கொண்ட குருடன் ஒருவன், கண் தெரிந்த ஒருவர் வழிகாட்ட நடந்து பிறர் நடையைப் பழிப்பதுபோல, வசனரூபமாகவோ செய்யுள்ரூபமாகவோ ஒரு நூல் எழுத ஆற்றலில்லாமல, தெரிந்தவர்களிடம் கூலி கொடுத்து நூல் எழுதி வாங்கி வெளியிடும் ஒரு அஞ்ஞானி, ஞானமுள்ளவர்களை அஞ்ஞானி என்று குறிப்பிடுவதில் வியப்பொன்றுமில்லை. அவன் ஐயோ! அறியாமல் பிதற்றுகிற அறியாமை ஆமையே ஆமை!

—ooooo—

1937-ஆம் மார்ச்சு-மீ சந்தர்ப்பத்தில், பூபதி அவர்கள், தூத்துக்குடி அ. சி. வாலசுப்பிரமணிய நாடார் அவர்கள் ஜாகையில் தங்கியிருந்தார்கள். அப்பொழுது கோவில்பட்டியைச் சேர்ந்த சிப்பிகுளம் வாசரும், ஞானதிருஷ்டியுடையாரும், திருநெல்வேலிப் பக்கங்களில் ஆயிரக்கணக்கான மாணவர்களை யுடையவர்களுமான மெ. சிக்கந்தர் ருவுத்தர் அவர்கள், பூபதி அவர்கள் பெருமையைக் கேள்வியுற்று, அவர்களை நேரிற் காணவேண்டுமென்று விரும்பி, ஷை வாலசுப்பிரமணிய நாடார் ஜாகைக்கு வந்து பூபதிகளைக் கண்டனர். பூபதி அவர்களும் வரவேற்று, அன்புடன் உபசரித்து, வந்த நோக்கத்தைக் குறிப்பாலறிந்து "கண்ணினுண் மணியாய் நின்ற காரணக் குருவைப்போற்றி" என்ற பாடலைக் கூறினார்கள். அதைக்கேட்ட சிக்கந்தர் ருவுத்தர் அவர்கள் பிரமித்துப்போய, "நான் செய்த பாக்கியம்-நான் செய்த பாக்கியம்" என்று இருமுறை மும்முறை அடுக்கிக் கூறி வியந்தார்கள்.

பின்னர் பூபதி அவர்கள் கைவல்யசாமி மடத்திற்குச் செல்வதாகப புறப்பட்டார்கள். எல்லோரும் பின்னே சென்று, பலர் பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டே கைவல்ய சுவாமி மடத்துக்குச் சென்றார்கள். தூத்துக்குடியில் அநேக மடங்களிருக்கிறது. அவற்றுள் கைவல்ய சுவாமி மடமும் ஒன்று. அம்மடத்தில் தற்போது மடாதிபதியாகவிருக்கும் ஸ்ரீலஸ்ரீ வாசுதேவ சுவாமிகள் பன்னூற்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர்கள். பொதுவாக

ஜனங்களிடத்தில் மிகவும் அன்புவாய்ந்தவர்கள். யாரிடத்திலும் இனிமையாகப் பேசுபவர்கள். அவர்களை, குணச்சந்திர சுவாமிகளென்றே கூறுவது தகும். அங்கு எத்தனை பேர் சென்றாலும் சிற்றுண்டியும் பேருண்டியும் அளித்துப் பிறருடைய பசிப்பிணியைப் போக்குவதில் மிக்க ஞாபகமுள்ளவர்கள். அத்தகைய சுவாமிகள், பூபதிகளையும், அவர்களுடன் வந்தவர்களையும் வரவேற்று உபசரித்தார்கள். பின்னர் பூபதிகள் அங்கு கூடியிருந்த அநேக சாதுக்கள் முன்னிலையில் பல யோக ஞான விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னர் ஆரோபமும் அபவாதமும் என்பதின் விளக்கத்தைப்பற்றி அடியிற்கண்டபடி ஒரு பிரசங்கம் செய்ய நினைந்து,

அன்பர்களே !

இச்சந்தர்ப்பத்தில் உங்கள் முன்னால் ஆரோபம்-அபவாதம் என்பதைப்பற்றிச் சிறிது கூறலாமென்று எண்ணுகிறேன்.

அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லும்
உத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லாம்
மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தான்
முத்தியா மிவ்வி ரண்டின் முந்தியா ரோபங் கேளாய் 26

ஆரோப மதநி யாசங் கற்பனை யாவு மெல்லாம்
ஓரோர்வத் துவினில் வேறே யோரோர்வத் துவினை யோர்தல்
நாரூடு பணியாய்த் தோன்ற னரனுகித் தறியிற் றோன்றல்
நீரூடு கானற் றோன்ற னிறந்தலம் வெளியிற் றோன்றல் 27

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவாய் நிற்கும்
அப்பிர மத்திற் றோன்று மைம்பூத விகார மெல்லாம்
செப்புகற் பனையி னாலே செனித்தவென் றறிந்து கொள்ளே 28

என்று கைவல்ய நவநீத ஆசிரியர் கூறியுள்ளார். அதன் வியாக்கியானம் தங்களுக்குத் தெரியாததல்ல, ஆனால் அடியேன் பிழையில்லாமல் சொல்கிறேனா என்பதை நீங்கள் கவனித்துக் கேட்டு என் குற்றத்தைத் திருத்துவீர்களென்றே கூறத்துணிகிறேன்.

## ஆரோபமும் அபவாதமும்.

ஆரோபமென்பது கற்பனை. அதாவது ஒரு பொருளை மற்றொரு பொருளாகக் காண்டல் கயிற்றைப் பாம்பென்றும், கிளிஞ்சலை வெள்ளியென்றும், கட்டையைக் கள்வனென்றும் காணுதல் ஆரோபம். பாம்பாகத் தோற்றிய கயிற்றைக் கயிறாகவும், வெள்ளியாகத் தோற்றிய கிளிஞ்சலைக் கிளிஞ்சலாகவும், கள்வனாகத் தோற்றிய கட்டையைக் கட்டையாகவும், அதாவது உள்ளதை உள்ளபடியாகக் காணுதல் அபவாதம். இத்தன்மைத்தான ஆரோப-அபவாதங்களை யோக ஞான வேதாந்த சாஸ்திரங்களானது ஆரோப யுக்தியால் பரப்பிரம்மத்தினிடத்து சகசீவ பரங்களைக் கற்பிதம் என்று கூறி, அபவாத யுக்தியால் சகசீவ பரங்களைப் பரப்பிரம்ம மாக்குகிறது.

நாம ரூபங்களில்லாமலும், இரண்டு என்னும் பாகுபாடில்லாமலும், அங்குளது இங்குளது என்று பகுத்துக் கூறும் தன்மையில்லாமலும், எங்கும் ஒரே படித்தாக அதாவது ஏகசொரூபமாக-ஏக தெய்வமாக-ஒரே வஸ்துவாக-ஒரே பொருளாக அகண்ட ஞானசோதி சொரூபமாக-சுயம்புவாக - அருட்கருணாநிதி ஆண்டவனாக - சுடர்ப் பிழம்பாகப் பிரகாசிப்பது எதுவோ! அதுவே பிரம்மம். அத்தகைய பிரம்மத்தினிடத்தில் உண்மையேபோல் தோற்றும் பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும் அவற்றின் விகாரமாகிய அண்டபகிரண்ட சர-அசரங்களும், கற்பிதத்தால் தோற்றியவை. கயிறு சர்ப்பமாகத் தோற்றியபோது, ஆராய்ந்துபார்க்குமிடத்து, எதார்த்தத்தில் கயிற்றில் சர்ப்பமும், சர்ப்பத்தின் பெயரும் இல்லாததுபோல், பிரமமானது சகசீவ பரங்களாகத் தோற்றிய போதும், அந்தப் பிரமத்தினிடத்தில் நாமரூப விகாரங்கள் இல்லவே யில்லை. கயிறு பாம்பாகத் தோன்றும்போதும், பாம்பென்னும் மயக்கம் நீங்கியபோதும், எப்படி கயிறு உண்மையில் பாம்பாக வில்லையோ, அப்படியே சகசீவ பரங்களாய்த் தோற்றியபோதும், விசாரணைக்குப் பிறகு அவைகளில்லாமல் தோற்றியபொழுதும் பிரம்மம் மாறுபாட்டை

யடையாமல் விகாரமற்றதா யிருக்கிறது. மயக்கத்தினுல் உண்டான பாம்பால் கயிறு காரணமாகவும், பாம்பு காரியமாகவும் ஆயின. உண்மையில் பாம்பு காரியமாகில் கயிறும் மெய்யாகக் காரணமாகலாம். அவ்வாறின்றி, காரியமாகிற பாம்பு, மயக்கம் நீங்கியவுடன் பொய்யாகிறபடியால் கயிறு காரணமானதும் பொய்யே. ஆதலால் காரண காரியம் கயிற்றுக்கு இல்லாமற்போகிறது. அதுபோலவே மயக்கத்தினுல் உண்டாகும் சக சீவ பரங்களால் பிரம்மம் காரணமும், சக சீவ பரங்கள் காரியமும் ஆயின. சக சீவ பரங்கள் மெய்யாகக் காரியமாயின் உண்மையாக பிரம்மமும் காரணமாகலாம்.

ஞான ஆராய்ச்சியினுல் சக சீவ பரங்கள் உண்மையாக காரியமாகவில்லையென்று உணர்தலால், பிரம்மம் காரணமாகமாட்டாது. ஆகவே பிரம்மம் காரணமுமன்று, காரியமுமன்று என்று ஏற்படுகின்றது. கயிற்றினிடத்தில் காரண காரிய மயக்கம் உண்டானபோதும் கயிறு இரண்டாகவில்லை. அம்மயக்கம் நீங்கியபொழுதும் அது ஏகமாகவில்லை. இரு காலங்களிலும் அது இருந்தபடியே யிருக்கின்றது. அதுபோல பிரம்மத்தினிடத்தில் காரண-காரிய மயக்கம் உண்டானபோதும் அது அநேகமில்லை. அம்மயக்கம் நீங்கிய காலத்தும் ஏகமாகவில்லை இருகாலத்தும் பிரம்மம் இருந்தபடியே ஏகமாக இருக்கின்றது.* ஞானமயமாயும், ஏகமாயுமிருக்கும் பிரம்மமானது சக சீவ பரங்களாகத் தோன்றுதலே ஆரோபமாம். ஆரோபத்தினுல் சிருஷ்டி உண்டான வகை யாதோவெனின்:— அகண்டமாயும், பரிபூரணமாயும், சத்து-சித்து-ஆனந்த சொரூபமாகவும் விளங்கும் பிரம்மத்தினிடத்து கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவதுபோல மித்தையாக ஓர் நினைவு எழுந்தது. அதுவே மூலப்பிரகிருதியாகும். அந்த மூலப்பிரகிருதியும் நிலத்திலிட்டு நீர் வார்க்கப்பட்ட விதையானது, தனது காரண ரூபமான விதை வடிவமாகாமலும் காரியரூபமான அங்குராட்டிவமாகாமலும், ஊறி உற்பின்னவஸ்தையை அடைந்திருப்பதுபோல, சகசீவ பரங்களென்னும் மூன்று

பதார்த்தங்களையும் உள்ளே அடக்கிக்கொண்டு தன்னு காரண ரூபமான அவ்வியக்தாகாசமும், காரிய ரூபமான மூலாங்காரமாகாசமும் மத்தியகத் குணத்திரய சாம்யாவஸ் தையைப் பொருந்தியிருப்பதையே மகத்தத்துவம் என்று கூறுவர். நிலத்தில் உப்பிய விதையானது முதலில் ஒரு முளை விடுவதுபோன்று, மகதத்துவத்திலிருந்து அகங் காரம் பிறந்தது. விதையிலிருந்து உண்டான ஓரே முளை மூன்றாக விரிவதுபோன்று, அந்த அகங்காரத்திலிருந்து சத்துவம், ராஜஸம், தாமஸம் என்னும் முக்குணங்களுண் டாயின. சத்துவ குணத்திற்கு மாயை என்றும், அதில் பிரதிபலித்த பிரம்மசைதன்னிய பிரதிபிம்பத்திற்கு ஈசுவரன் என்றும் பெயர். ரஜோகுணமானது அநேக ரூபங் களாய் ஒன்றற்கொன்று வித்தியாச முடையவைகளாயிருக் கும். அவைகளுக்கு அவித்தை எனப் பெயர். அவித்தை யினிடத்து மலினசலப் பிரதி பிம்பம்போல பிரம்ம சைதன்யம் பிரதிபலிக்கும். அப்பிரதிபிம்பங்களுக்கே சீவர்க ளெனப் பெயர். மூன்றாவதாகிய தமோகுணம் இரண்டு வகைப்படும். ஒன்று ஆவரணம். மற்றொன்று விக்ஷேபம். ஆவரணமென்றால் மறைப்பு. இதைத்தான் பஞ்சப்ரகாச மென்று சொல்லப்படும். ஈசசக்தியானது, தேகம், சீவன், சாட்சிசைதன்யம் என்னும் இவைகளின் ஒன்றற்கொன் றுள்ள பேதந்தெரியவிடாது மறைத்து நிற்கும். ஆனால் இது மாயாரகித ஈசுவரனையும், சீவன் முக்தர்களையும் மூடாது. தேகமேதான், உலகபோகமே முக்தி என்று கூறிக்கொண்டு, இராகத்துவேஷங்களை விட்டவர்போல நடிக்கும் கிரியாவர் களையே மூடும். இந்த ஆவரண சக்தியே சம்சார பந்தத்தை விருத்தியாக்குகிறது; இதுவே மோட்சத்திற்கு விரோதி. மற்றொரு சக்தியாகிய விக்ஷேபமோ அவிவேகிகட்கு சம்சார காரணமானாலும் சிரவணாதிப் பிரயத்தனத்தால் மோட்ச மடைய விசாரிக்கும் விவேகிகட்கு குரு சாஸ்திரங் [illegible] மாய் உபகாரமாயிருந்து முக்தியடையச் செய்விக்கும். ஒன்றை வேறொன்றாக உணர்த்தலே விக்ஷேபம். ஒன்று மற் றொன்றாகத் தோன்றுதலே ஆவரணம்; ஆகவே விக்ஷே பத்தை அறிவு எனவும், ஆவரணத்தை அறியாமை எனவும்.

சொல்லலாம். இந்த விசேஷ சக்தியினால் சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் தன்மாத்திரைகளும், ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் ஐம்பூதங்களும், அந்தக்கரணமும், ஞானேந்திரிய-கர்மேந்திரியங்களும், பிராண பஞ்சவாயுக்களும், நானாவிதமான பேதங்களுடன் அநேக சரீரங்களும் உண்டாயின என்று மிக்க தெளிவாகவும் விரிவாகவும் கூறி முடித்தார்கள். அப்பொழுது சிப்பி குளம் சிக்கந்தர் ராவுத்தர் அவர்கள், தாங்கள் பூபதி அவர்களிடம் வரும்போது, தான் எண்ணியிருக்கும் ஒரு விஷயத்தைக் கூறிவிடுவார்களாயின், அவர்கள் ஒரு "மகானைத் தரிசிக்கப்போகின்றோம்" என்று எண்ணிக்கொண்டு வந்ததாகவும், பூபதி அவர்கள், அவ்வாறே, தான் எண்ணியதை ஒரு பாடல் மூலமாய்க் கூறித் திருப்திப்படுத்தி விட்டதாகவும், அதுபோலவே உங்களனைவருக்கும் பக்குவாபக்குவத்திற்குத் தக்கவாறு போதிப்பார்கள் என்றும் புகழ்ந்து ஒரு சிறு பிரசங்கம் செய்து விடைபெற்றுச் சென்றார்கள்.

எல்லோருக்கும் பகல் போஜனம் கைவல்ய சுவாமி மடாதிபதி தாங்களே யெழுந்து செய்துவைத்தார்கள். அன்று (7—3—37) மாலையில், ஷை மடாலயத்து நடராஜா ஹாலில் அன்புமார்க்கத்திறப்புவிழாவைப்பற்றி, ஞானபூபதிகள் தலைமையில், பல இந்து முஸ்லிம்களால் பிரசங்கம் செய்யப்பெற்றது. பல ஆண்களும் பெண்களும் ஏராளமாக வந்து கூடியிருந்தார்கள்.

## தூத்துக்குடியிலும் அன்பு மார்க்க சங்கத்தின் கிளை நிறுவியது.

சென்னையில் அன்புமார்க்க சங்கம் தாபிதம் செய்ததை "தாய்நாடு" முதலான பத்திரிகைகளின் வாயிலாக அறிந்து, தூத்துக்குடியிலுள்ள அன்பர்கள் சிலர் அங்கும் அன்புமார்க்க சங்கத்தின் கிளையொன்று நிறுவவேண்டுமென்று விரும்பி, பூபதி அவர்களை அழைத்ததின்பேரில் பூபதி அவர்கள் தூத்துக்குடிக்குச் சென்றார்கள். அங்கே

8—3—37உயில் ஒரு பெருங்கூட்டம் கூட்டப்பெற்றது. முஸ்லிம்கள், இந்துக்கள், கிறிஸ்தவர்கள் முதலான பலரும் பெருந்திரளாகக் கூடியிருந்தார்கள். அப்பொழுது கூட்டத்திற்குத் தலைமைதாங்கி, அன்புமார்க்க சங்கத்தின் அவசியத்தையும், நோக்கங்களையும்பற்றி மிக விரிவாக எடுத்துக் கூறியபின் அன்புமார்க்க சங்கம் நிறுவப்பெற்றது. மேற்படி சங்கத்தின் நிர்வாகிகளும் பல இந்து முஸ்லிம் கிறிஸ்தவ அன்பர்களும் சமமாகப் புடைசூழ பூபதிகள் நடுநாயகமாக வீற்றிருந்த காட்சியைப் புகைப்படம் எடுக்கப்பெற்றது. இவ்வாறு சங்கம் நடைபெற்றுவரும்போது 24—8—37ல் ஷை சங்கத்திலிருந்து பூபதிகளுக்கு எழுதிய ரிப்போர்ட்டில் அடியிற்கண்டவர்கள் கையொப்பமிட்டு ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். பெ. ரா. பெரியசாமி நாடார், ந. சி. வா. கனகசபாபதி நாடார், T. S. சங்கர ஆசாரியார், M. முகம்மது பீர்கான் சாஹிபு, S. சையத் அப்துல்லா பிஷா சாஹிபு, உமர் சாஹிபு, சு. மு. முகம்மதுகனி காந்தி, K. S. சங்கரநாராயணர், M. ஹுசைன்.

## கமுதி அஜூதரட்சக ஆலயத் திருப்பணி.

கமுதி அஜூதரட்சக ஆலயமானது அபிராமம் பிரபல தனவந்தர் கி. இ. தீ. முஹம்மது அபூபக்கர் அவர்கள் முயற்சியால், கமுதி பிரபல வர்த்தகர் ந. ராம. சு. அழகர்சாமி செட்டியார் வகையறாக்களால் ஆரம்பித்து, (பூபதிகள் எழுதி வெளியிட்ட "ஆத்மசக்தி" என்னும் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளபடி) ஷை கி. இ. தீ. மு. அவர்கள், சேலான் பிரபல வர்த்தகர் வலங்கைமான் அல்ஹாஜ் ஜனாப், அ. யாகூபு சாஹிப் அவர்கள், ஷையார் தாண்டிகலின்பேரில் செய்கோன் வர்த்தகர் கூத்தாநல்லூர் ஜனாப், ஜ. ம. அப்துல் மஜீத் அவர்கள், கொழும்பு நெ. 11, டாம் தெரு M. S. M. புஹாரி அவர்கள், கமுதி தமிழறிஞர் மு. கா. நாகலிங்க ஆச்சாரியார் அவர்கள், திருச்சி சின்ன சௌராஷ்டிரத்தெரு

B. R. மங்களேஸ்வரர், பா. தெ. பெ. ராஜமன்னார், பாவா ஜிப்பிரசாதி ஷாப், மேலமகாம், இராமசாமி அய்யர் இவர்கள், பிரோமிஷர் மேனுகாந்த மடாதிபதி ஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள், அபிராமம் சா. மே. இபுராமுசா அவர்கள், வெள்ளை பிடாரி வர்த்தகர் அபிராமம் வாசர் P. M. ஷேக் தாவூது அவர்கள், நாத்தாக்குடி கூ. கா. ஆ. பெரியசாமி நாடார் அவர்கள், பெ. ராம. பெரியசாமி நாடார் அவர்கள், அ. செ. வா. கணபதி நாடார் அவர்கள், ரெங்கூன் பர்மா செயிண்ட் பீட் இஞ்சினீயரிங் ஆபீஸ் கிளார்க் P. N. இராமசாமித் தேவர் அவர்கள், கமுதி கா. மு. காதர் முராயர் அம்பலம் அவர்கள் இன்னும் கமுதி, அபிராமம், நாத்தாக்குடி, திருச்சி, சென்னை முதலான ஊர்களிலுள்ள அன்பர்கள் பலரும் அவ்வப்போது அளித்துவந்த பொருள், சாமான்கள் முதலியவைகளைக்கொண்டும், ஞான பூபதிகள் விசயபுரம் கருணைநிதி பிரஸிலிருந்து அனுப்பி வந்த பெருந்தொகையும், காம்பவுண்டுக்கு முள்கம்பி முதலியவைகளும் உதவி வந்ததாலும், கமுதி அறுதாட்சக திருமடசாலையானது 1937-ம் வருஷத்தில் கட்டிப் பூர்த்தியாயிற்று. சமையலுக்காக ஒரு ஓட்டுக் கட்டிடம் கட்டி முடியவுற்றது. திருமட பள்ளிக்கூடம், அர்ச்சகர் கட்டிடம், சோதி மண்டபம் இவைகள் கட்டுவதற்கு அஸ்திவாரம் போடப்பெற்றிருக்கிறது.

## ஞானபூபதிகளுக்கு இலங்கையில் ஆதரவு.

கொழும்பும் அதைச் சேர்ந்த சுற்றுப்பிரதேசங்களும், அதாவது இலங்கைப் பூமியே ஞான பூமியாகத் திகழ்கின்றது. ஏனெனில் பாவா ஆதமலை (சிவனடி பாதம்) கதிர்காமம், தப்தர் ஜீலான் என்ற புண்ணிய ஸ்தலம், செந்தமிழ் விளங்கும் யாழ்ப்பாணம், புத்தருடைய உத்தம போத ஞானார்க்கம் நிறைந்த அனுராஜபுரம், கண்டி முதலான பல பெரும்பதிகளைத் தன்னுள் கொண்டிருப்பதாலும், புண்ணிய சீலர்களாகிய மகான்கள் அங்கு யார் சென்றாலும் அவர்

களை யெல்லாம் அன்போடு வரவேற்று உபசரித்து அவர்களுடைய நற்போதனைகளைக் கேட்டின்புறும் அறிஞர்கள் பலர் மலிகியிருக்கும் காரணத்தினாலும், நமது ஞானபூபதி அவர்களின் ஞான நூற்கள் உலகெங்கும் பரவியிருந்தாலும், இலங்கையிலே அதிகமான புத்தகங்கள் விற்பனையாகி வருகின்றதாலும், இலங்கையை ஒரு ஞானபூமி யென்றே கூறவேண்டியிருக்கின்றது. இன்னும் அங்கே நல்ல விஷயங்களுக்கு மிக்க ஆதரவுண்டென்று கூறுதல் மிகையாகாது. ஞானபூபதி அவர்களால் கமுதியில் நிறுவப்பெற்றுள்ள அனாத ரட்சக ஆலய தருமத்தின் பெருமையை உணர்ந்து பல கனவான்கள் தக்க பொருளுதவி செய்து வந்திருக்கின்றார்கள். அவர்களுள் கொழும்பு, டாம்தெரு, M. S. M. புஹாரி அவர்கள் முதலெல்லுவள்ளலைப் போன்று, தாமாகவே குறிப்பறிந்து "சொல்லாமலே (செய்வர்) பெரியர்" என்றபடி பூபதிகளை முன்பின் முகமுகமாகக் கண்டறியாதவர்களாயிருந்தும், கமுதி அனாத ரட்சக தருமச்சாலையைப் பற்றிய விளம்பரங்களை எங்கேயோ பார்த்தவுடன் பெருந் தொகைகள் அனுப்பி ஆதரித்து வருகின்றார்கள். அவர்களுடைய கைம்மாறு கருதாப் புயலன்ன பேருதவியைப் பூபதிகள் அடிக்கடி கூறி மகிழ்வார்கள். கொழும்பிலுள்ள இன்னும் பல நண்பர்கள் அனாத ரட்சக தருமச்சாலை சம்பந்தமாகப் பேருதவிசெய்ய விரும்புகிறதாகவும் அறிகின்றோம். கொழும்பிற்குப் பூபதிகளை அழைக்கவேண்டுமென்று கொழும்பு கிராண்ட் பாஸ் ரோடு மு. முஹம்மது ஹனீபு அவர்கள், M. S. M. புஹாரி அவர்கள் முதலான அன்பர்கள் ஏற்பாடு செய்து வருகிறதாகவும் தெரிகின்றோம். இத்தகைய புண்ணிய சீலர்கள் இறைவன் அருளுக்குப் பாத்திரர்களாக அரோக திடகாத்திரமும் அஷ்ட ஐசுவரியமும், இகபர சாதனங்களும்பெற்று நீடூழி வாழ்வார்களாக.

## இச்சரித்திரம் பாதிக்குமேல் அச்சிட்டபிறகு கிடைத்த குறிப்புகள்.

---

கொழும்பைச்சேர்ந்த சலாபம் ஆ. அ. முகம்மது காசீம் ஆலிம் சாஹிபு என்பவர்கள் 1919 ௵த்திலிருந்து பூபதி அவர்களைப்பற்றியும், அவர்களெழுதிய வேதாந்த பாஸ்கரன் என்னும் நூலைப்பற்றியும் கேள்வியுற்று, அப்புஸ்தகத்தை வரவழைத்து அவரும் அவர்களுடைய நண்பர்களும் படித்துப்பார்த்து ஆச்சரியமும் ஆனந்தமுமடைந்து, பின்னும் அவர்களெழுதியுள்ள நூற்களையெல்லாம் வாங்கிப் படித்துப்பெருமகிழ்ச்சியடைந்தார்கள். பின்னர் இத்தகைய மகானை நேரிற்காணும் பாக்கியம் என்று கிட்டுமோ! என்று பலநாள் எதிர்பார்த்திருந்து, 1930-௵ அக்டோபர்-௴ 13௳ திங்களன்று திருவாரூர்வந்து, பூபதி அவர்களை நேரிற் கண்டு தரிசித்து அளவளாவி, பல சந்தேகங்களையும் கேட்டுத்தெளிந்து, பூபதியவர்களைப் பார்க்கிறதற்கு முன் அவர்கள் கொண்டிருந்த பக்தி விசுவாசத்தைவிட, பார்த்த பிறகு பன்மடங்கு அதிக மதிப்பும், அன்பும் உடையவர்களாய் தங்கள் ஊருக்குச்சென்று ஞானயோக ரகசியத்தைப் பற்றி மிக நீண்ட உயரிய அபிப்பிராயம் ஒன்று வரைந்து அனுப்பினார்கள். அவ்வபிப்பிராயம் பூபதியவர்கள் இயற்றிய ஞான யோக ரகசியம் என்னும் நூலின் முகப்பில் சேர்த்துப் பிரசுரிக்கப்பெற்றிருக்கிறது.

## வடலூரில் பூபதி அவர்கள் திருவுருவந்தோன்றி மறைந்தது.

---

விருத்தாசலத்திற்குச் சமீபமுள்ள ராங்கியம் என்னும் ஊரிலிருக்கும் கடாக்ஷசாமி, ஓம்காரமூர்த்தி உபாத்தியாயர் முதலானவர்கள் பூபதியவர்கள்பால் மிக்க பேரன்புவாய்ந்தவர்கள். இவர்களும் இன்னும் சில நண்பர்களும் வடலூருக்கு ஜோதிப்பூச உற்சவத்திற்கு வருடந்தோறும் போய்வருவது

வழக்கம். அதுபோலவே 1931ல் வருஷம் பூச உற்சவத்
திற்கு வடலூர் சென்றிருந்தார்கள். அங்கு திருவாரூரிலிரு
ந்து வந்திருந்த குணச்சந்திர P. S. இரங்கசாமி பிள்ளை
அவர்கள் மூலமாய் பூபதிகள் வடலூருக்கு மறுதினம் வரு
வதாகத்தெரிந்து, பண்ருட்டி மண்டி, தங்கவேலு செட்டி
யார் பூபதி அவர்களை வரவேற்று உபசரித்து அமுது செய்
விக்க வேண்டுமென்றுவிரும்பி, பூபதிகள் புசிக்கும்படியாய்.
அமுது பொங்கி தயார்செய்து வைத்துக்கொண்டு பூபதி
அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அன்று
வெகுநேரம்வரையில் பூபதியவர்கள் வராமையால் அடிக்கடி
ரயிலுக்கும் ஆட்களனுப்பி எதிர்பார்த்தார்கள். பிறகு
நடராச படையாட்சி, அகோரமூர்த்தி முதலிய அன்பர்கள்
வெளியில் தங்கக்கூடிய இடங்களிலும் சென்று பார்த்தார்கள்.
அப்பொழுது அங்கே ஓரிடத்தில் பூபதிகளைக்கண்டு மகிழ்ந்
துபசரித்து இருக்கச்செய்துவிட்டு, அவர்கள் தங்கியிருந்த
விடுதிக்குவந்து இரங்கசாமி பிள்ளையிடமும், செட்டியார்
அவர்களிடமும் பூபதியவர்கள் வந்திருப்பதாகத் தெரிவிக்க,
எல்லோருமாகப் பூபதியவர்களைப் பார்க்கச் சென்றார்கள்.
அங்கே பூபதி அவர்களைக் காணாமல் பல இடங்களிலும்
தேடிப்பார்த்தும் அகப்படாமையால் பிரமாச்சரியமடைந்து,
'இதென்ன பெரிய மாயமாயிருக்கின்றதே தங்கியி
ருக்கவும் வேறு இடமுமில்லையே! வெளியிற் சென்றாலும்
எங்கும் வெட்ட வெளியானதால் தெரியுமே, இப்பொழுது
ரயிலுக்குப் போகவும் ரயில் புறப்படும் நேரமுமல்லவே!
என்று பலவாறு பேசிக்கொண்டார்கள். இது மகான்களின்
அற்புதச்செயல்போலுமென்று பூபதியவர்கள் உருவந்தோ
ன்றிய திக்கை நோக்கி நமஸ்கரித்தார்கள். பூபதி அவர்கள்
பூசத்தன்று வடலூர் செல்ல வியலாமல் திருவாரூரிலேயே
இருந்துவிட்டு, இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு
சென்னைக்குச் சென்றிருந்தார்கள். அங்கே இவ்விஷயமாய்
குணச்சந்திர P. S. இரங்கசாமி பிள்ளை வடலூரிலிருந்து
சென்னைக்கு எழுதிய கடிதத்தைப் பூபதிகள் பார்த்து அங்
குள்ள கருணை சோமசுந்தரம் முதலிய அன்பர்களிடம்
காட்டினார்கள்.

## விராலிமலை சுவாமியைக் கண்டு பேசியது.

---

பூபதிகள், திருவிடைமருதூர், திருநாகேஸ்வரம் முதலிய இடங்களில் வசிக்கும்போது, திருவிடைமருதூரையடுத்த திருப்புவனத்தில் மடாலயம் அமைத்துக்கொண்டு தங்கியிருந்த விராலிமலை சுவாமிகளைப்பற்றி கேள்வியுற்று, பூபதி அவர்கள் 1913-௵ சித்திரை மீ த்திலொருநாள் சென்றிருந்தார்கள். அந்த சுவாமிகள் யாரையும் தன்னிடம் நெருங்க விடுவதுமில்லை, யாருடனும் உரையாடுவதுமில்லை, மிகவும் கண்டிப்புடையவர்கள். யாருடனும் பேசாத அவர்கள், பூபதிகளைக்கண்டவுடனும் யாரங்கே நிற்கிறதென்று கேட்டார்கள். பூபதிகள் தங்களைத் தரிசிக்கவந்தேன் என்று கூற, விராலிமலை சுவாமிகள், அங்கிருந்த ஒரு பிராமணரை யனுப்பி, அவரைப் போகச்சொல் என்று கண்டிப்புடன் நான்குமுறை சொல்லியனுப்ப, பூபதிகள் ஒவ்வொரு முறைக்கும் ஒவ்வொருபடியாக வாயிற்படி நான்கையும் விட்டுக் கீழேயிறங்கி வந்து, தென்பாலுள்ள வில்வ மரத்தடியில் அந்தச் சித்திரை மாத நடுப்பகல் பதினைந்து நாழிகை வெய்யிலில் நின்றுகொண்டு "யான் இவர்களைப் பார்க்க நிஷ்காமியமாய் வந்தேனேயன்றி, காமியமாய் வரவில்லையே" என்றுபலபெரியோர்களையும் நினைந்து வருந்திக்கொண்டுநிற்கையில், விராலிமலைசுவாமிகள் வெளியில்வந்து மறுபடியும் யாரங்கே நிற்கிறதென்று அதட்டிக்கேட்க, பூபதிகள் ஒன்றும் பதில்கூறாமல் கண்ணீர்விட்டு அழுத வண்ணமாக நின்றுகொண்டிருந்தார்கள். விராலிமலை சுவாமிகள் பூபதிகள் அருகிற்சென்று நீ இராமலிங்கசுவாமிகளின் பேரர்சுக்காரனா? என்று சிரசில் கையை வைத்து "உனக்கு எல்லா நலனும் உண்டாகும்" நான் யாரிடமும் இவ்வாறு பேசுவதில்லை, நீ விரைவில் இவ்விடம் விட்டகல்வாயாக என்று கூறி அனுப்பினார்கள்.

## எண்கண் நிகழ்ச்சி.

1919-வருஷத்தில் பூபதிகள் ஒருசமயம் திருமதிக்குன்னம் சென்றிருந்தபொழுது, பூவனூர் பொன்னையாக் குருக்கள் முதலிய அன்பர்கள் வந்து, எண்கண் தைப்பூசத்திற்கு நாங்களெல்லோரும் போகிறோம், தாங்களும் உடன் வந்தால் அங்கே நல்ல பொழுதாகக் கழிக்கலாம் என்று பிடிவாதமாகப் பூபதிகளை அழைத்தார்கள். அவ்வாறே எல்லோரும் எண்கண் சென்று, அங்கொரு ஜாகையில் தங்கியிருக்கையில், இரவு 9 மணி சுமாருக்கு பூபதிகள் நல்ல காற்று வாங்குதற்பொருட்டு சற்றுநேரம் வெளியில் வந்து தங்கியிருந்தார்கள். அப்பொழுது அடுத்த தெருவிலுள்ள ஒருவன், முன்பின்னறியாத பூபதிகளை அந்த ஜாகையிலுள்ள தன் பகைவனென்று நினைத்து, கையினால் ஓங்கி அடித்துவிட்டு ஓடினான். அவ்வழியில் எதிர்ப்பட்ட சிலர் அவனைப் பிடித்து, பூபதிகள் முதலியோர் தங்கியிருந்த ஜாகைக்குக்கொண்டுவந்து, ஏன் அடித்தாய்! என்று கேட்க, அவன் வேறொருவரென்று நினைத்துத் தவறுதலாய் அடித்துவிட்டேன். இவர்களை இன்னாரென்றே எனக்குத் தெரியாது என்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அங்கிருந்தவர்கள், இவன் சொல்லுகிறது சரியல்லவென்று கங்கணங்கட்டிக்கொண்டு அடிக்கப்போனார்கள். அப்போது பூபதிகள், அவன் என்னை இன்னாரென்றே தெரியாமல் அடித்திருக்கிறான், அவனை அடிப்பதானது என்னை அடிப்பதுபோலவாகும், ஆகையால் நீங்கள் அவனை ஒன்றும் துன்புறுத்தாதீர்கள் என்று கூற, அங்கிருந்தவர்கள், பூபதிகளை நோக்கி, பெரியோர்களைக் காரணமின்றி அடித்தவனை பதிலுக்கு அடியாமல் விட்டால் அவன் பெருங்குற்றத்திற்கு ஆளாகி மிகவும் வருந்துவான். சிறிது தண்டனை கொடுத்துவிட்டால் குற்றம் நீங்கி சீர்திருத்தமடைவான் என்று கூற, பூபதிகள் நீங்கள் சொல்லுவதுபோலப் பெரியோர்களாகயிருந்தால்தானே, என்போன்ற சாதாரணமானவர்களை அடித்துவிட்டதால் ஒன்றும் வந்துவிடாது என்று சொல்லி அவனை விட்டுவிடச் செய்தார்கள். அவன் சில

மணி சேர்ந்திருப்பிரகு, இருட்டில் ஒரு கொல்லை வழியாகப் போய்க்கொண்டிருக்கும்போது, முதல்நாளிரவு மாங்காய் பலாக்காய் களவு போய்விட்டதாகவும், அவைகளைத் திருடியவன் இவன்தானென்று அக்கொல்லைக்காரன் சந்தேகித்துப் பிடித்துக்கட்டி, ஆறுமுகத்து உடையார் அவர்களிடம் கொண்டுபோய்விட்டான். அவர்கள் மிகவும் சந்தேகித்து, நமது தோட்டத்தில் திருட இவனுக்கு இவ்வளவு தைரியமாவென்று அவனை ஊரைச்சுற்றிக் கொண்டுபோய் அடிக்கச் செய்தார்கள். அப்பொழுது பொன்னையாக் குருக்கள் முதலானவர்கள் பூபதிகளிடம் வந்து சுவாமிகளே! நேற்று அவனை அடித்திருந்தால் அவன் குற்றம் நீங்கிச் சுகமாயிருந்திருப்பான், அவனைச் சிறிது அடிக்காமல்விட்டு விட்டதால் இப்போது அவன் பெருங் குற்றத்திற்கு ஆளாகிவிட்டான் என்று கூறி வருந்தினார்கள்.

பூபதி அவர்கள் ஒரு சமயம் மதுரைக்குச் சென்றிருந்தபோது, பூபதிகளிடம் விசுவாசமுள்ள திருவாரூர் பட்டுவையர் என்பவர் மிகுந்த சுரநோயால் பிடிக்கப்பட்டு தாங்கமுடியாமல் வருந்தினார். அன்றிரவு அவர் கனவில் பூபதி அவர்களின் உருவந்தோன்றி, பயப்படாதீர்! நாளை 12 மணி வண்டியில் நாம் திருவாரூர் வருகிறோம், திருவாரூர் ஸ்டேஷனில் நம்மை வந்து சந்தித்துக்கொள்ளும் என்று கனவு கண்டு, மறுநாள் பகலில் பட்டுவையர் சிறிது சுரம் தணியப்பெற்று 12 மணிக்கு ரயில்வே ஸ்டேஷனில் வந்து பார்க்க, பூபதிகள் அவ்வாறே வரக்கண்டு ஆச்சரியமடைந்து தரிசித்து சுரநோய் தீர்ந்து குணமடைந்தார்.

## சங்கமங்கல நிகழ்ச்சி.

1920-ஆண்டில் சிக்கலை அடுத்த சங்கமங்கலத்திலுள்ள அண்ணாமலைத் தேவர் என்பவருடைய அழைப்புக்கிணங்கி, அவர் வீட்டில் பூபதிகள் வந்து தங்கியிருந்த பொழுது, பூபதிகளையும் உடன்வைத்து அன்னமிட்டு எல்லோரும் அன்னம் புசித்தார்கள். பின்னர், பூபதிகள் எழுந்துபோனபிறகு, அண்ணாமலைத் தேவரின் சிற்றப்பா

ஒருவர், "பூபதிகள் இல்லாமானவர்களாயிற்றே, அவர்களையும் சாப்பாட்டு அறைக்கு அழைத்துவந்து உட்கார்வைத்து உண்ணலாமா? அப்படிச் செய்தால் நமது குலதெய்வம் கோபித்துக்கொள்ளாதா? என்று அண்ணாமலைத் தேவரைக் கோபித்துக்கொண்டார். அதற்கு அண்ணாமலைத் தேவர், மகான்களிடத்தில் நாம் பேதம் பாராட்டக்கூடாது. எந்தக் குலதெய்வமும் மஹான்களுக்குக் கட்டுப்பட்டு நிற்கும் என்று தடுத்துக் கூறினர். மறுசமயம் வெளியூரிலிருந்து வந்த பூபதிகள், வீட்டுக்குள் நுழையாமல் திண்ணையிலே உட்கார்ந்துவிட்டார்கள். பிறகு அமுதுண்ணும் சமயம், எனக்குத் திண்ணையிலேயே சாப்பாடு போடுங்கள் என்று கூற, அங்கிருந்த அண்ணாமலையின் மைத்துனரான புலிவலம் இராமையா பிள்ளை முதலியவர்கள் பேராச்சரியமுற்று, நாம் வீட்டுக்குள் பேசிக்கொண்டிருந்தது இவர்களுக்கு எப்படித் தெரியும்! வேறு யாரும் சொல்லியிருப்பார்களென்பதற்கும் ஒருவரும் வேற்று மனிதர்கள் உள்ளே யில்லையே! என்று நினைத்து, பூபதி அவர்களிடம் வந்து, நாங்கள் ஏதாவது தவறுதலாகச் சொல்லியிருந்தாலும் அதை மன்னிக்கவேண்டும் என்று கூறி முன்போல் வீட்டுக்குள் அழைத்துச்சென்று அமுதருந்தச் செய்தார்கள். இன்னும் ஷை புலிவலம் இராமையா பிள்ளை வீட்டில் நிகழ்ந்த அற்புதங்கள் பல.

## ஹஜ்ஜு யாத்திரைக்கு தெரிசனங்கொடுத்தது.

வலங்கைமான் வாசியும், செய்கோனைச் சேர்ந்த கொரச்சின் சைன், சோலான் பிரபல வர்த்தகருமான, அ. பாக்கர் சாஹிபு அவர்கள் பூபதி அவர்களுக்கு அத்யந்த நண்பராவார்கள். இவர்கள் மக்கா யாத்திரை புறப்பட்டபோது பூபதிகளிடம் சொல்லிக்கொண்டுபோக விஜயபுரம் வந்தார்கள். அப்பொழுது பூபதிகள் இல்லாமையால் அவர்களிடம் விடைபெற்றுக்கொள்ள முடியாமல் வருந்தி, பிரயாணக் கூட்டத்துடன் சென்னைக்குச் சென்று, பம்பாய்க்கு டிக்கட்டு வாங்கிக்கொண்டு புறப்படும் சமயத்தில்,

[illegible] ஸ்டேஷனில் அ. யாகூப் சாஹிபு அவர்களுக்கு [illegible] பூபதி அவர்களது ஒரு உருவந் [illegible] தெரிசனங் கொடுத்து, "முதலில் மதீனா [illegible] ரஸூலுல்லாவின் ரவுலா ஷரீபை அனுகி, [illegible] சரீரமெடுத்துக் காணுங்கள், அதில் [illegible] விட்டால், மற்றொரு விதமாக ஒளி [illegible] சந்தியுங்கள் என்று கூறி வழியனுப்பி [illegible] அங்ஙனமே அவர்கள் மதீனா முநவ்வர் [illegible] அவர்களைத் தரிசிக்கும்படியான பாக்கியம் [illegible] அங்கிருந்து பூபதி அவர்களுக்குக் கடிதம் [illegible]ருந்தார்கள்.

## பூபதிகளின் ஆடம்பரமற்ற வாழ்க்கை.

பூபதி அவர்களைப்பற்றிப் பத்திரிகைகள் மூலமாகவும், புத்தகங்களின் மூலமாகவும் அறிந்த பல அன்பர்கள் சிங்கப்பூர், பினாங்கு, கொழும்பு, இரங்கூன் முதலிய வெளி நாடுகளிலிருந்தும், இந்திய உள்நாடுகளிலிருந்தும் பார்க்க வருவது வழக்கம். அவர்களிற் பெரும்பாலோர், பூபதிகள் சடை, முடி, தாடி முதலிய கோலங்களை யுடையவர்களாக இருப்பார்கள் என்று தமக்குள் எண்ணிக்கொண்டு வருவார், பூபதிகளுடைய ஆடம்பரமற்ற சாதாரணமான தோற்றத்தைக்கண்டு சற்று மயங்கிவிடுவதும், பிறகு பூபதிகளுடைய அறிவுரைகளையும், ஞான போதனைகளையும் கேட்டு, உருவத்தில் ஒன்றும் பெருமை வேண்டியதில்லை; உருவத்தினுள்ளிருக்கும் ஞான சொருபத்திற்கே பெருமை என்று அறிந்து, பூபதிகளை வணங்கிச்செல்வதும் வழக்கமாயிருந்து வருகிறது,

திருவாரூரைச்சேர்ந்த மடப்புரம் சோமசுந்தரம் என்பவர், பூபதிக ளியற்றிய பக்திரசக் கீதம் என்னும் நூலை அச்சியற்றிக் கொடுத்தால், தான் விற்பனைக்காக 2000 புத்தகங்கள் எடுத்துக்கொள்ளுவதாக பூபதி அவர்களிடம் ஒப்பந்தம் செய்துகொண்டு, புத்தகம் தயாரானதும் கொஞ்சம் புத்தகங்களை மட்டும் எடுத்துக்கொண்டு போய் விற்பனை செய்துவிட்டு, ஒப்பந்தத்திற்கு மாறாக மற்ற புத்தகங்களை

யும் வெகுநாள் வரையில் எடுத்துக்கொள்ளாமலே யிருந்து விட்டார்.

அவர் ஒருநாளிரவு பிரார்த்தனையின் நிமித்தம் தெட்சணாமூர்த்தி சுவாமிகள் மடத்தில் வந்து படுத்து நித்திரை செய்யும்பொழுது, தெட்சணாமூர்த்தி சுவாமிகளின் உருவம் போல் ஒரு உருவம் தோன்றி "நீ என் எனக்குத் துரோகம் செய்துவிட்டு வந்தாய்" என்று கூறிப் பிரம்பாலடிக்க, தான் கைகட்டி வாய்புதைத்து நின்று "நான் யாதும் பிழைசெய்ய வில்லையே" என்று கூறி வணங்கி நிற்க, சுவாமிகளின் உருவம், பூபதிகளுக்குச் செய்த துரோகமே நமக்குச் செய்த துரோகமாகும்; பூபதிகளிடம் பத்திரசக் கிரகம் அச்சிடும் படி சொல்லிவிட்டு ஏன் எடுத்துக்கொள்ளவில்லை! உடனே எடுத்துவா! என்று கூறியதாகவும் சொப்பனங்கண்டு விழித்தெழுந்து, பூபதி அவர்களிடம் மறுநாட் காலையில் பணத்துடன் வந்து தான் செய்த பிழையை மன்னிக்கவேண்டும் என்று வணங்காத் தன்மையுடையவராகிய அவர் சாஷ்டாங்கமாக வணங்கிப் பணத்தைக்கொடுத்து புத்தகங்களை எடுத்துச் சென்றார்.

சங்கமங்கலம் பக்கிரி முதலியார் என்பவர் பூபதிகளை அணுகி பல வருஷங்கள் தொண்டுசெய்து ஞான யோக ரகசியங்களைச் சிறிது உபதேச வாயிலாக உணர்ந்து சீடனாகப் பழகிவந்தார். சிலகாலம் பூபதி அவர்களுடைய அச்சியந்திரசாலையில் வேலையும் பார்த்து வந்தார். சிலகாலம் சென்றபிறகு அச்சியந்திரசாலையில் தனக்கு வேலை அதிக கஷ்டமாயிருக்கிறதென்று கூறி, தான் இனி தனித்திருந்து (குருவில்லாமலே அப்பியாசம் செய்துகொள்ளலாமென்று நினைத்துக்கொண்டு) பூபதிகளிடம் சொல்லிக்கொள்ளாமலே போயவிட்டார். பிறகு ஒரு விஷயத்திலும் தெளிவடையாமல் தான்தோன்றியாய், தான் ஏற்கனவே கடைப்பிடித்திருந்த சில அனுஷ்டானங்களையும் விட்டுவிட்டு, தன்னுடைய சிகை முதலியவற்றையும் களைந்துவிட எண்ணி, ஒருநாள் நாவிதனிடம் சென்று க்ஷவரம் செய்துகொள்ளும் தருவாயில், திடீரென்று மயக்கம் வந்து கீழே விழுந்து

சாயபாமடைந்துவிட்டார். பின்னர் மயக்கம் தெளிந்து, பூபதிகளுடைய உபதேசங்களையும், மறந்து இவ்வாறு செய்ய நினைத்த அபசாரத்தினாலேயே இப்படி நேர்ந்ததென்று கருதி, பூபதிகளிடம் வந்து வணங்கி தன் பிழைகளை மன்னித்துத் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். பூபதிகள் அவரை ஏற்றுக்கொள்ளாமல் பேசாமலே யிருந்துவந்தார்கள். பிறகு ஒரு நாள் பக்கிரி முதலியார் மடப்புரம் தெட்சணாமூர்த்தி சுவாமி மடாலயத்திற்குச் சென்று சுவாமி தெரிசனம செய்துவிட்டு அங்கேயே படுத்து நித்திரை செய்யும்பொழுது தெட்சணாமூர்த்தி சுவாமிகளின் உருவம்போல அவர்முன் தோன்றி, "நீ பூபதிகளை அவமதித்துவிட்டு இங்கே என் வந்தாய்?" என்று கூறப் பயமுற்று, "நான் ஒன்றும் அவமதிக்கவில்லையே! அவர்கள் என்னோடு பேசமாட்டேன் என்கிறார்களே! நானென்ன செய்வேன்!" என்று சொல்ல, நீ காலையில் போ! உன்னோடு பேசுவார் என்று கூறக்கேட்டுத் திடுக்கிட்டு விழிப்படைந்து, மறுநாட் காலையில் பூபதிகளுடைய ஆசிரமத்திற்கு வர, பூபதிகள் பக்கிரி முதலியாரை வருக என்று கூறி யழைத்து இன்மொழிகள் புகன்று ஏற்றுக்கொண்டார்கள். முன்போலவே பக்கிரி முதலியார் பூபதிகளிடம் மெய்த்தொண்டராக அன்புபூண்டு வொழுகி வரலாயினர்.

பொன்னைடகத்திலிருந்து சென்னைக்கு வந்து உப்பு மண்டி வைத்திருந்த அஹமது புஹாரி சாயபு என்பவர் சென்னையிலுள்ள ஞான சூரியன் பத்திரிகாலயத்திற்குவந்து பூபதி அவர்களைப் பார்க்க விரும்பி, எப்பொழுது வருவார்கள் என்று அடிக்கடி விசாரித்துக்கொண்டே யிருந்தார். பிறகு ஒரு தினம் காலையில் பூபதிகள் அவர்கள் வந்திருக்கும் பொழுது வந்துபார்க்க விரும்பினார். அப்பொழுது அங்கிருந்த கருணை சோமசுந்தரம் பூபதி அவர்கள் இன்று வந்திருக்கிறார்கள், ஆனால் அவர்கள் இப்பொழுது நிஷ்டையிலிருப்பதால் மாலையில் வந்தால் பார்க்கலாமென்று சொல்லியனுப்பினார். பின்னர் மாலையில் பூபதி அவர்களும்,

கருணை சோமசுந்தரமும் வெளியிற் செல்லப் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றார்கள். வழியில் பெண்ணாடகம் சாஹிபு கூட்டத்தில் ஒருவராய் வந்துகொண்டிருந்தார். அப்பொழுது பூபதி அவர்கள் முன் பின்னறியாதவர்களாயிருந்தும் சோமசுந்தரம் பிள்ளையை நோக்கி, அதோ வந்துகொண்டிருக்கிற சாஹிபுதான் காலையில் என்னைப் பார்க்கவிரும்பியவர்களோ! என்று கேட்டார்கள். சோமசுந்தரம் பிள்ளை ஆச்சரியமடைந்து, இவர்தானென்று தாங்கள் எவ்வாறு கண்டுபிடித்தீர்கள்! என்று பூபதிகளைக் கேட்க, மனமானது கண்ணாடி போல சுத்தமாக வைத்துக்கொண்டால் எல்லாம் நன்றாக உணரலாம் என்று புன்முறுவலுடன் கூறினார்கள்.

பின்னர் பெண்ணாடகம் சாஹிபும் [illegible] இருவரும் ஒருவரை ஒருவர் சந்தித்து அன்புகொண்டு அளவளாவி திரும்பவும் காரியாலயத்திற்கு வந்து வெகு நேரம் வரையில் ஞான யோக விஷயங்களைப்பற்றி உரையாடிக்கொண்டிருந்தார்கள்.

சென்னை இராயபுரம் வாசிகளான முருகேச நாட்டார், நரசிம்மலு, புரசவாக்கம் தியாகசுந்தரம் இவர்கள் மூவரும் சென்னை மூக்கா நல்லமுத்துத் தெருவிலுள்ள ஞானசூரியன் (பூபதி அவர்களால் நடத்தப்பெற்ற மாதாந்தப் பத்திரிகை) காரியாலத்திற்குத் தினந்தோறும் வந்து அங்கு மாட்டப் பெற்றிருந்த பூபதி அவர்களுடைய திருவுருப்படத்தைக் கண்டு வணங்கிச் செல்லுவதே வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். சில தினங்களில் நறுமணமலர் தூவி வழிபட்டும் செல்வார்கள். அவர்கள் பூபதிகளை நேரிற் காணவேண்டுமென்று பெரும் விருப்பமுடையவர்களாயிருந்தார்கள். பிறகு ஒருமுறை பூபதிகளை நேரிற்கண்டு ஆனந்தபரவசமுற்று பயபக்தியுடன் வணங்கி அன்பு செலுத்தி வரலாயினர். சென்னைக்குப் பூபதிகள் வரும்பொழுதெல்லாம் நேரிற்கண்டு தரிசனானந்தம் அடைவதும், சென்னையில் பூபதிகள் மைலாப்பூர் முதலிய வேறு இடங்களுக்குச் சென்றிருந்தாலும் அங்கெல்லாம் தேடிச்சென்று கண்டு வணங்கி மகிழ்வதுமா யிருந்தார்கள்.

# பூபதிகளுக்கு வடலூர் இராமலிங்க சுவாமிகள் உருவந்தோன்றி அமுதருந்தச் செய்தது.

---

பூபதி அவர்களும், ஆபரணதாரி மாணிக்கவாசகம் என்பவரும் மாயவரத்திலிருந்து ரயிலேறி திருவாரூர் வந்திறங்கி, அடியார்களை உபசரிக்கும் விஜயபுரம் நோட்டில் டாக்டர் S. V. S. அண்ணாமலை வைத்தியர் கடையில் வழக்கம் போல் தங்கியிருந்து, அவரால் உபசரிக்கப் பெற்று, இரவு சுமார் 10 நாழிகைக்கு புலிவலம் சென்று, சாப்பாட்டு ஞாபகமாக யாருக்கும் தொந்தரவு கொடுக்கக் கூடாதென்று, நித்திரைக்காக சண்முகவிலாச மடாலயத்தின் சாவியை குருக்களிடமிருந்து வாங்கித்திறந்து சயனித்து சிறிது நித்திரை செய்தார்கள். அந்த மடத்தின் அதிபராகிய தனுக்கோடி சுவாமியின் இல்லத்திற்கு, புலிவலம் பொ. மு. மாணிக்கம் பிள்ளை என்பவர் வந்து, பூபதி அவர்களும் மற்றொருவருமாக நமது மடாலயத்தில் வந்து தங்கியிருக்கிறார்கள்! அவர்களுக்கு அமுது செய்விக்க வேண்டாமா? என்று கூறக்கேட்டு, தனுக்கோடி சுவாமிகள் உடனே அமுது தயார் செய்து எடுத்து வந்து கொண்டிருந்தார். அதே சமயத்தில் பூபதி அவர்களை, இராமலிங்க சுவாமிகளைப் போலொரு உருவந் தோன்றித் தட்டியெழுப்பி அமுது கொண்டு வந்திருக்கிறான் உண்ணுக என்று கூறியதாகச் சொப்பனங்கண்டு எழுந்து, என்ன இவ்வாறு கனவு கண்டோமே! என்பதை நினைந்து மாணிக்கவாசகத்தை எழுப்பிப் பேசிக்கொண்டிருக்கையில், தனுக்கோடி சுவாமிகள் சாப்பாட்டுடன் வந்து அமுதருந்துமாறு வேண்டினார்கள். நாங்கள் வந்தது எப்படி உங்களுக்குத் தெரியுமென்று பூபதி அவர்கள் தனுக்கோடி சுவாமியைக் கேட்க, அவர் மாணிக்கம் பிள்ளை வந்து தாங்கள் சொன்னதாகச் சொல்லிப் போனார் என்றுகூறி அமுது அருந்தச் செய்தார். பூபதி அவர்கள் அவ்வாறு நாம் யாரிடமும் கூறவில்லையே என்று சந்தேகித்து, மறுநாள் மாணிக்கம்பிள்ளையைவிசாரிக்க, அவர்யானென்றுமறியேன்,

தெரியாதான உவரிலுமில்லை, இன்னாரென்பதும் என்று கூறினார். எல்லோரும் பேராச்சரியமுற்று ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளிடத்துப் பூபதி அவர்களுக்குள்ள பேரன்பே காரணமென்று கூறி வியந்தார்கள்.

இவ் விஷயத்தைப்பற்றியும், மேலே குறிப்பிட்ட வீராயி மலே சுவாமிகளைக்கண்ட விஷயத்தைப்பற்றியும் பூபதிகள் தாங்கள் இயற்றிய இராமலிங்க தியானம் என்ற நூலின் 7-வது பாடலில் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

அப்பாடல் வருமாறு:—

திருவிடை மருதூர்த் திருப்புவனத்தில்
திகழ்சதா சிவசுவா மிகள்பால்
மருவியான் றியங்கி நினைக்கஅவ் வையம்
மாநலம் அருளிய மணியே!
ஒருபக லிரவில் மடலளித் தடிசி
யுதவிய கருணைவா ரிதியே
பெருமைசேர் நினது புகழ்நில வுலகிற்
பீடுற நீடுவா ழியவே.

## பூபதிகளின் சூக்குமசரீர நிகழ்ச்சிகள்.

கொழும்பு-சோனகத்தெருவிலுள்ள ஆதம் என்பவர், பூபதிகள் எழுதிய 'வேதாந்த பாஸ்கரன்' முதலான நூற்களை வாங்கி வாசித்துப் பார்த்துவிட்டு, "இவருக்குத் தமிழில் மட்டுமே பாண்டித்யம் இருக்கும்போல் தோன்றுகிறது, நமது மார்க்க சம்பந்தமான குர்ஆன் முதலியவைகளிலிருந்து அதிகமாக ஒன்றுந் தெரியாதும்போலும்" என்று சற்று குறைவாக எண்ணினாராம். ஒருநாளிரவு அவர் கனவில் பூபதிகள் உருவந் தோன்றி, "ஓய் ஆதமே! யூத்தில் ஹிக்மத்த மன்யஷாஉ என்பதன் கருத்தை நீர் அறிவீரா?" என்று கேட்க, அவர் நடுநடுங்கி விழிப்புற்று, தான் அவ்வாறு நினைத்தது தவறென்று சிந்தித்துக்கொண்டு

சகிமா பொமனராகவும், அவ்வாறு நினைத்ததை மன்னிக்குமாறு யாசகமும் அவர் பூபதிகளுக்கு கடிதமெழுதியிருந்தார்.

இரங்கூன் சூராத்தி பாபா பஜாரில் வர்த்தகம் செய்யும் அடியக்கமங்கலம் சி. நெ. அப்துர் ரஹீம் சாஹிபு என்பவர் ஆத்மவிசாரமுற்று, எந்த நூற்களைப் படித்துணரலாம்? யாரைக் குருவாக அடையலாம்? என்று சிந்தித்துக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு நாள் இரவு அவர் கனவில் ஒரு பெரியவர் தோன்றி, "மகனே! நீ திருவாரூர் ஞானபூபதிகள் எழுதியுள்ள 'வேதாந்த பாஸ்கரன்' என்ற நூலைத் தருவித்துப்பார்" என்று கூற, அதன்படியே பூபதிகளுக்குக் கடிதமெழுதி, வேதாந்த பாஸ்கரன் புத்தகத்தைத் தருவித்து படித்துணர்ந்தார். பின்னொருசமயம் ஷை அப்துர் ரஹீம் சாஹிபு இரங்கூனிலிருந்து தம் சுய ஊராகிய அடியக்கமங்கலத்திற்கு வந்தபொழுது, திருவாரூருக்கு வந்து பூபதிகளைக் கண்டு, நடந்த விஷயங்களைக் கூறி அளவளாவிச் சென்றார்.

திருவாரூருக்குத் தென்பால் திருநாட்டியத்தான்குடி ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கிலுள்ள சேந்தன்குடியில் வசிக்கும் அருணாசலம் பிள்ளை என்பவர், எவ்வளவு பெரிய மகான்களாயிருந்தாலும் நம்பாதவர். கும்பிடுகிற கையிலுங்கூட குறளியை வைத்துக்கொண்டு கும்பிடுகிறவர். ஆனால், சுப்பிரமணியக் கடவுளையே குலதெய்வமாகக்கொண்டவர். அவர் பூபதி அவர்களை, அவரையானந்த சாமியாருடன் ஏற்கனவே கண்டு தரிசித்துள்ளார். அவரையானந்தர், பூபதிகளைக் கொண்டாடுவதைப் பார்த்து வியப்புற்று, பூபதிகள் இஸ்லாமானவராயிற்றே! அவர்களை, சைவனாகிய நாம் வணங்குவது முறையா! என்ற ஐயப்பாடுடையவராயிருந்தார். பின்னர் அவர் எட்டுகுடி முதலிய சுப்பிரமணிய ஸ்தலங்களுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்யும்போது ஒரு சோதி கிளம்ப, அந்த சோதிக்குள் பூபதிகளின்
நவாம் இந்த ரூபந்தான் நான் என் றதே

அருணாசலம் பிள்ளை அஞ்சிப் பயந்து, பூபதிகளிடம் வந்து வணங்கி, அன்பு செலுத்தி வரலாயினர். இவ்வாறிருக்கு நாளில், பூபதிகளைத் தமது இல்லத்திற்கு வந்து ஒருவேளை அமுது புசிக்கவேண்டுமென்று பல நாளாகக் கேட்டு வந்தார். ஒருநாள் பூபதிகள் அமுதுண்ண வருவதாகக் கூறவே, அருணாசலம் பிள்ளை தமது இல்லத்திற்குச்சென்று பகல் போசனம் தயார்செய்ய ஏற்பாடு செய்து, ரயிலுக்குப் பூபதிகளை அழைத்துவர வண்டியும் அனுப்பிவிட்டு எதிர் பார்த்திருந்தார். மாலை 5 மணி வரையிலும் பூபதிகள் வரவில்லை, மாலை 6 மணி சுமாருக்கு பூபதிகள் வந்ததாகப் பார்த்து எதிர்கொண்டழைத்துச் சென்று, கால் கை சுத்தம் செய்ய சலமுங் கொடுத்து, ஆசனத்தில் அமர்த்திவிட்டு, உள்ளே சென்று அமுது படைக்கும்படி சொல்லிவிட்டு வந்து பூபதிகளைப் பார்க்கக் காணாது, அவ்வூர் முழுதும் தோட்டந் துறவுகளெல்லாம் தேடியும் காணப்பெறாமை யால் திகைப்புற்று மனம் வருந்தி வீட்டிலுள்ளாரோடு தாமும் உண்ணாது அன்றிரவைக் கழித்து, மறுநாள் எப்பொழுது பொழுதுவிடியும் விடியுமென்று காத்திருந்து, பொழுது விடிந்தவுடன் திருவாரூர் வந்து பூபதிகளைக் கண்டு அடியற்ற மரம்போல் விழுந்து, முதல்நாள் நடந்த விஷயங்களைத் தெரிவித்து அஞ்சி வணங்கி நின்றார். பூபதி கள் எல்லாம் திருவருட் செயலென்று சமாதானம் கூறி யனுப்பினர்கள். இவ்வாறு சந்தர்ப்பம்போல் பல சூட்சும நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருக்கின்றன.

## கொழும்பிலும் அன்பு மார்க்க சபையின் அபிவிருத்தி.

K. M. ஜமால் வரைவது.

அன்பு மார்க்க சங்கத்தைப் பற்றி, ஞானபூபதி அவர் கள், வெகு நீண்ட நாட்களாகச் செய்து வந்த பெருமுயற்சி களை பல பத்திரிகைகளிலும் வெளி வந்ததைக் கண்டும், கேட்டறிந்தும் பூபதிகளை நேரில் கண்டறியாத கொழும்பி

ளுள்ள உத்தமோத்தமரான அன்பர் M. S. M. புஹாரி அவர்களுடைய மனதிலே பிரதிபலிக்கவும், அன்பர் அலி ஹுசைன் அவர்களும் அங்கு சென்று தூண்டவும், கொழும்பு கிராண்ட் பாஸ் ரோடு 180/121 நெ. கட்டிடத்தில் அன்புமார்க்க சங்கத்தின் கிளையொன்றை 9—1—38ல் ஸ்தாபிதம் செய்தார்கள். அச் சபையானது தீவிரமாக முன்னேற்ற மடைந்து மக்களுக்குப் பயனளித்து வருகின்றது.

சங்கத்தில் பெரிய கல்விமான்களும், பெரிய உத்தியோகஸ்தர்களும், எளைய அறிவால் மிக்க ஆண்களும் பெண்களும் ஏராளமாக அங்கத்தினராகச் சேர்ந்து பயன் பெற்று வருகின்றார்கள்.

சங்கத்தின் ஆதரவில் பள்ளிக்கூடம், வைத்தியசாலை ஸ்தாபிக்கப் பெற்றிருக்கின்றது; வாரந்தோறும் அரிய பிரசங்கங்கள் நடைபெற்று வருகின்றது. பிரசங்கங்களை ரேடியோ மூலமாகவும், தூரத்திலுள்ளாரும் கேட்டுப் பயனடையுமபடியான வசதிகளும் ஏற்படுத்தி வருகின்றார்கள். சங்கத்தில் அவ்வப்பொழுது நிகழும் நிகழ்ச்சிகளைப் பற்றிக் கொழும்பிலுள்ள வீரகேசரி, தினகரன் முதலான சிறப்புடைய பெரும் பத்திரிகைகளின் மூலமாக வெளிவருவதும் உலகறிந்த விஷயம்.

"அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ்" என்றபடி பூபதி அவர்களுடைய மனத்திலே தோன்றிய இவ் அன்பு மார்க்க சங்கத்தின் கொள்கைகளானது தங்கு தடையின்றி கொழும்பிலுள்ள அன்பர்களையுங் கவர்ந்து மக்களுள்ளத்தைப் பரிசுத்தப் படுத்தி அன்புமய மாக்கி ஆனந்தம் ளிவித்து வருவது பெருவியப்பன்றோ!

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிசசுக் கொண்டாள்
தன்னை மறந்தாள் தனது நாமங் கெட்டாள்"

என்றவாறு ஞான பூபதிகளைப்பற்றி அறிந்த மாத்திரத்திலே அன்பு பூண்டு தாங்களும் அவர்களாய் இரண்டற்ற மனமுடையவர்களாய்த் தன்னை மறந்து, ஞானபூபதி அவர்களால் நிறுவியுள்ள கமுதி அநுதாட்சக ஆலயத்தைத் தமதாகப் பாவித்தும், கமுதி மாநகரையே தமது பதியாக வரைந்து கொண்டும், பல்லாற்றானும் உதவி புரிந்து வரும் இவர்களன்றோ உத்தம மாணவர்கள்.

ஞானபூபதி அவர்களின் உள்ளக் கிடக்கையாம் அன்பு மார்க்க சங்கம் பரவுவதற்குப் பெருந்துணையாய்க் கொழும்பிலிருந்து தொண்டாற்றிவரும் பேரன்பர் M. S. M. புஹாரி அவர்களுடைய உயர்குணமும் அருஞ்செயலும் அளவிடற்கரியதன்றோ? இவர்களுடன் ஒத்துழைத்துச் சங்கம் பரவுமாறு உரிய காலாகாலத்தில் அரியண செய்தும் பத்திரிகைகளுக்கும் சங்க நிகழ்ச்சிகளை அவ்வப்போது விரைந்து வரைந்து பலருள்ளத்தையும் பரவசப் படுத்தும் அலி ஹுசைன் அவர்களுடைய சேவையும் போற்றற்குரியதாகும்.

இம்மட்டோ, ௸ சங்கத்தின் ஆதரவில் ஸ்ரீ குரு ஞானபூபதி அவர்களின் 52-வது ஜனனதின விழா 24-4-38 மாலை 4 மணிக்குக் கொழும்பு மேட்டுத் தெருவிலுள்ள விவேகானந்த சபை மண்டபத்தில் கீழ்க்கண்ட அறிக்கைப் பத்திரத்திற் கண்டபடி வெகு சிறப்பாகக் கொண்டாடிக் களிப்புற்றார்கள். அறிக்கைப் பத்திரம் பின்வருமாறு:—

# ANBUMARKKA SANGAM.

( THE PATH OF LOVE ASSOCIATION.) COLOMBO.

---

*Under the auspices of the Above Association A Public Meeting will be held to celebrate the*

52ND BIRTHDAY OF HIS HOLINESS

## KARUNAI ANANDA GNANA PUPATHIGAL

AT

**VIVEKANANDA SOCIETY HALL, HILL STREET, COLOMBO.**

*on Sunday the 24th April 1938 at 4-30 p. m.*

REV. FRANCIS KINGSBURY B. A.

has kindly Consented to Preside and the following will deliver lectures on that occasion.

REV. VEN: DR. P. VAJIRANANA THERA (PH. D. CANTAB).

Dr. T. Nallainathan M.R.C.S. *(Eng)*; L.R.C.P. *(Lond.)*;
H. Nelliah B. A. *(Editor "Virakesari)*
Al-Alim N. D. Abdurrazzack *(Jamali)*
G. M. Ali Hussain.
P. K. Madhavanasan *(Editor "Dharmabhadan")*
V. M. Shamsudeen. *(Journalist)*
And other Leaders Also will Take Part in The Celebration.

**ALL ARE CORDIALLY INVITED,**

20—4—38. *Hony. Secretaries.*

நாடெங்கும் அன்புமார்க்க சங்கத்தாபிதர்
மாக்ஷிமை தங்கிய வள்ளலார் அருட்குரு
**கருணையானந்த ஞானபூபதிகளின்**
**52-ம் ஆண்டு**

கொழும்பு அன்புமார்க்க சங்கத்தின் ஆதரவில்,
**24—4—38** ஞாயிறு மாலை **4-30** மணிக்கு
கொழும்பு மேட்டுத்தெருவிலுள்ள விவேகானந்த சபை மண்டபத்தில்,
இயற்றமிழ் போதகாசிரியர் கலைமாணி
சங்கை தங்கிய பிரான்ஸிஸ் கிங்ஸ்பரி தேசிகர் B. A.
அவர்கள் தலைமையின்கீழ் ஒரு பொதுக்கூட்டம் நடைபெறும்.
அதுசமயம் அன்பர்களான

உயர்திரு டாக்டர் T. நல்லைநாதன் M. R. C. S. (Eng); L. R. C. P. (Lon); அவர்கள்
" "வீரகேசரி" ஆசிரியர் H. நெல்லையா B. A. "
" அல் ஆலிம் N. D. அப்துர் ரஸ்ஸாக்கு (ஜமாலி) அவர்கள்
" சங்கைதங்கிய Ven: Dr. P. வஜிரஞான தேரர (Ph. D. Cantab). அவர்கள்
" G. M. அலிஹுஸைன் "
" "தர்மபடன்" ஆசிரியர் P. K. மாதவதாசன் "
" V. M. ஷம்சுத்தீன் (ஆசிரியர்) "

மற்றும் அறிஞர் பலரும் பிரசங்கஞ் செய்வார்கள்.
பல அரசியல் தலைவர்களும், சமயத்தலைவர்களும் கொண்டாட்டத்தில் கலந்துகொள்வார்கள்.
எல்லா சகோதர சகோதரிகளும் விஜயம் செய்ய வேண்டுகிறோம்.

20—4—1938. கௌரவ காரியதரிசிகள்.

இவ்வாறெல்லாம் ஞானபூபதிகள் அவர்களுடைய பெரு முயற்சியானது என்றும் எங்கும் நிலைத்து நின்று மக்களுக்குப் பயனளிக்கப் பெறுவதாகுக! பூபதி அவர்களுடைய சரித்திரக் குறிப்புக்களானது அவர்களுடைய 52-வது வயது பூர்த்தி விழாவுடன் ஒருவாறு வரையப் பெற்றிருக்கிறது.

இவ்வாறாகப் பல மக்களும் பசிப்பிணியும் உடற்பிணியும் நீங்கப்பெற்று அறிவுச்சுடர் கண்டு பயன் பெற்றுப் பல கோடிமக்களும் தங்கள் அன்புமார்க்க சங்கத்தாலும் அனாதரட்சக ஆலயத்தாலும் பயன் பெற்று வருவது கண்டு பூபதி அவர்கள் பெருமகிழ்ச்சி யடைந்து அன்னவர்களுக்கு பூரண ஆசீர்வாதம் அளித்தார்கள்.

அருட்கருணாநிதி ஆண்டவன் கருணையால் நம் அனைவர்க்கும் நித்தியானந்த மங்களம் உண்டாவதாக! அரோக திடகாத்திர அஷ்ட ஐஸ்வரிய ஆத்ம ஞானம் பிரகாசிப்பதாக என்பதே! சுபம்! சுபம்!!

**புலவர்கள் நாயகம் வாழ்க!**

**பூபதி நாயகம் வாழ்க!**

ஞானபூபதிகள் சரித்திரச் சுருக்கம் முற்றிற்று



கருணாநிதி (பில்டிங்ஸ்) பிரஸ், விஜயபுரம் 38

கழுதி கண்மாய்க்கரையில் அடங்கி விளங்கும்
முசாபர் சாஹிபு அவுலியா அவர்கள் பேரில்
கழுதி மு. கா. நாகலிங்கம் ஆச்சாரியார் அவர்கள்
தோத்திரம் செய்வதற்காக கேட்டுக்கொள்ள
பெருநாழ் புலவர்கள் நாயகம் அவர்கள்
திருவாய் மலர்ந்தருளியது.

விருத்தம்.

விற்பன விவேகியர்க ளுடனே பேசும்
வேளையிலும் வித்வசன ருடனே கல்வி
கற்பதுடன் தொழில்கள்பல வியற்றும் போதும்
கனகரத்ன சோதிமய மாயென் கண்முன்
அற்பகலாய் நனவினிலுங் கனவி லுங்கண்
டானந்தித் திருப்பதுமற் றியாதோ வென்னில்
தற்பரமாய் விளங்கியமெய்ஞ் ஞானிநம்மு
சாபரொலி பாததரி சனங்கள் தானே.

ஆசிரிய விருத்தம்.

செல்வஞ் சிறந்த*கம லாபுரியில் நல்விளைவு
செஞ்சாலி மிஞ்சநிறையுஞ்
சீதள மிகுந்தபுனல் மோதியலை மணிகொழித்
திடுகமல வாவியருகே
செண்பக மரங்களென நண்பகல டைந்தவர்வ
சிக்கச் சுகந்தமுடனே
தென்றலும் விளங்கமலர் கொண்டலும் வளைகையா
தெய்வீக கற்பகமெனக்

* கமலாபுரி என்பது கமுதி.

பூபதி அவர்கள் எழுதி வெளியிட்ட நூற்கள்.

1 வேதாந்த பாஸ்கரன்
2 ஞானக் களஞ்சியம்
3 ஞானயோக ரகசியம்
4 திருக்குறள் உரை
5 சர்வமத சீவகாருண்யம்
6 **Straight way to wisdom (English)**
7 அன்பே கடவுள்
8 அஷ்டாங்க யோகம்
9 யோக ரகசியம்
10 ரூஹுல் இஸ்லாம்
11 தமிழ் சுபுஹான மௌலிது
12 தௌஹீதுக் கண்ணாடி
13 ஆனந்த லெட்சுமி (ஞான காவல்)
14 சங்கீத லெட்சுமி
15 ஆனந்த சாகரம்
16 எனது குருநாதர்
17 ஞான நேர்வழி
18 நோயணுகா விதி
19 ஆத்மசக்தி
20 தீன்மணிக் கீதம்
21 தோத்திரப்பாமாலை
22 தோத்திரமஞ்சரி
23 கந்தப்புகழ்
24 திருப்பாவணி
25 முருகப்புகழ்
26 தெய்வப்புகழ்
27 காவடிக்காட்சி
28 பக்திரசக் கீதம் 3 பாகங்கள்
29 முருகர் தியானம்
30 சாந்தி வாக்கியம்
31 பொன் மொழிகள்
32 கடவுள் காட்சி

மனமே நீ அசட்டையால் அதிர்ஷ்டத்தை விட்டுவிடாதே !

அருட்செல்வம் வருவது ஆயுளில் ஒரு முறை அக்கணமே அதைக் கைக்கொள்ளல்வேண்டும்!

பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது (அருபற்றி)

# "ஞான யோகம்!"

என்றால் என்ன என்பதை பூரணமாக அறிந்திருக்கிறாயா?

உலகப் பொருள்களை நீ! எவ்வளவு வாரி வாரிக் கட்டினாலும் மரணாவஸ்தையில் "சட்டி சுட்டது, கை விட்டது" என்று போட்டுவிட்டு மரணமென்னும் சுங்கச்சாவடி வழியாகத்தான் நுழைந்து போகவேண்டும். வேறு வழியே கிடையாது ( உஷார் ! )

ஆண்டவனுக்கு ... ... ...ரூபா
லஞ்சம்கொடுத்து சுவர்க்கம் அடையலாம்
என்று நினைத்திருக்கிறாயா ?
ஐயோ! மறதியால் வழிகெட்டுப்போகாதே!
உனக்கு நல்ல வழியைப் போதிப்பது எது ? அது !
ஸ்ரீகுரு ஞானபூபதிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான யோக ரகசியம்

கோடி லெட்சம் புத்தகங்களை வாசித்தாலும்
இந்நூலுக்கு ஈடாகமாட்டாது. ரூ 3.

மௌலானா M. A. நாவலர் & சன்ஸ்,
"பூபதி" புத்தக வியாபாரிகள்,
புரம் P. O. திருவாரூர் S. I.

அல்லாஹ் ரசூலைப் பின்பற்றுவதும்
அர்த்தம் விளங்கிப் புகழ்வதும்
எல்லோருக்கும் கடமை.

---

அரபி சுபுஹான மௌலிது
ஒரு பக்கத்திலும்
அதே பைத்து ராகத்தில்
தமிழ் சுபுஹான மௌலிது
மற்றொரு பக்கத்திலும்
புதிதாக அச்சிடப்பெற்றது.

தமிழிலே மௌலிதும் துவாவும் ஓதி
முடித்துவிடலாம் என்பது
பல உலமாக்களின் கருத்து.

மனப்பாடம் செய்து ஓதுங்கள் !

நபி முஹம்மது (ஸல்) அவர்கள் பேரால்
வாங்கி ஹதியாக் கொடுங்கள் !!

திருவாரூர் மௌலானா
**ஞான்பூபதிகள் இயற்றியது.**

உயர்ந்த பதிப்பு அழகிய பைண்டு ரூ. 1.

மௌலானா M. A. நாவலர் அண்டு சன்ஸ்,
பூபதிகள் நூற்பதிப்புக் கழகம்,
விஜயபுரம்—தி[illegible]ர்.



(ஸ்ரீ குரு ஞானபூபதிகள் ஜனனமெய்தியது *(18—4—1887)*
*ஹிஜ்றி 1304*-ஹு *றஜபு*-மீ *பிறை 23*
சர்வசித்து-ஹு சித்திரை-மீ 7உ சோமவாரம்

தியுற்றது *(17—7—1939)* *ஹிஜ்றி 1358*-ஹு ஜமாத்துலவ்வல்-மீ